தூயோன் செயலிதெனிற் றெல்புலியிற் போந்திடினத்
தீயோர் சிறைபுரிதந் திண்ணமது—தீயோர்தி
புங்கவர்தம் மோடியான் போகிலனீ சற்காண்பா
னுங்கமய மோர்வனென்று னுற்று. (கூ)

அந்நந்தி தேவ னதுகேளா வாய்ந்தபொரு
மின்ன லிகந்தே யிவணீவீர்—துன்னுமென
வாங்கா ரருள்செய்ய வண்டரொடு மன்னவனோர்
பாங்கார்ந் திருந்தான் பரிந்து. (க0)

இந்திரன் கயிலைசெல்படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா அருகசு.

---

# அசமுகிப் படலம்.

---

ஆழிவனத் தாரரிமுன் னண்டரெலாம் போற்றிடவோ
ரூழிவனத் தோர்கலனு வோங்குபுகழ்க்—காழிவனத்
தெண்ணமுற்றிக் கேள்வருவா னீர்வளைபன் னுன்னேற்பா
ணண்ணிலனெந் துண்மெலிந்தா னைந்து. (க)

மன்னன் பிரிவுன்னி மாதிரங்கி நோற்குமெல்லை
யுன்னரும்வெம் பாவமுரு வுற்றதொக்கு—மன்னிறத்தள்
சொற்கிளையாள் சூழலின்சட் சூர்க்கிளையா டென்னலர்செய்
மற்கிளையாள் வந்தாண் மகிழ்ந்து. (உ)

காய்கின்ற காமக் கனறணிப்பான் காளையர்வெற்
பேய்கின்ற தோளணைவா ளோர்முகிலின்—வாய்குரலாள்
பொற்பில்லாள் பூணும் புகழில்லா ளணில்லாள்
கற்பில்லா ளற்பில்லாள் காண். (ந)

உலக மனைத்து மொருநா ழிகையி
லுலவிவரு மொய்ம்புளா ளுன்னு—னுலமுள்ளா
ணன்மையுளா டமையுளா ளுற்றமுளாள் சீற்றமுளாள்
வன்மையுளா டயவுண மாது. (ச)

சீயமுகன் சூரகனோர் திண்டிறலாண் மால்வரையொப்
பாயமெய்யாள் பொய்யுடையா ளாடகன்முன்—மேயவொரு
சிங்கமன்னுள் கூற்றடக்குந் திண்மையுளாள் பெண்மையுளாண்
மங்கு லெனவுலவு வாள். (ரு)

கூடு மவுணர் குலத்தினுக்குத் தீயினையே
நாடு மசமுகியா நாமத்தா—ணீடுறுகான்
பொங்கரொழி னோக்கிமிகப் பொற்புளதவ் வான்பொழிலே
யிங்குளதன் றென்றா ளினிது.

மன்மலர்ப்பூங் காவின் வனப்பை யசமுகிதான்
றன்முகிக்குக் காட்டிக் சொலிக்காண்ப—லென்றே
மிசையெட்டும் வான்பொழிலின் மேவுவார் தம்மைத்
திசையெட்டுந் தேடலுற்றா டோர்ந்து. (எ)

அதுகண்டே யைய னவிர்படைமா வீரன்
முதமைம் முகத்தாடான் முன்னி—யெதுகண்
டிவண்வருவ தோர்ந்ததன்மே லேற்பசெய்வே னென்னா
வவண்மறைந்து நின்றா னருகு. (அ)

அத்துரும மெங்கு மலைந்துதுரு வித்தவஞ்செய்
வித்துரும வாய்ச்சசிதான் மேவுமிட—மைத்துருமஞ்
சேண்குராலாள் கண்டா ளிவளிந் திராணியஞ்சிச்
சேண்கரந்து வந்தனளித் தேத்து. (கூ)

திங்களின்பே ராளையெங்குந் தேடியுங்காண் கில்லமெனச்
சிங்கமெனச் சீறித் திரும்பவுஞ்சூ—ரிங்கிருப்ப
தோராம லொற்றரையங் குய்த்தா னவரின்னுந்
தேரா ரிருக்குந் திசை. (கo)

மின்னே யிடையிவளை வேந்தன் மகிழ்பூப்ப
வின்னே கொடுபோ யியம்புமவன்—முன்னே
விடுவ னெனக்குறித்தாண் மேவவுணர் செய்யுங்
கொடுவினைக்கோர் வித்தன்னாள் கூர்ந்து. (கக)

பாகின் மொழியாளைப் பண்ணவர்கோன் றான்றனிவைத்
தேகினன்காப் பாரெவரு மீங்கிலைப்போ—தாகுமுனங்
கொண்டே குவனென்னாக் கொண்டலிழிந் தேவரல்போற்
றண்டேம் பொழில்வந்தா டான். (கஉ)

அத்தன் முகியோ டசமுகிவெற் பென்னவர
மெய்த்தவஞ்செய் மின்காணா வெந்துளனோந்—தெய்த்திவடான்
வஞ்சிபோல் வாளெவளோ வாய்மை யறியனென்னா
வஞ்சி யெழுந்தா ளணங்கு. (கந)

எழுவா டனைநில் லெனச்சொலிநே ரெய்தி
வழுவிலயி ராணிநின் வாய்மன்—செழுநலனை
யார வருந்தவமே யண்டமெலா மாள்கின்ற
சூரபன்மன் செய்கின்றான் சூழ்ந்து. (கச)

அண்டமெட்டோ டாயிரஞ்சூ ழாள்வனவோ ரண்டத்து
ளண்டமட்டு முன்கேள்வ னுள்வனிறை—யண்டவத்திற்
பெற்ற வரமும் பிறவு மறிந்திலையோ
ழ்ற்றளிர்போல் வாய்நீ நயந்து. (கரு)

கண்டனைய வின்சொல்லாய் காமருசூர் மேல்விழைவு
கொண்டணையி னிற்கோர் குறைவுளதோ—பண்டவமு
மெய்வருந்தச் செய்வதென்கொன் மேவுபொருள் யாவுநின்
கைவருந்தப் பாதிதுநீ காண். (கசு)

மின்னவா மெல்லிடையாய் மேவின்ல முண்டிலையே
லென்னவா மின்னலமெவ் வெப்பொருளு—நின்னதுன்கேண்
மன்னேவல் செய்சூர் மகிழ்மடவா ரெல்லாரு
நின்னேவல் செய்வார் நிதம். (கஎ)

பஞ்சூர் பதுமப் பதப்பதும கோமளையை
யஞ்சூர் வெறுத்திடுவ னையமிலை—மஞ்சூரா
வுன்பி னினைமகிழ்வ னாணங்கே நீவிரும்பி
யென்பின் வருதியென்று ளீண்டு. (கஅ)

அசமுகிப்படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா அறுசு.

---

# இந்திராணிமறுதலைப் படலம்.

---

மையா னனத்தாள்சொல் வன்னியின்வேல் போனுழையக்
கையாற் செவிபொத்திக் காரிகைகார்—மெய்யாளே
யேடிநீ சொற்றவுள்வா ரெய்துநர கென்னினிற்காங்
கேடினைத்தென் பாரார் கிளர்ந்து. (க)

சுருதியுணர் காசிபன்றன் றோகைநீ தீய
கருதிவெய்யோ ரென்னக் கரைந்தாய்—தருமமுமே
நோக்கிலைநோன் போடுகற்பு நோக்கிலையே லாம்பிறப்ப
நோக்கிலைநன் றாக நுனித்து. (உ)

மின்னுவளன் வன்பாயுண் மேவார்க் கிதுதோன்று
மன்னுவை நீதுணியன் மாண்பிலவேம்—தென்னிறைக்கே
யல்லா தெவரிடத்து மாசைவையேன் கற்பினேன்
சொல்லாது சொன்னாய் துணிந்து. (ங)

கொடுமைசெய்து வாழ்வார் கொடுநரகில் வீழ்வார்
கெடுதியிலையர் தீமை கெடமேம்—படுவரா
லின்பமொடு துன்பமிவை யார்க்கும் பொதுவன்றே
வென்பகர்ந்தாய் நீதியிலா யீங்கு (௪)

தீநெறிய ளாதலினுற் சிந்தியா தீதுரைத்தாய்
வானெறிய தன்று மறத்திய லீ—தீனமெனே
யெய்தற்பா லார்யா ரெவர்வரினும் காப்பநம்பர்
வெய்தி னகறியென்றாள் வேர்த்து. (௫)

சுந்தரிசொற் கேளாத் துருவைமுகி பற்கறியாச்
செந்தழனீள் கண்ணின்று சிந்தவே—நந்தவிதழ்
தின்றிருமாக் கைபுடையாச் செல்லுருமி னார்ப்புற்று
நன்றுநன்றென் றாள்கனன்று நக்கு. (௬)

உன்னுசசி சொல்லுறுதி யூற்றஞ்செப் பில்லவட்
கென்னசொலி னும்பேதைக் கேறுமோ—வன்னதுபோல்
வெந்துயரங் கொண்டு வெறிமுகத்தாள் கற்புடைய
சுந்தரியை நோக்கிச் சொலும். (௭)

நல்லசொற்றேன் மாறுரைத்தாய் நங்கையட்டு நுங்குவேன்
வெல்லண்ணற் காகவிட்டேன் மேவியென்பின்—செல்லலையே
லீர்த்தே குவனின்னை யீதுண்மை யாகுமென்றாள்
கார்த்தேக வல்லரக்கி காய்ந்து. (௮)

மூவர் தடைபுரிந்து முன்னின்று போர்செயினு
மேவர்வரி னும்விடேன் யானென்னாத்—தேவிகரங்
கையினாற் பற்றிக் கடிதீர்த்துப் போயினு
ளையகோ வென்றா ளணங்கு. (௯)

தீயவன்னு ளுண்டெதலுஞ் சிந்தா குலமெய்தி
மேய வுணர்வுபோய் வீந்தவள்போ—லாயவச
முற்றிருவேற் கண்ணீ ருறையுகவே தேம்பினாள்
பொற்றிருவே யன்னாள் புலர்ந்து. (௧௦)

பூசைவா யுற்ற பொருவிலெழிற் கிள்ளையுந்தென்
னாசையான் பாசமுற்ற வாவியும்போன்—மாசைய
மென்முலையாள் கொண்டேகு மெல்லலை யரற்றினாண்
மின்மகவான் றேவி மெலிந்து. (௧௧)

இந்திராணி மறுதலைப் படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா அ௲௫.

# மகாகாளர் வருபடலம்.

---

ஓலரன்சே யேயோலம் வானவர்கோ வேயோல
மாலவண்ணு வோலமே ரையனே—யோலநந்தாத்
தீரனே யோலமெங்க டெய்வமே யோலமெறுழ்
வீரனே யோலமென்றுண் மின். (௧)

அன்னதுகேட் டைய னடுபடைமா வீரனும்பர்
மன்னவையெல் லாம்வியக்கு மாண்பினன்கை—தன்னிலொளிர்
வாளனென்போ டாரணிவான் வான்பெயரோன் வீரமா
காளனென்போன் வந்தான் கடிது. (௨)

மஞ்சனையான் வந்தரற்று வான்சசியை நோக்கிநங்கை
யஞ்சனீ வாழி யசமுகியாம்—வஞ்சகியைச்
சார்ந்துநினைத் தீண்டு தடக்கையை வாளினு
லீர்ந்துவிடு விப்பனென்று னீங்கு. (௩)

வீரனுரை கேட்டளவின் மெல்லியலாள் செல்வியல்பா
ராருயிரே பெற்று ளசமுகியத்—தீரனைக்கண்
டேவருமென் முன்னில்லா ரீண்டெற் சினந்திகழ்ந்தான்
றேவருளோர் வீரனென்று டேர்ந்து. (௪)

செந்தழற்கண் சிந்தவிதழ் தின்று கறகறெனத்
தந்தங் கறித்தார்த்துச் சாற்றிவனைத்—தொந்தியின்கட்
பெய்துவலி தீர்ப்பனெனுப் பேழ்வா யரக்கிநிற்ப
வெய்தினன்வாள் வீர னெதிர். (௫)

கற்பார் சசியைக் கரவிற் கொடுபடர்வாய்
பொற்பா ரிவளைவிட்டுப் போதியுற்ற—வற்பார்
பிழைபொறுப்ப னீயும் பிழைத்தியென்றுன் வீர
னுழைபொருகண் ணுளைநோக் குற்று. (௬)

உருத்திரந்தக் கூற்றுரைத்தா யுன்னையிவட் போற்றெறன்
றருத்தியிலார் சொன்னு ரவரைத்—தெரித்தியென
வாருலக மூன்றளிக்கு மையன் பணியிதென்பேர்
வீரமா காளனென்றுன் வேள். (௭)

என்ன விவன்மகவா னேவலா னென்றுளத்தி
லுன்னியரி யெற்றெருழுவா னூறுசெய்யான்—மன்னிவனைச்
சிந்திநான் றின்பனெனுச் செங்கையிலார் சூலத்தை
யுந்தினுள் வீர னுரம். (௮)

வருமுனதை வீரன் மாய்த்தூங்கு வாளா
விருதுணியாச் சூலத்தை யீர—வொருமைந்தன்
மேகத்தின் மின்போல் விடுசூல மேவவன்கார்த்
தேகத்தின்பாற் பொழிந்த தீ. (௯)

ஆலந்தோய்த் தூழித்தீ யார்ந்ததுநேர் மைம்முகத்தாள்
சூலந் துணிபடலுந் துன்முகிகைக்—கோலமுறு
சுந்தரியைச் சேர்த்தவடன் சூலங் கொடுவீர
னுந்தரத்தி லுய்த்தா னுருத்து. (௧௦)

ஏகியவம் முத்தலைவே லெண்வீர மாகாள
னாகமிசை மேவுமின்கூ ரார்வசியாற்—பாகமுறக்
கண்டா னதனையவள் கண்டா ளிடையவுளங்
கொண்டா ளெழுந்தாள் குலைந்து. (௧௧)

சென்றாள் கிரிபெயர்த்துச் சீயமன்னான் மேலோச்ச
நின்றான் றடிதலும்வா ணொடிந்த—தொன்றாக்
கருங்கடல்போற் கார்நிறத்தாள் காணக் கறங்கு
பெருங்கடல்போ லார்த்தாள் பெரிது. (௧௨)

வீரமா காளகேள் வேதா முதற்றேவர்
தேரவந்தே யாசிசொலச் சீருலகாள்—சூரனெம்முன்
றோளாரக் கொண்டுய்ப்பேன் றோகையைப்பே தாயுணராய்
வாளா விலக்கினையே வந்து. (௧௩)

தடுத்த றகைமையன்று தாரகன்மாத் தானை
யடுத்துப் பசிக்குமஃ தன்றி—யெடுத்தியா
னின்றனையுன் பேன்றுய்க்கி னீள்பசிதா னீங்கிடா
தென்றுவிட்டேன் போதியென்றா னிங்கு. (௧௪)

கண்டகிசொற் கேட்டளவிற் காளைவசி யாற்சூலந்
துண்டு படவெறிந்தேன் றெட்டநினைப்—பெண்டெனவே
வீக்கலைமின் றேனிவளை விட்டுநீ போதியாற்
போக்கலைகை யென்றான் புரிந்து. (௧௫)

என்றதுகேட் டங்கிவன்வா ளின்றி யிருக்கின்றா
னென்றியம ராற்ற லொழுங்கன்றே—யன்றியுமே
வெல்ல லரிதிவனை மின்சசியைக் கொண்டுவல்லை
செல்லறிட மென்றெணினா டேர்ந்து. (௧௬)

துன்முகிதன் கையுற்ற சுந்தரியைத் தான்பற்றிப்
பொன்மலையின் கோடுகொடு போம்வளிபோல்—வன்மையொடு
துண்டமதி தோற்பத் துலங்குந் துணையெயிற்றுக்
கண்டகிகொண் டேகினளங் கண். (௧௭)

போதலுமே பார்த்தையன் போகலைநின் னில்லென்னாத்
தீதிலான் செங்கரத்தாற் றீயவட—னோதியா
மையைப் பிடித்துடைவாள் வாங்கிமின்னைத் தொட்டநெடுங்
கையைத் துணித்தான் கடிது. (௧௮)

இருள்பிலத்துற் றுரையெடுத் தேவெளிவிட் டாங்கு
வெருள்சசியை வீடுசெய்து மேட—மருண்முகியைத்
தாளினுதை தந்துதள்ளிச் சார்துன் முகிகரமும்
வாளி னரிந்தான் வரன். (௧௯)

மகாகாளர் வருபடலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா ௮௮௪.

---

# அசமுகி சோகப்படலம்.

---

பொன்னங் கழல்வீரன் புல்லவுண மாதர்கை
சின்னம் படவேசே தித்தளவி—றுன்னெய்த்தோ
ராறுபோற் செல்ல வரற்றி விழுந்தனளே
யேறுநீர் போல விரைந்து. (௧)

கெழுவா டுமியக் கிடந்த வரம்பில்
வழுவா டுயர்வாள்பேழ் வாய்விட்—டழுவா
ளெழுவாணின் றையகோ வென்பாண் மலைபோல்
விழுவாள் புரள்வாண் மெலிந்து. (௨)

இந்திரன்றன் தேவிதனை யின்னே பிடித்துவயிற்
செந்தழலுக் கீவனெனச் சென்றிடும்பின்—னொந்து
திகைக்குநன் று நன்றுநந்தஞ் செய்கையீ தென்னா
நகைக்குங் கறிக்கு நகை. (௩)

அற்ற கரத்தை யருதகரத் தாலெடுக்கு
மொற்றும் விழிநீ ருகுக்குங்கம்—மெற்றுமினிச்
சாவதுவே திண்ணமெனுஞ் சாற்றுமெங்க ளண்ணர்முன்
போவதெவ்வா றென்னும் புலர்ந்து. (௪)

பங்கமுற்று மங்கமென்றன் பங்கயநே ரங்கைதனைப்
புங்கவர்கள் போவான் புணர்த்தினரா—லங்கவரைக்
கொன்றுலக மெல்லாங் குலைப்பனென்றுள் சீறியான்
பொன்றுவனேன் முன்னம் புகைந்து. (௫)

பாரு ளுயிரைப் படுத்திடவோ முந்நீரு
ளாரு மழலை யவித்திடவோ—மேருவினைப்
பந்தெனவே யேந்திடவோ பல்லுடுக்கோ ளைக்கழங்கா
வுந்திடவோ வென்னு முருத்து. (௬)

ஆருமஞ்ச வெவ்வா நசமுகிசொல் வீரமொழி
சாருறுவா டின்முகியாந் தையல்கேட்—டோருந்
தருவர் குலத்துதித்துந் தக்கோ ரெனப்போ
யிகுளைமுன் சொல்வா ளெடுத்து. (௭)

உலகமென் செய்யுமா வும்பரென் செய்வ
ரிலகொருவ னூற்கை யிழக்கி—னலகிலா
வண்ட மனைத்து மழிக்கினும்யார் கேட்கவல்லா
ரெண்டருவர் மானே யியம்பு. (அ)

அன்னவை யாவுமுடை யண்ண னினைமுனிவன்
முன்னலைகீ யொன்றுஞ்சூர் முன்னுறப்போ—யின்னவெலா
மாதரவிற் சொல்லினவ னண்டர் தமைமுடிப்பன்
போதறுணி யென்றாள் புரிந்து. (௯)

திக்கன்செய் வேள்வியின்கட் சாரமரர் தானவருண்
மிக்கவர்மெய் யங்கபங்க மேவினரா—னக்கனெழிற்
கானையகத் தார்க்கன்றிக் காயமதிற் காயவடு
வேனையர்க்கு நீங்குமோ வீங்கு. (௧0)

ஆதலினு னங்கைநீ யங்கைநீங் கிற்றென்ன
வோதருமாச் சோகமுத லுன்னலைவெம்—மாதுயர
மோகமுட னின்ப முறைமுறையெல் லாவுயிர்க்கு
மாகுமெனத் தேற்றினு ளாங்கு. (௧௧)

அன்முகிசொற் கேளாத் துருமுகிநன் றென்றெழுந்து
மன்சசியைக் காணூஉ மானவெந்தீ—வன்பினெழ
வெங்கணுளித் தானு மினிப்பிழைப்புண் டாங்கொனுமக்
கெங்கள்ரூ ராளு மிடத்து. (௧௨)

கரந்திடுநின் கேள்வனொடிக் கான்வாழ் நினையும்
புரந்தனில்வாழ் தேவரையும் போயீர்த்—தூரந்தனிற்கொண்
டென்னகரந் தன்னி லிருஞ்சிறையில் வைப்பறிண்ண
மன்னன் செயலால் வலிந்து. (௧௩)

தியங்கு முமையான் சிறைபடுத்தே னென்னிற்
றயங்குலகெ லாம்வென்று தாவா—வயங்கொளுஞ்சூர்
நாடியநற் றங்கையல்ல ளுன்றனமார் புற்றிடினும்
பேடியென்றெ னென்றகன்றாள் பேர்ந்து. (௧௪)

அசமுகிசோகப்படல முற்றிற்று.

ஆ. திருவெண்பா அ௬அ.

# இந்திரன்மீட்சிப் படலம்.

ஆங்ககல நின்ற வடல்வீர மாகாள
னேங்குமயி ராணியைப்பார்த் தோன்னே—யீங்குறைக
வான்புரக்கு மன்னன் வருமளவுந் தீங்கின்றி
நான்புரப்ப னென்றுரைத்தா னன்கு. (க)

போனபின்னர் மாதப் புறவிலொரு பால்வைகிக்
கோனுறுதி பெற்றுவரக் கோதிறவந்—தானிழைத்த
வன்னு ருறுதுயர மங்கயிலைக் கேகிமன்பாற்
சொன்னு னிசைவல்லோன் சூழ்ந்து. (உ)

இன்னன் மொழிகேட் டினைந்துபின்ன ருட்டெளிந்து
மன்னமர ரோடீசன் மாண்புகழ்தான்—பன்னிநந்தி
தேவன் பதமலரைச் சென்னி தனிற்சூடி
மேவன்பிற் சொல்வான் விழைந்து. (ந)

உய்வினையே யுன்னி யுயர்கயிலைக் குற்றனன்முன்
செய்வினையே நாடியருள் செய்கிலன்ம—னைவினையும்
போயின் புறநோற்பான் போகவிடை நல்கென்று
னேயின் றழல்கோ னுனித்து. (ச)

நன்றுபோ மென்னவரு ணந்தியெங்கோன் கூறமனங்
கன்றமர ரோடுங் கழுமலம்போய்—மன்றவனை
மெய்யன்பாற் புல்லியின்சொன் மிக்குரைத்து வீரவினி
யையன்பாற் போதியென்று னங்கு. (ரு)

அன்னமன்னு ரேறுற்குமிடத் தண்மியவள் சோர்வகற்றித்
துன்னு மசமுகிசொல் சூள்வினவி—யென்னசெய்வ
தென்றிற் குரியனுட னேகியண்டர் சூழ்ந்திடப்பொற்
குன்றிற் கரந்திருந்தான் கோ. (சு)

இந்திரன்மீட்சிப்படல முற்றிற்று.

ஆ திருவெண்பா கூ0ச.

# சூரனரசிருக்கைப் படலம்.

இவ்வகைவிண் ணேகந்த விருந்தனன்பின் மைம்முகத்தா
னெவ்வமொடு மன்னகர மெய்திஞ—னவ்வமய
மாவீற் றிருக்கு மகேந்திரத்திற் சூரபன்
மாவீற் றிருந்தான் மகிழ்ந்து. (க)

ஆயிரமாங் கோடியண்டத் தாடகமாப் பித்திகையு
மேயகொடு விண்ணிழிந்த தொல்புவியிற்—பாயொளியிற்
சேயிதழம் போருகத்தோர் செய்தெனவம் பொற்பொதுவோ
ராயிரமா யோசனையே யாம். (௨

இத்தரையார்ந் துள்ளதண்டத் தின்னிடையே யேய்ந்துநிற்கு
மத்தவரை யாவுமெடுத் தம்புயத்தோர்—வைத்தன்ன
வத்தாணி யம்பொற்றா ளாயிரமாங் கோடியுள
வத்தாணி யொன்றவிரு மாங்கு. (௩)

கண்டோர் மனங்கண் கவரோ வியமிலங்க
விண்டோய்செய் வானின் விதானமேற்—கொண்டோங்கு
வெண்ணிலா நித்த நிறைபணியி னிற்பபோற்
கண்ணாடிக ளாங்கவிருங் காண். (௪)

பல்லண்டத் துள்ள பகலைவெந்தீ யில்லுருக்கி
யொல்லவொன்றாக் கித்தவிசா வோங்கிடச்செய்—தெல்லுடுக்கள்
கொண்டு குயிற்றிக் குழுமதியைக் கோளரியாக்
கண்டனபீ டந்திகழுங் காண். (௫)

அன்ன வரியணைமே லாயிரமாங் கோடியண்டத்
துன்னுவட வைவிடஞ்சேர்ந் தோருருக்கொண்—டென்னவங்கைக்
கூற்றிருந்தா லன்னபடை கொண்டவுணர் போற்றெடுப்ப
வீற்றிருந்தான் வெந்தகுவர் வேந்து. (௬)

ஓங்குபுக யோரீ ருருக்கொண்டு சூரபன்மன்
பாங்குவந்தாங் கொண்கவிகை பாலவுணர்—தாங்கவிறற்
றாரகன்சிங் கியமுகன் சார்பிலுற மைந்தரொடு
கூரமைச்ச ராங்கமர்ந்தார் கூர்ந்து. (௭)

ஆயிரமா மண்டத் தமர்மருத்து நீர்க்கிறையுந்
தூயபனி நீர்தூய்த் தொழுதெழல்போன்—மேயவெஞ்சூர்
பாங்கிரட்ட வெண்கவரி பன்னவுண ரண்டத்தோ
ராங்கரிய நல்கிநிற்பா ரங்கு. (௮)

கான்றம் பலம்பொற் களாசியொளிர் வான்பொருள்க
டேன்றயங்கு தாரவுணர் செங்கைகொள்—வான்றயங்கு
மென்கா னறியமணம் வீசவமிழ் திந்தளாய்
மின்கான் முகிறுளிக்கும் விண். (௯)

வானவர்க டம்மகளிர் வாளரக்கர் தம்மகளிர்
தானவர்க டம்மகளிர் சாரணர்மு—னேனைக்
கயனயனக் காரிகையார் காமுறவே வெவ்வே
றியனடனஞ் செய்வா ரினிது. (௧0)

அங்கமைந்துங் காலை யறைவா னமையந்தான்
பங்கயனோர் பாங்கொதுங்கிப் பார்க்கவவன்—றங்கமைந்தர்
நன்றுகன்ன னீர்க்கடத்தி னூடிப் பதந்தோறுஞ்
சென்றுமுறை சொல்வர் திரிந்து. (கக)

மன்னும் வரமுனிவர் வாழ்கெனவே யாசிசொலித்
துன்னுங் கரம்விரித்துத் தோத்திரிக்க—நின்னிலென
நீள்கடைகா வல்லோர் நெருக்கிற் புடைப்பவும்பர்
மீள்குவர்தம் முள்ள மெலிந்து. (கஉ)

திருவனையார் தன்மனையிற் றீபிகைமாத் தட்ட
மிருகரத்தாற் சுற்ற விசைக்கந்—தருவர்நன்
மங்கலமாப் பாட்டிசைப்ப மாகதர்பல் லோர்புடைநின்
றங்கவன்சீர் சொல்வ ரமர்ந்து. (கங)

கார்த்தருவ ரெண்டிசைமாக் காவலர்தன் றேன்கழற்காற்
றூர்த்து மலர்தூவிப்பத் தூமுனிவர்—சீர்த்தவனுள்
ளக்கதமுந் தாமலடுத் தாசிசொலி யாய்துணரு
மக்கதமுஞ் சிந்துவா ராங்கு. (கச)

ஆடுநர்க்குந் தன்சீ ரறைகுநர்க்கு மின்னிசைகள்
பாடுநர்க்குந் தக்க பரிசளிப்பன்—பீடுறுமாத்
தேவருமற் றேவருமன் சீற்றமுறி னச்சமுறீ இ
யோவறவே நிற்ப ருவந்து. (கரு)

சூரனரசிருக்கைப்படல முற்றிற்று
ஆ. திருவெண்பா கூகக.

---

# அசமுகிநகர்காண் படலம்.

---

இன்னபரி செய்திடச்சூ ரேந்த லிருக்குமெல்லைத்
தொன்னகரின் மைம்முகத்தா டுன்முகியின்—றன்னொடுற்றாள்
சீர்தரும கேந்திரமார் செல்வ முகத்தெளவை
யோர்துணையோ டுற்றதுபோ லுற்று. (க)

கைதுமிக்கப் பெற்றவளைக் கண்டினைய தீமைதனைச்
செய்தவரா ரோதேர்ந் திலமென்று—வெய்துயிர்த்துக்
கொந்தா ரவுணர் குழுக்குழுவாய் நின்றுநின்று
சிந்தா குலமெய் தினர். (உ)

அன்னது கண் டங்கநான் காடுநரு மாநிகரி
முன்னெதிர்க்க விட்டமா மூட்டுநரு—மின்னபல
வாட்ட மயர்குநரு மன்னவைவிட் டாங்கெழுந்து
கூட்டமுறக் கூடுவார் கூர்ந்து. (ங)

பாடகயாழ் பாடுநரு மாதரிசை கேட்குநரும்
பாடகமின் கிண்கிணிக்காற் பாவையர்செய்—நாடகத்
கண்களிக்கக் காண்குநருங் கையறுசெய் கையுணர்ந்து
விண்களிக்க நொந்தெழுவார் வேர்த்து. (ச)

சொற்கலைநூல் கற்பாருந் தூங்கலரி தேருகைக்கு
நற்கலைநூல் கற்பாரு நாந்தகமா—விற்கலைநூல்
கற்பாருந் தத்தங் கழகமிகந் தன்னவட்கண்
டற்பா ருறக்கவல்வா ராங்கு. (ரு)

நன்மங் கலவேள்வி நன்மையுறச் செய்குநருங்
கன்மங் கடிந்து கடிதெழுந்து—துன்முகியோ
டங்கை துமிந்த வசமுகியின் கோலங்கண்
டங்கை குலைப்பா ரடுத்து. (சா)

அத்தகையர் பல்லோரு மன்னவனைக் கண்டழுங்கி
யெத்தகைய ரோவீ திழைத்தனர்கொ—லித்தகைய
செய்தா ரினியென்ன செய்யா ரெனப்புழுங்கி
யெய்தா விசைப்பா ரிவை. (எ)

மன்னவர்மன் றங்கை மதிமுகத்தி னுளங்கை
யின்னபரி செய்திடுமேல் யாமெல்லா—மென்னபங்க
மெய்துவமோ வென் றுபல வெண்ணியெண்ணி யேங்கியினி
யுய்திறமே தென்பா ருயிர்க்கு. (அ)

அந்தகனை வென்ற வான்செயலோ மேதியங்க
மந்தமுற வாற்றியவை யைசெயலோ—வந்தநர
சீயத்தைக் காய்ந்த திறல்வீரன் றன்செயலோ
வாயத்தேர் கில்லமென்பா ராய்ந்து. (கூ)

மைய ணெழின்மேனி மாயனரன் சேரவந்த
வையன்றன் செய்கைகொ லாமென்பார்—வெய்யதிறல்
வெள்ளைமணித் தந்தநந்தம் வேழமுகற் காய்ந்தவைங்கைப்
பிள்ளைசெய லோவென்பார் பேர்ந்து. (கo)

போற்றுபரற் போற்றுது போற்றுபரந் தாமெனவே
சாற்றுதலை வர்க்கேற்ற தண்டநனி—யாற்றுவிறற்
சங்குகன்னன் குண்டோ தரன்பானு கம்பனுந்
துங்கவர்தஞ் செய்கையென்பார் சூழ்ந்து. (கக)

மாலுமிது செய்யான் மலரோ னிதுநினையான்
சாலநமக் கஞ்சுஞ் சதமகனோ—வேலவிது
செய்வானன் றண்டர்தாஞ் செய்குவரோ வென்பருரு
மைவா யவுணர் மருண்டு. (கஉ)

மன்னிருவர் தாஞ்சூள் வழங்கியொள்வாட் போர்புரியாப்
பன்னுகா மிற்றனரோ பார்மினென்பா—ரின்னவனை
நாடிவின வின்முனிவர் நாமே நிலவுரைப்பி
லோடி யறிதுமென்ப ருற்று. (கங)

இன்ன பலவா றிருநகரத் தார்சோராப்
பன்ன வசமுகிதான் பாங்கியொடு—மின்னலுற்று
வன்மருங்கு லாரிரங்க வாளவுணர் போற்றமன்னர்
மன்மருங்கிற் கிட்டினள் வந்து. (கச)

அசமுகிநகர்காண்படல முற்றிற்று.

ஆக திருவெண்பா கூஙங.

---

# அசமுகிபுலம்புறு படலம்.

---

இன்னலுற்றே யாரு மிரங்க வசமுகிமன்
றென்னகர்வா யில்கடந்து சூர்முதன்முன்—றன்னி
யினைந்தனையை முன்னோரை யேனையரை நெஞ்சி
னினைந்துபுலம் புற்றா ளணடிது. (க)

ஆங்கால கால னருள்புரிந்த ஞான்றுவந்தாய்
நீங்கா துமைப்போற்றி நிற்பனென்றாய்—தீங்காய
போதுமன்னே யஞ்சலெனப் போந்திலையந் தோகாம்போ
யேதிலர்போ னிற்கின்றேன் யான். (உ)

எவ்வயினு நீர்வருவீ ரென்று துணிந் தேர்சசியை
வவ்விவந்தே னென்கையை வாங்கியே—வெவ்விறல்கொள்
வீரமா காளனென்போன் மெல்லியலை மீட்டகன்றான்
சூரர்காள் வந்திலிர்நீர் சூழ்ந்து. (ங)

ஆழிதனிற் றீயடங்கி யாங்கமயம் பார்த்திருந்தே
யூழி தனில்வெளிப்பட் டோங்கியுல—கேழினையும்
பாழ்படுத்து மாபோற் பதுங்குதெவ்வ ருங்களையு
மூழ்படுத்து வாரே யொளித்து. (ச)

காண்டகுசே யாயுறுநாட் காய்கதிரோ ளுதபமெய்
தீண்டவவற் பற்றிச் சிறையிலிட்ட—மாண்டகுசீர்
வாய்ந்தமரு காவோ மருகாவோ வீண்டொருவன்
காய்ந்தனன்கை யீர்ந்தகன்றான் காண். (ரு

அச்சுதன்ற ளுழிதனை யாரமென மார்பணிந்தோய்
வச்சிரத்தா னேவலினுல் வந்தொருவ—னச்சுறுவை
வாளா லெனதுகரம் வாங்கியகன் றனந்தோ
வாளாநின் றுயுலக மாங்கு. (சு)

இந்திரனை யோர்காத்தா லெற்றினைவா னின்றனையான்
றந்தியொடு வீழவுதை தந்தையென்பர்—நந்தவன்கேள்
வீரனென் கைதடிந்தான் வென்றியுறு சிங்கமுகா
சூரவிது காண்கிலையோ சூழ்ந்து. (எ)

சூரனெனப் பேர்படைத்த தோன்றறெறல் லண்டமெங்குங்
வீரமொடு சென்றிடுநின் வெம்பரிதி—தீரமொடென்
கைதானீர் வீரமா காள னுறைவனத்தி
வெய்தாதோ வண்மையுளா ரென்று. (அ)

ஒண்டலர்தஞ் சூழ்ச்சியினு லோர்முனியென் மைந்தருயிர்
கொண்டகன்றன் மற்றொருவற் கொண்டென்கை—துண்டுசெய்தா
ரென்னு குலங்களையா தென்னரசு செய்கின்றாய்
மன்னுவோ மன்னுவோ வாய்ந்து. (கூ)

அண்டமெலாங் காத்தருளு மண்ணுவோ வண்ணுவோ
துண்டமுறு மென்கரத்தைத் தோகையர்கள்—கண்டிகழப்
பண்பிறந்து மின்னுமுடல் பாவியேன் மேவிநின்றேன்
பெண்பிறந்து பெற்றனனிப் பேறு. (க0)

அசமுகிபுலம்புறுபடல முற்றிற்று.

ஆ. திருவெண்பா கூஎஈ.

---

# சூரன்றண்டஞ்செய் படலம்.

---

பேரன் புடையர் பெரிதிரங்கத் தான்புலம்பிச்
சூரன் சுவணத் துணைக்கழன்முன்—வீரன்வாள்
போழ்ந்த புழையினின்று புண்ணீர் பொழியவெய்யோள்
வீழ்ந்து புரண்டாண் மெலிந்து. (க)

ஆழிபோ லன்று ளவையிற் புரண்டலற
வூழிபேர்ந் தென்னவச்ச முட்கொண்டார்—பாழி
விழவிழித்துச் சூரன் வெகுண்டுகண்ணிற் செந்தீ
யெழவிழித்துச் சொல்வா னிவை. (௨)

என்னையோ விங்கெற் கிளையோய் புலம்புகின்றா
யுன்னையோர் இல்லா ருறழ்வில்லேன்—றன்னையுமே
தேர்கின்றா ரில்லையிந்தத் தீங்குவிளைத் தாருயிரோ
டார்கின்றா ரார்நீ யறை. (௩)

வானோர்க்கு மன்மனைவி மாதலத்தி லோர்புறத்திற்
றானோற் றனணின் றனக்கென்னக்—கோநோக்கிச்
சென்றெடுத்தே மோர்வீரன் சிறியெங்கள் கைதுணித்து
நின்றவளை மீட்டகன்றா னோர்ந்து. (௪)

என்னுமுன்னேக் கிற்புலிங்க மெய்ந்துகழக் கிற்புகைதான்
றுன்ன வுயிர்ப்பிற் சுவாலையெழ—மன்னித்
தொழுந்தகைய சூருன்னுந் தோறு முளத்தி
லெழுந்ததுசீற் றத்தீ யெரிந்து. (௫)

சீற்றமுறச் சூர்நடனஞ் செய்கின்றார் பாடுகின்றார்
வேற்றகுவ ராரும் வெருண்டிரிந்தா—ராற்ற
நடுங்கினமண் முந்நீர் நடுங்கினவிண் மேரு
நடுங்கினமற் றெல்லா நலிந்து. (௬)

எண்ணருஞ்சீர்ச் சூர னிளையோர் தமைநோக்கி
விண்ணவர்கோ னேவல் வினைஞரு—மண்ணகத்தோர்
கானுறைவாற் கொண்டிவர்தங் கைதடிந்தா னென்னிலினி
மானுடரு மேயடுவார் வந்து. (௭)

அரனே யலனயனே யல்லனெழிற் றாமோ
தரனே யலன்வைரத் தானைக்—கரனே
யலனவனே வல்புரிவோ ஞமிவர்கை யீர்ந்தே
நிலனுலவி வாழ்வா னெடிது. (௮)

வானவரைப் பற்றியென்முன் மன்னவுணர் வெம்பசிக்கிவ்
வூனயின்மி னீரொன் றுதவுகிலேன்—கோனையவன்
வண்மையுறு மாதுதனை வான்சிறையில் வையாமே
யெண்மையரொன் றெண்ணினேன் யான். (௯)

கைத்தலத்தூண் டப்பவிட்ட கார்மதத்த யானையொத்தே
னித்தலத்தி லேயிவர்கை யீர்ந்திட்ட—தய்த்துணரி
னீனமன்றி யெற்குவே றில்லை யவர்த்துருவப்
போனவரும் போர்திலரிப் போது. (௧௦)

ஏனுடைய நீரிருந்தி ரேற்றமைந்தர் தாமிருந்தார்
மானுடைய தேர்நேமி வாய்த்திருந்த—நாணற்
றவரிருந்த கைவீரர் சாரிருந்தா ரந்தோ
வெவரிருந்து மாகின்ற தென். (கக)

துன்னு மசமுகிகைச் சோரித் துளிபரந்து
மன்னும் புகழை மறைத்ததென்று—துன்னரிய
வென்றனுர சின்னியரு ளிவ்வண்டத் திவ்வுலகி
னன்றுநன் றென்றுநக்கா னைந்து. (கஉ)

டன்னருஞ்சூர் தானைக்கப் பானுகோ பன்கவன்று
மன்னவர்மன் முன்புக்கு வந்தனைசெய்—தென்னைய
கேணமதே வல்செயண்டர் கேடுபுரி யார்நுங்கை
யேணமர்கை போமாய மென். (கங)

மீன்சுமந்துன் னேவல் வினையினிற்கு மும்பரிது
தான்செய்யற் பாலரோ தாழ்ந்தவர்மேல்—வான்சினநீ
கொள்ளுதியோ மூவர்மேற் கொள்ளினுமேன் மைத்தாகு
முள்ளுதியோர்ந் தெந்தா யுளத்து. (கச)

என்றுநவின் றெந்தா யெடுத்த சினந்தவிர்தி
சென்றுநொடி யிற்சுவர்க்கந் தீக்கொளீஇ—யொன்றுபொரு
ளெற்றி யிமையவரை யிந்திரனை யேர்சசியைப்
பற்றிக் கொணர்வேன் பணி. (கரு)

தாதைசின நீங்கி விடை தந்துமைந்த போதியெனக்
காதலனுந் தாழ்ந்திருவர்க் கண்டிறைஞ்சிப்—போதலுஞ்சூர்
தம்முனுழை யர்ப்பார்த்தஞ் சன்வருவ னிங்கவனை
நம்முன் கொணர்திரென்று னன்கு. (கசா)

தூதாயற் கண்டுன்னைச் சூரழைக்கின் றுனென்னப்
போதனெல்லை மன்னவன்முன் போயங்க—மோத
வெவர்க்குமத்த னுநீ யிழந்தகைமுன் போல
விவர்க்குதவு கென்று னிறை. (கஎ)

மன்மலரோன் கூட்டரிவை மார்கரத்தைப் பார்த்துமெச்சி
வன்மறியி னுளைநகர் வாயிருக்தித்—துன்முகிமூ
தாட்டிதனைச் சேயொடுய்த்தா னொராணி மேவிடத்தைக்
காட்டிவாந கென்னக் கரைந்து. (கஅ)

பாங்கிருந்த வேவலரைப் பார்த்தினனுள் கோளிவரை
யீங்கழைத்தீ ராலென் றியம்பவெஞ்சூ—ராங்கவர்போய்
நேடியவர்க் கொண்டு நிறுவவன்னுர்க் கண்டளவி
னீடியதே சீற்ற நெருப்பு. (ககூ)

வெங்கதத்த வேந்தன் விரிகதிரோ னாதியர்க்கு
யெங்கைகாஞ் சேதித்தே னின்னுயிரை—நுங்கிலீர்
சேணிற் றிரிவீரிச் செய்தி தெரிகிலிரோ
வேணுற்றீர் சொல்வீ ரெமக்கு. (௨௰)

எண்டகுவ ரேந்த லிவள்கபத்தை யீர்ந்தவரைக்
கண்டிலே மென்னக் கரையவவர்க்—கொண்டு
வருத்த முறச்சிறையில் வைத்துழையர்ப் பாரா
மருத்துவரைத் தம்பினென்றான் மன். (௨௧)

ஒற்றர் சிலரோடி யொல்லை மருத்துவரைப்
பற்றிமுன்ன ருய்த்திடலும் பார்த்தெங்கு—நிற்றிரெங்கை
கைதுமித்தோன் றன்னைநீர் காண்கிலிரோ வென்றவரைச்
செய்தவத்தோன் வைத்தான் சிறை. (௨௨)

மன்னாண் டிருது மதியெல்லை யாளரையு
முன்னாற் றருதிரென மொய்ம்பருய்ப்ப—வுன்னாவிண்
கோன்சிறையி லுற்றீர் கொடியீர்நீ ரென்றவரை
வான்சிறையி லிட்டான் வலிந்து. (௨௩)

ஏவலரை நோக்கி யிறைப்பொழுதி லிப்புவியின்
காவலரைத் தம்பியெனக் கால்ற்போய்ப்—பூவலயத்
தோடியெங்குந் தேடியொற்ற ருற்றவரைப் பற்றியுய்த்தார்
மோடியுறை தோட்சூர் முனம். (௨௪)

அச்சமுறு மன்னவரை யாற்ற லவுணர்கோன்
வெச்செனப்பார்த் தெம்மேவல் விட்டெம்பர்—மெச்சிறைவன்
மின்னே டொளித்தன்னிம் மேதினியில் விண்ணிலில்லை
யென்னே வளித்ததுநீ ரிங்கு. (௨௫)

வானவர்கோன் றாதன் மறிமுகத்தா டன்கரத்தைத்
தானறுத்து நின்றான் றலத்தரியீர்—பானறைக்க
ணாண்டுறங்கி னீரோநீ ரோம்பலிர்கொல் லோபகைஞர்க்
கண்டுறவு கொண்டீரோ காண். (௨௬)

கோவேநீ கூறுமா கொண்டிலநின் றெவ்வரா
மேவே வரையுமே மேவிலங்கை—யோவே
ணிருவரையுங் கண்டிலே மிஃதென்ன மாயம்
பொருவரைய வென்றார் புலர்ந்து. (௨௭)

ஏற்றவெறுக் கையான்மா லேய்ந்து புடவிநன்றாப்
போற்றல் புரிந்திலீர் பொற்பிதெனக்—கூற்றின்
மினித்தயங்கு வாளுநீஇ வீரரைச்சூ ரேவித்
தனித்தனியே தண்டித்தான் றான். (௨

சில்லோர்கை நாத்தடிந்தான் சில்லோர் செவிகளைந்தான்
சில்லோர் சிறந்துண்டஞ் சேதித்தான்—சில்லோர்தோள்
சென்னிதுமித் தானித் திறம்பலமா தண்டங்க
ளென்னி யுஞற்றினன்வெஞ் சூர். (உக

மா திறல்கொள் சூரன் மலரோனை நோக்கிநீ
போதியெனப் போதன் புரவலகே—ளாதவன்மீ
னேனோ ருலகிலிவ ரின்றிமுடி யாதுநமக்
காேனார் சிறைவிடென்று ஞங்கு. (கூ0

அன்னுரை யொற்றரைக்கொண் டாங்கழைத்து நீவிர்ந
மொன்னுரைச் சேரீரென் றேதிவிட்டுத்—தன்னோர்
புடைநின்ற சேயமைச்சர் போதனுள்ளிட் டோர்க்கும்
விடைதந்து கோயிலுற்றான் வேந்து. (கூக

சூரன்றண்டஞ்செய்படல முற்றிற்று.

ஆ திருவெண்பா ௬௭௬.

---

# அமரர்சிறைபுகு படலம்.

---

செல்படியுந் தன்கோயில் சென்றபின்பே ரோர்புனையாத்
தொல்படைகைக் கொண்டுதும்பை சூடிமுற்ற—வெல்படைக
வீரா யிரமிவுளி யீர்த்திடுந்தே ரேறியுய்த்தான்
சீரா யிரங்கதிரோன் றெவ். (க)

ஆரவுண ராநீத்த மாயிரமா வத்தொகையே
தேரிபமஃ திற்பாதி சோனிக—மாரநண்டு
ளாடன் மலிவீர ரார்ப்பொடுவிண் சென்றனவே
சேட னெளித்தான் றிகைத்து. (உ)

பன்னிறமார் கேதனங்கள் பல்கவிகை யீட்டங்க
டன்னிறமா கத்தூளி தாவியெழ—மன்னிளவ
றுற்றநகர் நீந்திப்போய்த் துன்முகியை நோக்கிநுங்கை
யிற்றதெவண் சொல்கென்று னீங்கு. (௩)

அங்குமா கேண்மோவெம் மத்தமறுத் தோர்வீரன்
தங்கினனே ஈராணி தானுமுற்றாள்—பொங்கரிங்க
னென்றுசுட்டிக் காட்ட வியமுறங்காக்காழிநகர்
மன்றனறுங் காவடைந்தான் மன். (௪)

சூர்மைந்தன் முன்சென்ற தூசிப் படைசென்று
கார்மல்கு காவைவெளி காணவழித்—தார்வுறவி
னன்னுதலை மீளிதனை நாடியெங்குங் காண்கிலன்சீர்ப்
பொன்னுலகிற் புக்கான் புலர்ந்து. (ஜ)

காரவுணர் கூம்புக் கலனிருமீன் சேகரமாத்
தேரிபமா வோதை செயமுரசா—வாரணிக
முள்ளம்போர்க் கூக்கவெழுந் தூழியின்மே லோங்கவெழு
வெள்ளம்போற் போர்த்த விரைந்து. (சு)

மிக்கு மகேந்திரம்போன் மேவுகையாற் பொன்னகர
மொக்கு மெனும்பண் பொழியவே—புக்கவுணர்
வீரம்போர்தானையதை வீட்டிக் குரங்கின்கை
யாரம்போ லாக்கியதே யாங்கு. (எ)

வானுலகில் வந்தோன் வலிகெழுசூர் மைந்தனும்
பானுகோ பப்பேர்ப் பதகனென—வான
பயந்தலைக்கொண் டோடிப் பதைபதைத்து வானோர்
சயந்தனிடஞ் சாற்றினார் தாம். (அ)

ஓது குரவனில்லை யும்பர் பலரில்லை
தாதையன்னை யிங்கில்லை சார்ந்தநம்மோ—டேதிலன்மெய்
வெவ்வண்ண மானோன் விளைவும் விதிவசமு
மெவ்வண்ண மாமோ வினி. (கூ)

தந்தையெம்மோய் தாங்காத்து தாரணியிற் றங்கினார்
நிந்தைவரா மேபுகலா நிற்பவரார்—சிந்தைநொந்தோ தான்
றாவதே யில்லை யமர்புரிந்தே யாகவத்திற்
சாவதே நன்றென்றான் றான். (கO)

வருதீர ரோடமர்செய் வான்செல்வே னீவீர்
பொருதீரேல் வம்மினன்றேற் போமின்—கருதீரவ்
வான்போர்க் கெலீரும் வராவிடினும் வீரமுடன்
யான்போய்ப் புரிவே னிகல். (கக)

இன்னசயந் தன்சொலதின் னெண்ணமெவ் வண்ணமோ
வன்னவண்ண மேயாங்க ளாற்றுவமென்—றுன்னித்
தொழுதவுணர்ப் போற்றுவதிற் றுஞ்சுவதே நன்றா
மெழுதிமைந்த வென்றா ரிகற்கு. (கஉ)

சயந்த னிமையோர் தமைவியந்து தன்வெண்
கயந்தனையே நெஞ்சிற் கருத—நயந்தஃதோர்ந்
தோங்கனடந் தாங்குவந்த வும்பறனை யூர்ந்தகன்றான்
பாங்கமரர் சூழப் பரிந்து. (கங)

ஊழியிருள் செய்யப் பொருபடையென் றாழ்விளைப்ப
வாழியுடைத் தேர்கயமா வாளணிகஞ்—சூழியவெள்
ளானையிவர்ந் தேண்சயந்த னாவுண னின்றமைந்தன்
றானையெதிர் சென்றான் சமர்க்கு. (கச)

புகவவுணர் கண்டற் புதமெய்தி யாரு
நகநமக்கே வல்புரியு நாகர்—தகவின
ருன்னினார் யாமே தா வுணர்கிலே மென்றவரைத்
துன்னினார் துன்னலார் சூழ்ந்து. (கரு)

நெருங்கியிரு வோருநின்று நேர்நேர் கணைதூ
யொருங்கயின்முன் மொய்படைமெய் யுய்ப்ப—வருங்குருதிச்
சோரிநீர் தோய்ந்து துறக்கமது தோன்றுசெக்கர்ப்
பேரியல்வா னுயதே போர்ந்து. (கசு)

இருதிறத்தி னுரு மிகல்விளைக்குங் காலை
யொருதிறலின் றும்பரொழிந் தோடப்—பொருதகுவர்
பின்றொடர்ந்து பற்றிப் பிணித்திறைவன் முன்னருய்ப்ப
நன்றுகொனங் காவலென்றா னக்கு. (கஎ)

கண்டான் சயந்தன் கனல்விழிகா லச்சீற்றங்
கொண்டான் றனுவைக் குனித்திகல்செ—யொண்டார்
பணைமார் பிருதோள் பதைபதைப்ப வூழிற்
றுணைமாரி யுய்த்தான் கடிது. (கஅ)

அன்ன பொழுதவுண ரண்டர் படையெதிர்போய்
முன்னரன்வெற் பைக்கடைநீர் முற்றுதல்போன்—மன்னவனூர்
வெண்கரியைச் சுற்றியது மேற்சயந்தன் மேற்கோடி
யுண்கணைக ளோர்த்தா ரிரைந்து. (கசு)

சயந்தனவை சிந்தித் தவர்வளை இத் தெவ்வர்
கயந்தடந்தேர் மாவீரர் கள்சாய்ந்—தயர்ந்திரிய
வெங்கணை தூய் நூறுவெள்ளம் வீரரையு மாய்வுசெய்தான்
செங்குருதி யாறுய்ச் செல. (உ0)

நீலகே சன்சயந்த னேர்போய்த் தனுவளை இக்
கோலனிதம் பெய்தரவே கோவிளவல்—சால
வவசந் தலைக்கொளவும் பாயிரந்து யன்றான்
கவசந் துணித்தான் கறுத்து. (உக)

அன்று னிளவலத்தத் தார்தனுவைக் கூர்கணைதூய்ச்
சின்றுபின் னஞ்செய்யச் சேயுளத்தி—லூன்றுவோர்
மாயமதா லெண்ணிலுரு மன்னியெங்கு மாய்நின்றான்
றீயவுணர் கண்டார் திகைத்து. (உஉ)

சயந்தன் பலவுருவந் தாங்கியம ராற்ற
வயந்தன்பா லின்றியொன் றன் மாழ்கி—யயர்ந்துநின்றான்
மாயமது மாற்றும் வலியிலன்சூர்மாபடையேயண்
போயல மந்த புலர்ந்து. (உக)

சோமா சுரன்முதலாச் சொல்லும் படைத்தலைவ
ராமாய மீதென் றறிந்தண்ணார்—தாமாய்ந்த
விஞ்சைபலி யாதிருக்க வெய்யரென்செய் வோமென்று
நெஞ்சங் குலைந்தார் நினைத்து. (உச)

அன்னபொழு தாயிரத்தெட் டண்டமுமாள் வான்மைந்தன்
தன்னனிகந் தாழ்வதனைத் தான்காண—வின்னதிக
லிந்திரன்சேய் செய்மாயை யென்றெண்ணி முன்புகர்சொன்
மந்திரமுட் கொண்டான் மதித்து. (உ௩)

மதிக்கவுஞ்சூர் மைந்தன் வலாரிமகன் மாயை
கதிக்குமுரு நீங்கக் கரிமேன்—மதிக்குறைபோற்
றோன்றினனிவ் விஞ்சைபுகர் சூழ்ச்சியென மான்கோ
லூன்றினன்றன் னுள்ளத் துருத்து. (உ௪)

வருதிமக வான்மகனின் மாயைவலி தீர்த்த
கருதியான் போதரமுன் கண்டா—னிருகண்
டருதிவலை யேலவென்றிற் றூழ்சிறையில் வைப்பன்
பொருதிவலை யேயென்றான் போந்து. (உ௫)

வல்லுநர்தாம் வெல்வதூஉம் வல்லாரல்லர் தோற்பதூஉ
மில்லையா னூழ்புணர்த்து மேய்ந்துணரீ—சொல்லுறுத
லொல்லுறுமோ வென்ன வெய்யோ னேந்துவரிச் சொன்மடியார்
சொல்லுவரோ வீரரென்றான் சூழ்ந்து. (உ௬)

செங்கரவி னன்பங்குன் சீறிச் சயந்தன்மே
லங்கரவி னன்குவளைத் தாயிரங்கோன்—மங்குலெனப்
பெய்தா னவனும் பிறங்குந்து வாங்கியே
வெய்தா னவன்மே லெதிர்ந்து. (உ௭)

தானவர்கோன் சேய்விடுகோற் றுக்கவெதிர்ந் தேவிடுத்தான்
வானவர்கோன் சேயிவ் வண்ணம்பலகா—லான
விருவருமே விற்குனித்தம் பெய்திருஞ் மின்னும்
பொருவதுபோற் செய்தனர்வெம் போர். (௩0)

விண்ணவர்கோன் மைந்தன் விசேரம்போய்ச் சூர்மகன்றே
ரண்ணனிகத் தைப்படுத்த வன்னவன்மேற்—றுண்ணெனப்பெய்
கூர்ந்தகணை பட்டுநெய்த்தோர் கொப்புளிக்கப் போரிழந்து
சேர்ந்து கிடந்தான் சுரன். (௩க)

சயந்தன்பா லின்றிச் சயந்த னறிவு
வியந்தந்து சோருமெல்லே வேழந்—துயர்ந்தவுண
ஞரிரத மேற்பாய்தந் தூறுசெய நோக்கிஞன்
சூரினெழின் மைந்தன் சுளித்து. (கஉ)

மற்றவன்றன் மார்பினிடை மாதங்கந் தாக்குதலு
மிற்றனாற் கோடு மிபக்காத்தைப்—பற்றியொரு
கையிற் கவுளிற் கடிந்தொறுத்தா னஃதாற்றி
யைய விழுந்த தயர்ந்து. (கங)

சேயஃதோர்ந் தும்மாயை தீர்ந்திதுவெல் வன்மையிலேந்
தியரினிப் பற்றுவார் சீர்கெடுமூர்—நீயிரங்கே
னெஞ்சமே யூழி னெறிகாணென் றுன்சயந்தன்
றுஞ்சவுணர் கண்டார்த்தார் சூழ்ந்து. (கச)

தானைத் தலைவர் சயந்தன் றனையுழுவை
மானைத் தெறல்போல் வதைக்கவதைப்—பானுப்
பகையவனே யீர்த்தொறுத்திர் பாழ்ஞ்சிறையி லானோர்
தொகையொடிவற் சேர்மினென்றான் சூழ்ந்து. (கரு)

அன்னதுசெய் காலே யருங்கா வலரைவிளித்
துன்னு சயந்தனிவ ரோவமற்ற—மன்னமரர்த்
தந்தெழிலூர் தீக்குத் தருதிரொனத் தேர்ந்தவரை
யுந்திமுன்பின் றீயிட்டா ருற்று. (கசு)

அரிபுரந்தா லிக்கிளர்தீக் காயபின்னவ் வூர்தீர்
திரிபுரந்தா னென்னத் திரியப்—பரிபுரந்தாட்
கிட்டசயந் தன்னிவர்க்கொண் டேகுதிர்நீர் முன்னரெ
விட்டவனி வந்தனன்சேய் மீண்டு. (கஎ)

வீர மகேந்திரம்போய் வேந்தன்று டாழ்ந்தவன்முன்
கூரமரர் தம்மைக் கொடுகிறீஇ—யாரணங்கைக்
கண்டிலன்விண் ணுளியையுங் காணேனெனந் தாய்நகர்தீ
மண்டவைத்தே னென்றான் மகிழ்ந்து. (கஅ)

மகன்செயலோர்ந் தேந்தன் மகிழ்ந்திளவற் புல்கி
யிகன்மகனே விண்ணவரை யீர்த்தே—யகன்மெலிய
மோதிமின்னீர் வாளான் முகம்புயந்தா ளாதியங்கஞ்
சேதிமினீ ரென்றான் சினந்து. (கசு)

புல்வா யினமேற் புலிபாய்ந் தெனத்தகுவர்
சொல்வாய் சயந்தனண்டர்ச் சூழ்ந்துபற்றிப்—பல்வாய
வங்கந் துணித்தா ரசமுகிதான் காணவெய்யோர்
பங்கமின்றவ் வங்கமுற்ற பண்டு. (சo)

அன்னதனைக் கண்டுவெகுண் டாரவுணர் கோன்சிறையி
லின்னவரைக் கொண்டிடுதி யென்னவெய்யோர்—மன்னிளவ
றன்னையண்டர் தம்மையுந்தித் தாளிற் றளைபூட்டி
யுன்னுசிறை யுய்த்தா ருருத்து. (சக)

சூர னகரிற் சுரமகளிர் தாங்குறுகிக்
காரவுண ரேவல் களையாற்றி—வீரத்
தடும்பாய் புலிவா யகப்பட்ட மான்போற்
படும்பா டறைபவர்யார் பார்த்து. (சஉ)

இன்னற் கடலி லிமையோர் விழுந்தழுந்தித்
துன்னற் கரிய துறைகாணு—துன்னுமெல்லை
வெந்தகுவர் கோன்மகனால் வெண்கோ டிழந்ததந்தி
யந்தலம்வந் துற்ற தயர்ந்து (சங)

பண்காட்டும் வேதப் பரியுடைய தானுவினை
வெண்காட்டி லர்ச்சித்து மெய்யெய்தும்—கண்காட்டு
மாற்கோடு மூர்த்தியா மாவிறையோன் மேவருளா
ஞற்கோடும் பெற்றதுவே நன்கு. (சச)

அன்ன வமயத் தணங்கினொடு மேருவின்பாற்
றுன்னமரர் கோனகரஞ் சூர்மகனால்—வன்னி
கொளுவித் தனயனும்பர்க் கொண்டு சிறையிற்
றளுவித்தது தேர்ந்தான் றன். (சரு)

ஆண்டழுங்கி மாறேற்ப வந்தனினக் கென்னவரம்
வேண்டுமெனச் சூரினத்தை வீட்டுகென்று—ஞண்டகையு
மாதினையா மேவியொரு மைந்தற் றரவவன்கு
ராதியரை வெல்வனென்று ஞங்கு. (சசு)

சொன்மகவான் றேர்ந்தயன்மால் சூழ்தரப்போய்ச் சோதிதன்பான்
மன்மதனை யுய்ப்பவன்ஞன் மாய்ந்தெழுந்த—பின்மலைமன்
யின்னையரன் மன்வரையில் வேட்டுவெள்ளி மால்வரையி
னின்னை யளித்தா னெடிது (சஎ)

எந்தைநீ வந்தபின்ன ரெம்மனோ ரெல்லோரு
முந்தைநீள் செல்வமுற்ற மொய்ம்பினர் போற்—சிந்தையுற்று
மஞ்சிக் கரந்திருந்தா ராரவுணர் கோன்காணில்
வெஞ்சிறைக்கண் வைப்பனென வேர்த்து (சஅ)

கரந்திடுமோல் காயத்தார் காரவுணர்க் காணி
னுரந்துளங்க வேர்த்தலந்தா ரொத்துத்—துரந்தவுயி
ருற்றுயிர்ப்பர் சூரையுன்னி னுண்மெலிவ ரேகண்டாற்
சிற்றுயிரு நீப்பரம்மா தீர்ந்து. (சகூ)

பொன்னகரைப் பாழ்படுத்திப் புத்திரனை யும்பரொடு
மன்னுசிறை செய்துபொருள் வவ்விமன்னைப்—பின்னுங்
காந்துணைவா னுற்றவிடுக் கண்புரிவா னன்று
னூர்ந்துணைவா ராரிவ் வுலகு. (௫௦)

அண்டத் தனியண்டத் தாற்றின்னிவ் வாறேனை
யண்டத் தவன்செய்கை யாரறிவா—ரண்டத்
தமரா ரறியா ரயன்மா லறியார்
குமரநீ தேர்வை குறித்து. (௫௧)

பூம னவர்க்குப் புகல்வனித னைந்தங்க
மாமன் பொருது வயமிழந்தான்—றேமனறுங்
கொன்றையா னன்னவரைக் கொல்லான் வரத்தினீ
கொன்றையா வாளென்றான் கூர்ந்து. (௫௨)

இன்னவகை யன்பினு லெந்தை யுயக்கிளையப்
பொன்ன னுரைப்பப் புதல்வர்சொ—லன்னையத்த
றென்ன வினவி யினிதுரைத்தா யாவுமெனுப்
பன்னியருள் செய்தான் பரிந்து. (௫௩

எல்லா மொருங்குணரு மெந்தா யெளியேன்புன்
சொல்லா லுணர்வதுண்டோ தோம்பொறுத்தி—நல்லார்
கருத்திலமர் வோயென்னக் கந்தவே ளுன்னே
மிருத்திநீ யென்றா னினிது. (௫௪)

பொன்ன னிருக்கப் புரந்தரனை நோக்கிவெஞ்சூர்
மன்னினத்தின் மாய்த்திமையோர் வன்சிறைநீத்—துன்னரிய
விண்பதத்தை நீயாள மேவியளிப்பமென்று
னெண்பதத்துக் கெட்டா விறை. (௫௫)

குணங்குறியில் கோனிதனைக் கூறுதலு மேவி
மணங்கமழுங் கற்பகத்தார் மன்னன்—வணங்கித்
திருந்திமையோ ரோடேத்திச் சிந்தை மகிழ்ச்சி
பொருந்தி யிருந்தான் புரிந்து. (௫௬

அமரர்சிறைபுகுபடலம் முற்றிற்று.

ஆ. திருவெண்பா ௧௦௩௨

அசுரகாண்டம் முற்றிற்று.

உ

மூன்றாவது

# மகேந்திர காண்டம்.

---

## வீரவாகுகந்த மாதனஞ்சேல் படலம்

மனவாக்குக் காயநினை வந்தனைசெய் தேத்தி
யுனவாக்கு நன்மையிலே னுய்யக்—கனவார்
திருகுமரக் கோட்ட திறன்மறியி லேறி
வருகுமரக் கோட்ட வர். (௧)

இந்திரனே யாதியும்ப ரேவரும்பாங் கேத்திநிற்பச்
செந்தியமர் செவ்வேள் சிவனளித்தோ—ருந்திவந்தோ
னாதியர்வெங் காரவுண ராயினுந்தீ யோரையட
லீதியெனத் தேர்ந்தா னினைந்து. (௨)

சூர்தருவெஞ் சூர்வயினோர் தூதைவிண்ணோர் வன்சிறைதான்
றீர்தருவா னுய்ப்பினவன் செப்பியநற்—சீர்தருசொற்
கேளாமற் போகினவற் கேவொட்ட முன்னினா
னாளான வர்க்கருள்வா னாங்கு. (௩)

அங்கதிர்வே லண்ணலய னாதியரைப் பார்த்தவுணர்
தங்களைவெல் வானொருதூ தைவிடுத்துப்—பொங்குவெஞ்சூர்
தன்கருத்தை யோர்துமெனத் தாழ்ந்து சுரரிஃது
நன்கறத்தி னீர்மையென்றார் நன்று. (௪)

கந்தவே ளிந்தக் கடுந்திறவோர் மூன்றாதா
வுந்துவதி யாரை யுரைத்திரென—வந்தினுக்கும்
வீர மகேந்திரத்துண் மேவரிது போய்வருவான்
வீரமொய்ம்ப னென்றான் விதி. (௫)

போதனுரை தேர்ந்துவகை பூத்துவிறல் வாகுவைப்பார்த்
தோதருமகேந்திரமூ தூரேகிப்—பீதமுடிச்
சென்னியன்முன் வானோர் சிறைவிட் டறத்தினுய்தி
யென்ன நவிறி யினிது. (௬)

அதுமறுத்து ளானே லவுணனின் றன் கேளைக்
கதுமெனமாய்த் தன்னையெஃகாற் காயத்—துதைநாளைச்
சீறிகனாற் சேனையொடுஞ் செல்லுதும்யாந் திண்ணமெனக்
கூறிமீள் கென்றான் குகன். (௭)

வென்றியவுணர்சூழ் வீர மகேந்திரத்துட்
சென்றுவெஞ்சூர் முன்பாகீ செப்புமரு—ளொன்றுமொழி
நன்றியம்பி மன்கருத்தை நாடி வருகின்றே
னென்றிறைஞ்சிப் போனு னெழுந்து. (அ)

மாலவன்பின் சென்று மகேந்திரத்தில் வெஞ்சிறையுட்
சாலவண்ட ரோடுஞ் சயந்தனுற்ற—னேலவவற்
றேற்றியதன் பின்னின் செயல்முடித்தி யென்னநிற்றி
யாற்றியது செய்வனென்ற னுங்கு. (கூ)

எண்மரிளை யோரு மிலக்கரும்பின் சென்றிடக்கண்
டொண்டிறலீர் நீர்கேண்மி னுன்னகர்போய்த்—திண்புயவெஞ்
சூர்கொளவேள் சொற்றவெலாஞ் சொல்வனவன் சொன்மறுக்கி
னூர்கொளுத்தி மீள்வனெல்லை யுற்று. (க0)

என்றவரைப் புல்லி யினிநின்மி னென்றருளி
மின்றாளம் வீசலைக்கண் மேருவெனத்—துன்றி
யிலகுகந்த மாதனமே லேறினன்றிண் வீரன்
கலகலவென் றார்ப்பக் கழல். (கக)

சீருருக்கொள் சேவடியைத் தோருஞ்சேய் தேவருக்காப்
பேருருக்கொண் டாங்குப் பிறங்கலின்க—ணோருருக்கொண்
டோகை யுறநின்ற னும்பர்க் குறுதிசெய்வான்
வாகை யுறுவீர வாகு. (கஉ)

வேதன்பல் புள்ளுருவா விண்பெல பாம்புருவா
மீததல நாடுறல்போல் வீயாவம்—போதரவே
வேணுவேய் வெற்பில் விறல்வீரன் வெற்புருவாந்
தாணுவே யென்னநின்றான் றான் (கந)

விரைகமழுதார் வீரன் விலங்கலின்மேற் செந்தாள்
வரிகழல்க ளார்ப்பவைக்க வன்க—ணெரிதாலுங்
கண்டிசைதான் கேட்டரிமான் கைம்மா முதலியன
வெண்டிசையுஞ் சென்ற விரிந்து. (கச)

வலாரிமுதற் றேவர் வழுத்துதிறல் வாகு
சிலாதலமே னிற்கச் செறிபுள்—ளலாவிட்
புலஞ்சென் றனவே பொறியரவ மெல்லாம்
பிலஞ்சென் றனவே பிழைத்து. (கரு)

எண்டிசையே ழாழி யிருநிலம்விண் ணாழிநக
மண்டமுல கெல்லா மகன்விழியிற்—கண்டு
திகழ்கயிலை தாழ்ந்துமற்றச் சீர்நகர்கண் டொண்சூர்
நகரிதற்கொப் பில்லையென்ற னன்கு. (கசு)

வான்புரிசை வெஞ்சூர் வளநகர்கண் டேசினந்து
தான்பிசைய வெண்ணியதிற் றாழ்சிறைமன்—கான்முதலோர்
ஙையவரு மென்றுவிட்டு நாமுருக்கண் டஞ்சுநரைக்
கையமைத்தே யஞ்சலென்றான் காண். (௧௭)

மின்வீர வாகு விலங்கலிலிவ் வாறுநிற்பப்
பொன்வீ ழுரியிளையோர் பூதரும்பர்—மன்முனிவ
ராரும் வியந்தார்த் தலர்தூய்த் தொழுதுவெஞ்சூ
ரூரடைந்து நீர்க்கென்றா ரூறு. (௧௮)

அன்னதோர் காலையெந்தை யாறிருதோள் வாழ்கவருண்
மன்னுமறு மாமுகங்கள் வாழ்கதிண்ப—தின்னொருவர்
துங்க மணிப்படையுஞ் சூரயிலும் வாழ்கசெவ்வே
ளங்கழல்கள் வாழ்கவென்றா ரங்கு. (௧௯)

கூரன்பு கொண்டு குமாரற் றொழுதேத்தி
வீரன் புலனொன்ற மெய்பொடிப்ப—பேரருளின்
மூழ்கிக் குதூகலிப்ப மூதுலகத் தாவிமகிழ்
வாழ்கடலில் வீழ்ந்த வடுத்து. (௨௦)

ஆங்கணெழிற் செவ்வே ளருள்பெறுமா வீரனிந்த
வோங்குருவி னேகி னுலையுமெனத்—தீங்கிலுரு
மெய்ந்நிலவக் கொண்டோங்கி வீர மகேந்திரமா
மொய்ந்நகரம் போந்தனனே முன். (௨௧)

வீரவாகுகந்த மாதனஞ்செல்படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா உ௬.

---

# கடல்பாய் படலம்.

புனைகழற்கால் வீரன் புவிக்கீழ்வீழ் வெற்பை
யினையனீ மீண்டெழுதி யென்ன—முனையினெழப்
பன்னவன்செல் கால்விசைப்பிற் பார்வரைகள்பாற் படர்ந்த
பின்னவர்தற் சேறவெனப் பேர்ந்து. (௧)

விண்டலத்தா றேகுமையன் வேகத் தெழுமருத்தா
லண்டந் திரிந்தவுயி ரார்த்தயர்ந்த—கொண்டல்
சுழன்றகறங் கிற்கடலிற் றேன்றாழித் தீயு
மழன்றதன்மை போய்க்குளிர்ந்த தாங்கு. (௨)

பன்வரைத்திண் டோளான் படர்விசையி னூர்வளியான்
மன்கவினூர் மாட மகேந்திரத்து—முன்கமழுஞ்
சோலைதரை சாய்ந்த சுரும்பூதலாம் பல்வகைமீன்
வேலைதனிற் பாய்ந்த வெருண்டு (ரு)

பூதிர்ந்தவுதி வார்வீர மொய்ம்புபாய் வேகத்
ததிர்ந்தசலங் கீழ்போ மமையத்—துதிர்ந்தகன்வான்
மீன் போய் விழவுவரி மீன்பாய்ந் தெழவிரண்டும்
வான்போர் புரிவதொக்கும் வாய்ந்து. (௬)

தேருந் திறல்வீரன் சென்றிடப்பாற் செங்கரத்தி
லாரு மணிக்கடகத் தாரொளிபோய்க்—கூருமணி
நேமிவெற்பிற் சூழிருளை நீக்கியிகல் செய்கின்ற
வேமவண்ட வில்லோ டெதிர்ந்து. (௭)

தெவ்வேறும் வீரன் சிலம்பினின்று பாய்ந்தமரர்
வெவ்வே தனைதொலைப்பான் மேவருளிற்—செவ்வேள்
கடுவே நிகரவுணர் காமர் நகர்மேல்
விடுவேலிற் சென்றான் விரைந்து. (௮)

பொன்வரையின் கோடு பொருவளியின் வேகத்தாற்
றென்கடலிற் போய்விழல்போற் செல்வீரன்—மன்வளங்கொள்
சூர னகர்வடபாற் றுன்யாளி யானனன்போற்
றூரணித்தா மெல்லையுற்றா னோர்ந்து. (௯)

கடல்பாய் படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா உ௮.

---

## வீரசிங்கன் வதைப் படலம்.

அன்னதன்முன் யாளி யபிதானன் சேனையொடு
பன்னருஞ்சீர்ச் சூரனைக்காண் பான்செல்ல—மன்ன
னலங்கலதி வீரனென்பே யாயிரவெள் ளத்தோ
டிலங்கைவைகிப் போற்றியுற்றா னேய்ந்து. (க)

நோயிலதி வீர னுவறகுவர் போற்றநகர்க்
கோயிலின்க ணண்ணக் குலவடபால்—வாயிலின்கண்
ணோரவுண ரானைவெள்ள மைஞ்ஞூறோ டங்குற்ற
வீரசிங்கன் கண்டான் வெகுண்டு. (உ)

ஒல்லையிவ னாவி யொருங்குண்பே னென்றுன்னிச்
செல்லையுறழ் மெய்வீர சிங்கனென்போன்—வல்லவின்
னேகுவின்மன் றனையைஞ்ஞா றேய்ந்தவெள்ளஞ் சூழவிறல்
வாகுவின்முன் சென்றான் வலிந்து. (௩)

சென்றளவில் வீரசிங்கன் றிண்வீர வாகுவைப்பார்த்
தின்றளவு மெங்காப் பினிலெவருந்—துன்றினவ
ரில்லையார் நீவந்த தென்னையுயிர் நண்பில்லாய்
சொல்லையா வென்றான் சுளித்து. (௪)

மன்னிலங்கை வாவி வயமுறுசூர் வைகுமெழின்
மின்னகர்ம கேந்திரம்போய் மீளுவா—னுன்னிவந்தே
னீதென் செயல்வலியை யேல்வேண்டிற் றாற்றுதியென்
றோதினன்றிண் டோள்வீர னோர்ந்து. (௫)

அன்னான் மொழிகேட் டவுணர் திறலானை
யுன்னான் வலியோர்து மூங்குறனன்—றென்னாச்சோம்
பற்றவிற லோரையிவ னாவிகொள்வீ ரென்னவவர்
சுற்றினர்திண் வாகுவினைச் சூழ்ந்து. (௬)

வேல்விடுப்பர் தண்டெடுத்து வீசுவார் வில்வளைஇக்
கோல்விடுப்பர் சூலமது கொண்டெய்ப்பர்—சால்பரிதி
தன்னையுரு மூக்கொண்மூத் தான்வளைந்தாற் போலவுணர்
துன்னியமர் செய்தார் துதைந்து. (௭)

பாய்திமிரத் தோடும் பனித்திரளை யோட்டுகின்ற
காய்கதிரோ னென்னக் கனன்றுறையுள்—வாய்திணிவாள்
கொண்டவுணர் தங்கள் குழுவனைத்துந் தான்றுமித்தான்
றிண்டிறல்கொள் வாகு திரிந்து. (௮)

சிலர்கை யிழந்தார் சிலர்தோ ளிழந்தார்
சிலர்கம் மிழந்தார் திகைத்துச்—சிலர்தாம்
புரிந்தா ருயிரினையே போற்றிவோன் மண்வா
னிரிந்தா ரவுண ரெதிர்ந்து. (௯)

சென்றிடலும் வீரசிங்கன் சீறிவிறல் வாகுவின்மே
லொன்றவொரு சூலமுய்ப்ப வூங்கதனை—வென்றிதரு
மேதியினா னீக்கவெய்யோ னேண்குலிசம் வீசவதை
யேதியினான் மாற்றினன்கோ வேற்று. (௰)

சென்றுமுன்றன் வாளோச்சிச் செங்கை துமித்துவெய்யோ
னொன்றுமுடி கொய்துவரி யுள்வீட்டி—வென்றிகொடு
மின்றான் விடுவான் மிளிருறையுட் பெய்துறையுள்
சென்றான் குகன்றூதன் றேர்ந்து. (கக)

வீரசிங்கன் வதைப்படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா ௩சு.

---

# இலங்கைவீழ் படலம்.

---

அலங்கலந்திண் டோளா னவுண ரிருப்பா
மிலங்கையின்மேற் பாய்தலுமே யேங்கிக்—கலங்கித்
தயங்குமதி வீரன் றகுவரிடி யேற்ற
புயங்கமென வீழ்ந்தார் புலர்ந்து. (க)

வீரமொய்ம்பன் றானுன்ற வேலையிடை வீழிலங்கை
கூரமரர் கோமான் குலிசமுறு—தார்கவியி
னூடு புகலுற் றொளிதருமை நாகமெனுங்
கோடு தனைநிகர்க்குங் கொல். (உ)

ஓர்தரும கேந்திரமூ தூர்வடபான் மேவிலங்கை
சீர்தருதிண் டோள்வீரன் செய்யகழ—லார்தந்தே
யூழியின்க ணற்புறமு மோதநீ ரார்த்தெழுந்து
சூழியவாழ் பாரிணையுஞ் சூழ்ந்து. (௩)

கோளிலங்கை வேலேந்துங் கோமான் விடுதூதன்
வாளிலங்கை யத்தனடி வைத்தளவில்—வாளிலங்கை
யாழ்கடலிற் சோமுகன்மா வாரணநா ளான்கவர்ந்து
ஆழ்கிக் கிடந்ததொக்கு முன். (௪)

இலங்கிலங்கை மூதூ ரிருங்கடலுண் மூழ்கத்
தலங்கொடதில் வைகுந் தகுவர்—கலங்கி
மருண்டார் கவன்றார் மலங்கினார் சூழ்ந்து
வெருண்டார் புலம்பினார் வேர்த்து. (௫)

கரமீர்ப்ப சில்ல கழலீர்ப்ப சில்ல
சிரமீர்ப்ப சில்ல திணிதோ—ளுரமீர்ப்ப
சில்லவுண விற்றம்மைத் தின்று பருத்தவுட
வல்லவுணர் தம்மைமச்ச மாங்கு. (௬)

ஆயினோ டத்தனையு மன்பின் மனையோடு
சேயினையுங் கொண்டு சிலர்சென்றார்—மேயசில
ரத்தமுறு வெய்ய வயிர்மாப் படையுய்த்துத்
தத்தமுயிர் தாங்கினார் தாம். (எ)

கலங்கவிழ்ந்தாங் காடற் கவின்புயமா வீரன்
பொலங்கழற்கா லூன்றப் புனலு—ளிலங்கைபுக
வக்கலஞ்சூ ழும்பியின்மே லாங்குளா ரேறுதல்போன்
மிக்கவுண ரேறினர்மீன் மேல். (அ)

வாரியதன் மீதெழுசில் வானவுணர் வேள்விடுதிண்
சீரியல்கொண் மீனி செயல்காணு—வோரி
னயரு நமையு மடுவனென வல்லை
துயரினயல் போனார் துடித்து. (கூ)

இலங்கைவீழ்படல முற்றிற்று.

ஆ திருவெண்பா சஅ.

---

# அதிவீரன்வதைப் படலம்.

---

ஆரிலங்கை மூழ்க வதிவீரன் கண்ணுற்றுக்
கூறின்ன னுணுட் கொடுசினவி—யாரிழைப்பர்
சூரபன்மன் றானோ துணைவரோ மைந்தரோ
தேரிவரல் லாலிச் செயல். (க)

அன்ன ரிதுபுரிதற் காவரோ ரேதுமில்லை
பொன்னாட் டிறையுமுயிர் போற்றியுய்வான்—பின்னருந்
தெவ்வடுசூ ராணையுன்னிச் சிந்தையினு மெண்ணுகிலார்
செவ்விதென்றன் காவற் றிறம். (உ)

பின்றங் கிலங்கைதனை வீழ்த்தார் தமைநாடிக்
கொன்று குருதி குடிப்பலெனத்—துன்றனிகத்
தாரையுங் காண்பா னதிவீரன் சீற்றமொடு
வீரைமேல் வந்தான் விரைந்து. (ங)

செழுந்திரைமுந் நீருட் டிகழ்வடவைச் செந்தீக்
கொழுந்தினிகல் வாகுவெனக் கூறுந்—தொழுந்தகையைச்
சோனைமுகி னேர்நிறத்த தோன்றலதி வீரன்றன்
சேனையொடு கண்டான் சினந்து. (ச)

சீற்றமொடு கண்டுநகை செய்திலங்கை வீழ்தருவா
ளாற்றிநின்று னாவுண ராணைநன்றென்—றேற்றினதி
வீரனிவ னாவிதனை வீப்பனெனச் சென்றிடனு
நீரனது கண்டான் றெரிந்து. (௫)

அந்த வமயத் தவன்புடையி லார்த்துவந்த
வெந்தகுவர் போர்விளைப்ப வீரமொய்ம்ப—னந்தவில்கூர்
வாள்கொண்டு வீசவெங்கண் மார்பிருதோள் கைநெடுந்தா
ளேர்கொண்டு வீழ்ந்த துடித்து. (௬)

தின்னனிக மாயத் தரியா திகல்புரிவான்
மன்னனதி வீரன் வருதலைக்கண்—டுன்னுதிறல்
வீரகுவரு கென்றழைப்ப மற்றவனோர் குந்தமதை
யாக மிசையெறிந்தா னாங்கு. (௭)

உந்துமொரு குந்த முரத்தி லுறுமுன்னர்க்
கந்தவே டேன்றன் கைத்தலத்தார்—கொந்தழனோர்
வாளிலிரண் டாய்த்துணித்தான் மன்னனது கண்டுதண்டம்
காளைநிறத் துய்த்தான் கனன்று. (௮)

தண்டந் தனைவாளாற் சண்முகன்றா தன்றுணிக்கக்
கண்டங் கதிவீரன் காய்தந்து—திண்டடமார்
புய்க்கவொரு சூல முரவோ னதைநொடிப்பிற்
கைக்கொண் டிறுத்தான் கடிந்து. (௯)

அதுகண் டிவனைவெல்ல லார்க்குமரி தென்னாக்
கதிர்தருவாள் கொண்டிகைந்து கஞ்ச—னுதவினது
சாதிக்க வல்லையேல் சார்திநீ யென்றுசில
வோதிக்கற் றோன்முனூற்று றுற்று. (௧௦)

நின்றுநன்று னண்மைநமை நாடிவெல்வை யேல்வியப்பார்
நின்றுசில கூறுவதெ னேர்தியால்—வென்றிதரு
வீரருந் தம்மை வியப்பரோ வென்றான்மா
வீரருண்மா வீரனும் வேந்து. (௧௧)

என்னவெய்யோ னோர் விருவோரும் வாள்விதிர்த்து
மின்னுமுகி றேன்றி மிளிர்வதுபோன்—மன்னுமொவ்வோ
ரங்கமுறை நாடி யமர்புரிந்தார் சாரிவந்து
செங்கணனல் சிந்தத் திரிந்து. (௧௨)

ஓதுமிரு வோரு முறுபோ ருளுற்றுகையிற்
கோதில் குணத்தெங் குமரவே—தே
னறைத்தா ரவுணனைக்கூர் நாந்தகத்தாற் சென்னி
குறைத்தா னுயிர்கொண்டான் கூற்று. (௯)

அதிவீரன் வதைப்படலம் முற்றிற்று.

ஆ. திருவெண்பா ௯௧.

---

# மகேந்திரஞ்செல் படலம்.

---

மேவும் விறல்வாகு வீர மகேந்திரத்துட்
போவதுன்னி வானெழுந்த போதுவரி—யோவில்
கலங்கைநியிர் பாரங் கழியவெழு மாபோ
லிலங்கைநகர் மீண்டெழுந்த தீங்கு. (௧)

நீரார் நெடுங்கலமே நேரிலங்கை நீத்தெழுந்து
சாரா யிரயோ சனைவிசும்பிற்—பேரா
மணிச்சிகரங் கண்டான் மகேந்திரவெல் லைபோய்க்
கணிச்சிகரங் கொண்டவன்சேய் காண். (௨)

மன்னூர் வதியு மகேந்திரமூ தூர்வடபாற்
பொன்னூர் மணிக்கோ புரத்தருகிற்—கொன்னூருங்
கோரனதி கோரனெனுங் கூர்வீரர் சேனையொடு
மாரநனி காத்திருந்தா ராங்கு. (௩)

கரியா யிரவெள்ளங் காற்றேரு மற்றே
பரியா ளதற்கிரண்டு பங்கா—மிரியா
மிருந்தானை வாரிகண்டு விம்மிதங்கொண் டாங்குப்
புகுந்தா னவில்வான் புலத்து. (௪)

ஈண்டுறி னித்தானை யேற்றே யிகல்விளக்கு
மூண்டுநா னேரினுநாண் முற்றுமுற்று—மீண்டுநகர்ச்
சாரணிக மேவுஞ் சமர்புரியிற் பல்பகலாங்
காரவுண ரெண்மையரோ காண். (௫)

பல்பகல்சென் றாலும் பரப்பவுணர் தானைசெற்று
வெல்குவனேல் வெஞ்சூர் வெகுண்டுதிறன்—செல்வர்
துணைவரையுய்ப் பானவரைச் சூழ்ந்தடுவே னெனு
மிணையிலன்சா கான்வரத்தா லீண்டு. (௬)

அன்னான் றனைமா லயன்றனக்கும் வெல்லரிதாற்
பின்னா ரவனைவெலும் பெற்றியார்—பன்னாட்
சமர்செயினுஞ் சாகான் சயமின்றி மீள
ணமர்தமக்கே யாகு நகை. (எ)

இத்தன்மை யாகவே யான்போ ரிழைத்திருந்தா
லுத்தமமாந் தூதுணர்த்த வொல்லுமோ—பத்திமையு
ளாரனைவார்க் காருள்செய் யாறிருதோ ளண்ணலன்றிச்
சூரனையார் வெல்வார் சுளித்து. (அ)

இங்கியான் போர்தா னிழைத்துவெல்வ னேனுமிற
மங்கியான் செய்பினண்ணி யச்சூரைச்—செங்கையார்
வேலாற் றடிந்தமரர் வெஞ்சிறைமீட் பாரொருநா
ளேலா வரல்வேண்டு மீண்டு. (கூ)

ஆதலால் வெஞ்சமர மாற்ற னியதியன்றே
யீதெங்கோ மாற்கு மிசைவன்று—தூதர்செய்
தன்மையாங் கொல்லோபோ தன்முறைமை யாமென்றான்
வன்மையார் மன்வீர வாகு. (க0)

இப்பா லனிக மிருப்பதனா லெய்தலரி
தப்பா லடைகுதுமென் னாவுன்னி—வெப்பார்
நிணவா யுடைவா ணெடுங்கரங்கொள் வீரன்
குணவாய் தலிற்சென்றான் கூர்ந்து. (கக)

மேதிக் கணனு மிளிர்வீர பானுவுமா
மாதிக்கத் தாரவுண ராந்தலைவர்—மாதிக்
குதக்கண்வா யில்புரந்தா ரோங்குமங்க ணின்று
கதக்கண் ணவுணவெள்ளங் காண். (கஉ.)

மன்றனறுந் தார்வீர வாகு வதைக்கண்டு
துன்று கடிக்காவல் சூழ்ச்சியுணர்ந்—தொன்றுநெறி
செல்லரிதென் றுன்னித்தென் றிக்குவழி போய்த்துருவ
னல்லதென்றாட் கொண்டகன்றா னன்கு. (கங)

மகேந்திரஞ்செல்படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா எச.

# கயமுகன்வதைப் படலம்.

செல்லுகையி லேந்தல்கீழ்த் திக்கு மாக்கலத்திற்
புல்லுமீ காமனின்விண் போற்றுவா—ளெல்லுங்
கதப்பற் றகலாக் கடுங்கூற் றனையான்
சதப்பத் திபமுகத்தோன் ரூன். (க)

ஈரா யிரமொய்ம்ப னெண்ணு றிலாக்குறையான்
காராழி யுண்டவான் கார்கறிக்கு—நீரான்
கரும்பா தகஞ்செய் கயமுகவன் கண்டான்
வரும்பா டையவனை வாய்ந்து. (உ)

கண்டான் கனன்றிவனென் காவல் கடந்துவந்தாய்
கொண்டாய்கொ லோமாயை கூர்வளியு—மண்டாதே
யேணையிலா ரேரிலூ ரென்றெணிணு யிந்நகர்நம்
மாணையறி யாயோ வணைந்து. (ந)

மூள்சினத்துற் றேன்வீர மொய்ம்பவல்லை மாய்ந்தனைநீ
மீள்கின் றனையல்லை மேதகுசு—ரான்புரியிற்
சேர்கின் றனையீது சீயவிய லாயவுழை
பேர்கின்ற தாகும் பெரிது. (ச)

சார்தற் கருமிலங்கை தாவியிவ்வூர் காணவந்தா
யோர்தற் கருமாயை யுற்றையுனை—யார்விடுத்தா
ரால மயின்றவனோ வம்யோ ருகத்தவனோ
ஞால மயின்றவனோ நன்கு. (ரு)

சுற்றுநின் ருயிநகர் சூழவொற்றாய் வந்தனைதேர்
வுற்று ருனையுய்த்தா ருற்றதென்கொ—லிற்றுயு
ளுவியுய்தி யல்லைசிறை யண்டார் செயலுணர்வான்
மேவினைநீ போலும் விரைந்து. (சு)

வான்றோய் கனலின் மருத்துந்தப் பூளைபோ
லூன்றோ யுனைக்கொண்டே மூற்றதின—னின்றோ
னெனச்செலுமென் முன்னில்லா யெங்கன்றீர் வாயென்
றுனச்சொற் றுரப்பினன்றெவ் வோர்ந்து. (எ)

இவ்வா றியம்பி யெதிரி லெழும்போது
தெவ்வாங் கயாசுரன்முன் சென்றுகொடு—வெவ்வாயோய்
சாவா யினியென் றலஞ்சார்ந் துளாய்கொலாம்
வாவாவென் றுன்வீர வாகு. (அ)

உன்னுங் கயமுகனோ ரோங்கல் பறித்தெறிய
பன்னருந்திண் வீரன்றன் பாற்படலு—மன்னதிரும்
பூதிவட்டு விண்டமைபோற் போயதுகண் டாயிரங்குன்
றோதியன்மேல் விட்டா னுருத்து. (௯)

விற்றூணி வீரன்மேல் வேழமுகன் விட்டவெலாங்
கற்றூண்மேல் வீழ்மட் கலம்போன்ற—நற்றூதன்
றிண்மை தெரிந்து திகைத்தா யிரமரம்பேர்த்
தொண்மையன்மேல் விட்டா னுருத்து. (௧௦)

தாராரு மொய்ம்பன் றருவான வையெலாங்
கூராரும் வாளாற் குறைத்தெறிந்தான்—காரம்பற்
பேரான்கல் பேர்ப்பப் பெருந்தலையன் றன்புழைக்கை
யோராயிர மறுத்தா னுற்று. (௧௧)

தீயனீ ராயிரங்கை சேர்த்திவனைக் கொண்டணைவா
வாயிடுவ னென்றுவர வாளினாற்—சாயத்
தறித்தா னொருசார் தழுவா யிரங்கை
வெறித்தார் விறலோன் விரைந்து. (௧௨)

பற்றா யிரங்கையான் மாமுகத்தோன் வீரன்யார்
பெற்றாரிற் குங்கா லிளவலுங்கை—முற்றாக
வீழ்தருவா னாந்தகத்தால் வெட்டினான் வெய்யவன்வீழ்
போழ்தருவா னோர்ந்தனனப் போது. (௧௩)

துன்று கரமிழந்த தூங்கன் முகனவனைக்
கொன்றுயிரைக் கொள்வமெனக் கொண்டுளத்திற்—குன்றனைய
தோளாற் குகன்றாதன் றோண்மோதிக் கோடுடைகார்
கோளார்ப் பெனவார்த்தான் கூர்ந்து. (௧௪)

கரத்திலொளிர் வாளோச்சிக் காளை யவனை
யுரத்திலுயி ரோவ வுலைத்தா—னிரத்த
முடலினின் றுந்தியா யோடி யுவரிக்
கடலின்மே விற்றே கடிது. (௧௫)

குன்றுறழ்தோண் மீளியவற் கொன்றகலக் கண்டவுணர்
துன்றுநெறி தோறுந் தொடர்ந்துவந்தார்—நின்றுசமர்
செய்தா லிவரோடு செல்லுநெடுங் காலமிது
நொய்தாமென் றோர்ந்தா னுனித்து. (௧௬)

சீர்தருமா வீரனன்னார் சேனையெங்குஞ் சூழ்தாலாற்
போர்தருவேற் புங்கவன்றான் போற்றியே—சூர்நகரி
லாய்தற் கரிய வணுவுருவங் கொண்டுகுணை
வாய்தல் சிகரியுற்றான் வந்து. (௧௭)

கயமுகன்வதைப்படலம் முற்றிற்று.

ஆ. திருவெண்பா ௯௯.

# நகர்புகு படலம்.

கந்தவே ளெந்தை கருணைகொடு தூதாக
வுந்தவே வந்த வொருவீர—னந்த
வியப்பார் மகேந்திரத்து மேவுவளம் யாவு
முயப்பார்த் துணுவா னுளத்து. (௧)

அண்டத் தமரு மசல மருவியொடு
மண்டத்த வந்தனைகம் மாநிலைவிண்—கொண்டல்
பலவுஞ் சூழீஇப் பயிலங் கதியி
னிலமுற் றனமா நிலை. (௨)

ஆழியார் ஞாலத் தசலஞ்சூ ராணையாற்
பாழியங்கே ராநின்ற பான்மையே—சூழனிகத்
தெண்ணிடவு மேலா தெனினவையோர் கண்ணிலா
னெண்ணிடவு மேயுமோ வீங்கு. (௩)

பன்னுகரிக் கூடம் பதினா யிரமிரத
மந்நிலையகூ தேமா வதற்கிரட்டி—யின்னுந்
துருவிடினோர் யோசனையே தோற்றுமெனிற் சீர்த்தி
மருவிநகர்க் கொப்பாமோ மற்று. (௪)

ஆழி யகழியண்டத் தார்மாவெற் பேர்மாடஞ்
சூழிஞ்சி கோபுரங்கள் சூரியற்கே—யூழிற்
றிறங்கொணகர் செய்தயன்மார் தேர்ந்துபின்ன ரிந்தப்
பிறங்கொணகர் செய்தார் பெரிது. (௫)

அண்டங் களின்மல் கரும்பொருளெ லாங்கண்டே
னெண்டருமமேய்ந்ததயை யெவ்விடத்துங்—கண்டிலேன்
மஞ்சிறைகொண் மாநகரில் வானவர்க ளோடவற்றை
வெஞ்சிறைகொண் டான்கொலோ வேந்து. (௬)

மேவுசத யோசனைவின் மேவியறு யோசனையா
மாவகலம் பெற்ற மணிகிளர்பொன் — னாவணங்க
ளெண்மேவு நாற்படையு மெய்தவிட மின்மையாற்
சேண்மேவுஞ் சேனை சில. (௭)

ஓங்குமணி மேற்றலத்தி லொள்ளலரி மேவுதலுந்
தீங்கனியீ தென்னச் சிறார்பற்றித் — தாங்கறித்துத்
தீயுறைப்ப விட்டிளைய ரேர்ந்தவர்த நற்றாயர்
தூயகங்கை நீரளிப்பார் சூழ்ந்து. (௮)

கொல்லவுணர் கோனாணை கொண்டுகெட னீர்படீஇ
மல்லனாறுங் காவளவி மாக்களிபோன் — மெல்லமென்கான்
மின்சான் முகிறவழும் விண்மா ளிகைதோறு
மன்சா ளரத்துலவும் வந்து. (௯)

ஏதமென்ப தெட்டுணையு மில்லா ரெழில்கூர்ந்த
மாதரார் விண்டொருநீண் மாடங்கண் — மீதுவருங்
கோளுருமுப் பற்றாக் கொடுகழுங் கம்மனையா
நாளுமெறிந் தாடுவார் நன்கு. (௧௦)

செங்கதிரோன் றேரிவர்ந்து செல்லச் சிலமடவார்
தங்கண் மகாரையதிற் றான்வைத்தூர்ந் — திங்குக்
கொடுவா வெனவே கொடுபோ யவர்முன்
விடுவா னெனிற்றவமே மேல். (௧௧)

காரவுணர் காரிகையார் கால்வருடிக் காட்டேவ
லோரமரர் மாத ரியற்றுவரைந் — தாரு
மணியு மிருநிதியு மற்றுளவும் வேண்டி
னணியுதவி யேதிரியு மாங்கு. (௧௨)

மாசி லிருங்காலேர் மாட முறைசிப்ப
வாசநீர் கொள்கலவை வாரிதிமன் — வீசவே
யீரமொளிர் வெய்யோ னினிது புலர்த்திபட
வாரவுணர் மேவுவா ராங்கு. (௧௩)

விண்ணாறு செல்கின்ற வெய்யோன் றனைப்பற்றிக்
கண்ணாடி யிற்கவினைக் காரிகையார் — பண்ணாகக்
கண்டெறிவ ரங்கவர்செய் காமுறத்தேர் மாவினைக்கைக்
கொண்டளிப்பர் பின்விடுவர் கூர்ந்து. (௧௪)

விண்டோய் நெடுமாட மீதுசெலும் வானவரைக்
கண்டோர் சிலமடவார் கைப்பிடீஇத் — திண்டோள்க
டுன்னமணந் தின்பநலந் துய்த்துநீர் போதிரா
லென்ன விடுப்ப ரிசைந்து. (௧௫)

குழலினொலி யாழினொலி கோட்டினொலி வார்கொண்
முழவினொலி பாட்டின் முழக்கம்—விழவினொலி
மேலை யொலியாவு மேதினியைக் சூழ்கிடக்கும்
வேலை யொலியின் மிகும். (௧௬)

மானநெடு மாளிகைகண் மன்று வணத்திலிந்தொப்
பான மருப்பிருங்கை யத்திசொரி—தானநீ
ராறுபடர்ந் தாங்கேகி யாடுசிறார் வண்சுண்ணஞ்
சேறுபடு மாறு செயும். (௧௭)

சொற்கலையும் வாட்கலையுஞ் சொல்பல் படைக்கலையும்
விற்கலையு மாய வினைக்கலையு—மற்கலையு
மாற்றுபுல மிக்கோ ரவிர்கட் புலனுக்குத்
தோற்றுபுலந் தோறுந் தொகும். (௧௮)

நிரைதிரைமூப் புற்று நலிகின் றவரை
யுரைநமனு வாவியுலை வோரைக்—கரைநிரப்புக்
கொண்டவரைக் கூற்றனைய கொல்பல் கொடும்பிணிநோய்
கண்டவரைக் கண்டிலமங் கண். (௧௯)

கின்னற் கழைநீர் கமழ்நெய் கடுந்தேற
லின்னற் பயவாரி யேசுருங்கி—மன்னவர்மன்
றன்றுணை கொண்டிநகர் சார்மனைதோ றுங்குளறு
மன்று மருவுமால் வந்து. (௨0)

பொன்னிறத்த வன்னமஞ்ஞை பூவைபுறாக் கிள்ளைமுதற்
பன்னிறத்த புள்ளினைய பல்வளங்கூ—ரிந்நகரிற்
கோதில் கொழுநலங்கொள் கோதையர்தங் கோல்வளைக்கைப்
போதி லிருப்ப புரிந்து. (௨௧)

கள்ளாற் றலினுங் களிப்பார் நறவினைக்கைக்
கொள்ளாக் கிளியாண் கொளவருத்தி—யுள்ளார்வ
மல்கச்சே வல்லிரங்க மன்னெகிழ மென்பெடைமேற்
புல்கப் புணர்ப்பார் புரிந்து. (௨௨)

இடமா ரியன்மாடத் தேரிரதி யேயென்
மடமாதர் மாரனேர் மைந்தர்—தடமார்
புரவுறவே புல்கி யுவப்புறுநீர் மையா
லிரவுபக லோரா ரினிது. (௨௩)

பன்னசத்தின் சோரி பலியுடனேக் கித்துணர்தூய்
மன்னகத்தெய் வம்பரவி வான்கடவு—டன்னை
நெறியாற் றுறப்படுத்தி நேரிழையார் பல்லோர்
வெறியாட் டயர்வார் விழைந்து. (௨௪)

மூந்நீ ருவரியெனு முன்னும மன்னுமல்
வெந்நீர்மை யுற்றமர்செய் வெங்களத்தார்—செந்நீர்போய்க்
கந்நுலவிப் பாய்ந்து கருங்கடலைச் செங்கடலா
யங்க ணிழைத்தவே யார்த்து. (எ0)

இத்திறமார் வெய்யோ னிருங்கணங்கட் கேமனெனு
வுய்த்துணர்ந்தே யும்பரஞ்சி யோடினர்—கைத்திறத்திற்
குன்றோர் மாலீச கொன்பூ தரைமுடித்தே
மின்றோர் மிசைப்புக்கான் வேந்து. (எக)

அன்னான் செயல்கண் டழற்கண்ணன் வேங்கெதிர்போ
யுன்னுடல் காண்ப னொருகணத்தி—லென்னு
வொளிதருவான் சூல முலையா தவன்மேல்
விளிதருவான் விட்டான் வெகுண்டு. (எஉ)

வருமாப் படைநோக்கி மன்சூர்க் கிளவ
லொருமாப் படையுமுய்க்கா தூற்று—னிருமாகர்
தோற்று னெனவார்த்தார் சூலம் வரைமார்பி
லேற்று னொசிவுற்ற திற்று. (எங)

சூலமுறு மூற்றமும்வெஞ் சூரிளவ லாற்றலும்பார்த்
தேலவிவன் பெற்றதுபே றிஃதுபோற்—சாலக்
கருதண்ட மெங்கணுமே காணரிதென் றேய்ந்தா
னொருதண்ட முய்த்தா னுருத்து. (எச)

உய்த்ததண்டஞ் சாரதித னுத்தமாங் கங்கொளலு
மைத்தருவ னேக்கி மனம்புழுங்கிக்—கைத்தலத்தா
ரோர்கதையை யோச்சவஃ தோரிமைப்பிற் பூதமன்னன்
மார்பகத்திற் றாக்கிற்று வந்து. (எரு)

தாக்கியவவ் வெல்லைத் தழற்கணன்மூக் கார்நிறம்வாய்
தேக்கியசெந் நீரோடிச் சிந்தினிய—லாக்க
மறந்தா னுணர்வெனினும் வன்பிழந்தா னல்ல
னிறந்தா னிலனின்று னேய்ந்து. (எசு)

ஆரயர்வுற் றங்கிமுக னங்குநிற்க வோர்வலவற்
றேரி னிறுவிவரு தீயவன்மேன்—மேருவன்ன
வோர்மலையைக் கீண்டெறிந்தா னுன்னுஞ் சுமாலியெனு
பேர்மலையுந் தொல்லோன் பெரிது. (எஎ)

அன்னான் விடுத்தவெற்பை யந்தருவன் பங்தெணவே
மின்னார் காம்பற்றி மீட்டுமுந்தப்—பொன்னுரு
மார்பிலது தாக்கச்சு மாலி புலம்பிநெய்த்தோ
ரார்புவியில் வீழ்ந்தா னயர்ந்து. (எஅ)

திண்டிபொரு தண்டேந்தித் தானவர்கோன் மார்பிலுய்க்க
விண்டிடவஃ தோர்வயிர மேவுதண்டங்—கொண்டங்
கிடித்தெனக்கை யாலெற்ற வேந்தனகைத் தோர்த
னடித்தலத்தாற் றள்ளினா னார்த்து. (௭௯)

தாணெறியி லுந்துதண்டி தானமெழுந் தொல்லைவெய்யோன்
றேணிரைமேற் பாய்ந்து துகைத்தோய்ந்தா—னீணகத்திற்
கோடரங்க டோறுங் குதித்தடிகள் சோருமோர்
கோடரமே போல்வான் கொதித்து. (௮0)

சென்னிகரந் தோள்பூதன் செல்வதறி யான்சிறிய
னென்ன வரிமுகத்தோ னீயெனக்கை—தன்னிற்
றுடைக்கவவன் றன்புறீஇத் துப்பிழந்து பேர்ந்தான்
படைக்கணவர் பாங்கிரிந்தார் பார்த்து. (௮௧)

பூத ரிரிவுகண்டு போற்றிலக்கத் தெண்மருந்தேர்
மீதிவர்ந்து சென்றெறுழ்கொள் வில்வளைஇக்—காதுசரஞ்
சிங்கமுகன் மேற்பொழிந்தார் தீங்கின்றிப் பாங்குற்ற
வங்கதுகண் டெட்கினரே னற்று. (௮௨)

சிலர்தே ருடைத்தான் சிலர்தே ருலைத்தான்
சிலர்தே ரெடுத்தெறிந்தான் சேணிற்—சிலர்தே
ரொடித்தான் சிலர்தே ருதைத்தான் சிலர்தே
ரடித்தா னவுணர்க் கரசு. (௮௩)

இத்திறமாற் றெல்லை யெறுழிலக்கத் தெண்மருமே
தத்தமுயிர் தாங்கித் தனுவோடு—மெய்த்திறல்போய்ச்
சாய்ந்தார்தேர் மேற்புக்கான் றானவர்கோன் றிண்வாகை
வேய்ந்தா னதுகண்டான் வேர்த்து. (௮௪)

மாமேரு நேர்வரிவில் வாங்கிவெங்கோல் பல்கோடி
மாமேகம் போற்பொழிந்து வாகுநிற்பத்—தாமேவி
யங்கடர்த்திப் போராற் றவுணர் தலைதுணிந்து
வெங்களத்தில் வீழ்ந்தார் விதிர்ந்து. (௮௫)

கரிபரிதேர் பட்ட கடுந்தகுவர் பட்டார்
கிரியிற் பிணங்கள் கிடந்த—சொரிகுருதி
நீத்தமவண் மாயாம னின்றவெலாங் கொண்டேகி
மாத்தரங்கத் துய்த்ததே வாய்ந்து. (௮௬)

உரந்துமிக்குந் தோடமிக்கு மொண்வீரன் றன்னோர்
சரந்துமிக்குங் கோடி தலைக—டரந்தவற்றை
யண்டரங்க மேழுகடந் தாழிவரை தாவியப்பா
லண்டமுமே போழ்ந்துசெலு மார்த்து (௮௭)

இவ்வண்ணம் போர்செயக்கண் டெண்மடங்க னன்முகன்றன்
மைவண்ண நூறு மகாருமெழீஇச்—செவ்வண்ணத்
தேரினிற்போய் வில்வளைஇத் திண்புயத்தோன் மேற்பகழி
மாரியெனப் பெய்தார் வளைந்து. (அஅ)

வீரனது காணு விசிகமெண்ணில் கோடிவந்திற்
சேரவுய்த்து மாற்றினான் றீயமைந்தர்—கூரியகோ
லார்கோடி கோடிவிட வையனவை நீக்கியம்பாற்
றேர்கார் முகம்வீழ்த்தான் றேர்ந்து. (அகூ)

ஏந்தறனை நோக்கிமைந்த ரேண்விற் றொழில்வல்லோய்
நாந்தகமா வினைசெய்து நாடெனக்கீழ்—பாய்ந்தானல்
கொள்வாள் கொடுவரக்கண் ணுற்றவரும் வாள்கொடுபோர்
கொள்வான் வளைந்தார் கொதித்து. (கூ0)

வீரன்றோண் மார்பாதி மெய்யிலக்க நாடிவாட்
போரியற்ற மைந்தரங்கம் பொன்றிலகண்—டாரவனைப்
பற்றியடு வோமென்னாப் பற்றவல்லோன் வாளோச்சி
மற்றவரை மாய்த்தான் வளைத்து. (கூக)

விண்ணவர்கள் போற்றிடமா வீரனெடுந் தேர்புக்கா
னெண்ணவுணன் மைந்த ரிறந்தமைகண்—டெண்ணவிந்து
வாளுண்ட தென்றன் மகாரையென்ற பின்சிரமுந்
தோளுஞ் சுமந்துநின்றேன் சோர்ந்து. (கூஉ)

என்னாறு மைந்தரையு மீண்டெவருங் காண்டரவென்
முன்னாறு செய்து முடித்துநிற்பான்—பின்னாங்
கிதன்மேல் வசையுளதோ வெண்ணார் நகைத்தற்
குதன்மே லுறுவதில்லை யொன்று. (கூங)

பொன்றினரை யுன்னிப் பொருமுவதி லொன்றுமிலை
பன்றரிய லாரையட்டுப் பாலனையும்—வென்றிமைப்பிற்
றேவரா மேவரையுஞ் செற்றதலம் பார்விசும்பென்
மாவுலகு மாய்ப்பனென்றான் மன். (கூச)

என்னநவின் றேதன் னிரதமூர் பாகனைப்பார்த்
துன்னருநம் மக்க ளுயிர்குடித்தோன்—முன்னருய்க்க
வென்றலுநன் றென்றுகைப்ப வேந்தல் வரலுமையன்
முன்றனித்தே ரோடுற்றான் முன். (கூரு)

சீயமுகன் சீறிச் சிவனளித்த சேயலைநீ
யேயிலக்க ரெண்மருட்சி ரேந்தலோ—மேயவெழி
லூரிலுற்ற தூதுவனோ வோதினையர் தம்முளே
யாரைநீ சொல்லுகென்றா னீங்கு. (கூசா)

முனைவனரு ளாறு முகற்கடிய னானேன்
முனைநம்மூ ரட்டொற்றாய் முந்து—முனையினும
ராரையுமே யோர்கணத்தி லட்டுவெல்வா னின்றனன்பேர்
வீரமொய்ம்ப னென்றான் வியந்து. (௯௭)

வீரன்றன் மாற்றம் விடம்போற் செவியேறச்
சூரன் றுணைவன் சுளித்துரைப்பான்—கூரச்
சிறியவரை வேற றிறலிலரைக் கோற
லறிதியிஃ தாண்மைப்பாற் றன்று. (௯௮)

நூற்றுவரா மைந்தரையு நொய்தினட்ட நின்னுயிரைக்
கூற்றுவற்கூ ணாகக் கொடுப்பனா—லேற்றமுறு
நின்வலியுஞ் சேய்வலியு நீளமரர் தம்வலியு
மென்வலியி னீக்குவேன் யான். (௯௯)

உம்பர் சிறைவிடுப்பா னுன்னிவந்தீர் தானையொடு
மிம்பருயிர் வாழ்க்கை யிழந்தீராற்—பம்புவிதி
தன்னின் முடிந்தவுயிர் தான்மீண் டுடலுறினு
மென்னினெதிர் வார்பிழையா ரிங்கு. (௧௦௦)

என்பதுதேர்ந் தேந்தனகைத் தேந்துசிலை வாங்கியீ
ரொன்பதுகோன் மார்வத்தி லுய்த்திட்டான்—வன்பினவை
பட்டொசிந்து வீழ்ந்த பதகனுஞ் சீயமுகன்
விட்டனன்றன் றண்டம் வெகுண்டு. (௧௦௧)

தண்டந் தனையேந்த றாவிலயில் வாளியாற்
றுண்டஞ்செய் தாயிரஞ்சோ றாண்டினான்—றிண்டலையி
லன்னவைதூ ளாய்வீழ்ந்த வாளிமுகன் சூலமொன்று
மின்னவன்மேல் வீசினான் வேர்த்து. (௧௦௨)

அண்டவருஞ் சூலத்தி னாற்ற றனைநோக்கி
யெண்டகநே ரம்பா யிரம்விடுத்தான்—வண்டுகளை
வீட்டியது மேற்செல்ல மீட்டுமோ ராயிரங்கோன்
மோட்டிறைவன் மேலுய்த்தான் முன். (௧௦௩)

ஏவியவவ் வேலை யெலாஞ்சூலஞ் சிந்தியே
மாவயவர் பன்வீர வாகுமேன்—மேவ
விலக்கர் நடுங்கினா ரெண்மர் மெலிந்தா
ரலக்கணுற்றா ரண்ட ரயர்ந்து. (௧௦௪)

தோளார வந்தகொடுஞ் சூலத்தை வீரமொய்ம்பன்
வாளாற் குறைத்திட்டான் மற்றதிற்ற—தாளா
மிளைஞ ரிலக்க ரெறுழ்க்கணவர் வானோ
ருளைவகன்றே யோகையுற்றா ரோர்ந்து. (௧௦௫)

அக்காலை நந்திகணத் தையன் வடவையினு
மிக்கார் வெகுளியனுய் வெய்யவனை—யிக்காலை
யாவிகொள்வே னென்றுமு னந்தகற்கொன் மன்படையை
மேவியர்ச்சித் துய்த்தனன்றம் மேல். (சு0சு)

அப்படைதீக் கான்றுலக மச்சங் கொளவாலு
மெப்படையோ வென்று னிதுபுலவர்—வெப்படையா
மென்று னிறைவனதா மிப்படையே யெற்படுக்கு
நன்று மெனோகைத்தா னன்கு. (சு0எ)

அரிமுகனேற் றந்நாட்கொ ளத்தன் படையை
யரியவழி பாட்டினுய்த்தா னஃதுந்—திரிமுனது
நட்டவர்பா னட்டவர்போய் நண்ணிமீண் டாங்குறீஇ
விட்டவர்பான் மேவினவே மீண்டு. (சு0அ)

தின்படைதான் மீளச் சயமொய்ம்ப னுந்தகஞ்சூர்
பின்புடையான் பேரமர்செய் பேற்றினைப்பார்த்—தின்பண்
சிவன்வரமோ செய்தவமோ திண்டிறலோ விங்க
னெவன்பெரிதென் றேயிசைப்பேன் யான். (சு0கூ)

ஏவு படையா விறையுமெய்யி னூறிலான்
மேவலன்செவ் வேள்கரத்து வேலன்றி—வீவுறு
ஞதலிற்போ ராற்றி யணிதே ரனிகமெலாங்
காதுகிற்பே னென்றுன் கணத்து. (கக0)

இத்திறந்திண் மொய்ம்பியம்பி யேழிருகோல் கொண்டவுணன்
சித்திரத்தே ருந்துபவன் சென்னிதள்ள—வெய்த்தவனுந்
தாரணியில் வீழுமுனந் தானவர்கோ னோர்தண்டம்
வீரன்மேல் விட்டான் விரைந்து. (கசுக)

உறுதிறன்மா வீர னுரம்புகுமா தண்டஞ்
சிறுதுகளாய்த் தூமமாய்ச் சென்ற—தெறுழினவல்
காரா ரவுணன் கவின்றேரை வீட்டிஞ
னோரா யிரங்கணைக ளுய்த்து. (ககஉ)

தேரழிந்த மாத்திரையிற் சியனுயிர் கோடுமெனுப்
பாரிடர்மா வோங்கல் படைவீசிச்—சாரிலுற
வெய்யவனோர் தேர்புகா மேவா யிரம்விலைநூற்
றையிருகை யேந்தினு னூர்த்து. (ககங)

பிடித்தவிற்க டோறும் பிறங்குகுணங் காட்டத்
துடித்தவுயி ரண்டந் துளங்கி—வெடித்த
கணக்கமையா வாசுகங்சன் காரிற் பொழிந்தான்
பிணக்குவையாய்ப் பூதருற்றார் பேர்ந்து. (கககச)

சென்னிநிறந் தோள்கரங்கள் சிந்தினா ரூன்குருதி
மன்னிணங்கள் சிந்தினார் வன்பூதர்—துன்னியே
பூநிரந்த வான்றூர்த்த பூமா திரமறைத்த
வேலையண்ட மெங்குமுற்ற வே. (௧௧௫)

இசையா ரெழுவரையு மீர்வவா னேந்து
மிசையார் கிரிபோழ்வ மேவெண்—டிசையானை
யங்கமுகா வார்கலியி லார்கனலை யாற்றுவன
சிங்க முகாசுரன்கோல் சென்று. (௧௧௬)

ஊனங்க மீர்த்துக்கொண் டோடுவன வூன்கவர்ந்து
சேனங்கள் செல்வ சிவணுமே—யீனங்கண்
டையோ வெனவண்ட ரார்ப்பவிடு சீயமுக
வெய்யோன் விசிகம் விரைந்து (௧௧௭)

முற்பகலி லொன்றை முயன்றொருவன் செய்வினைது
பிற்பகலி னல்குமெனல் பேச்சன்றோ—வெற்பகலில்
வன்படையுஞ் சூரிளவல் வாளிகொன்று கூளிகையயுந்
தன்படையுந் தாக்கினவே சார்ந்து. (௧௧௮)

சீயமுகன் காண்டந் திசைவா னெறிமறைப்ப
மேயவினன் மேற்றிசைபோய் மீண்டிலா—னையபடை
கொம்புகுணில் பேரிசெலக் கொம்மெனப்புள் ளம்மசுற்ற
செம்புனனீர் சென்றதே சிந்து. (௧௧௯)

கருங்கடலிற் செந்நீர் கலந்துபாய் தோற்ற
மிருங்கம் பளம்விரித்த லேய்க்கு—மொருங்கே
பவளக் கொடிகள் படர்வனவு மானுந்
திவளக் கிளைத்துச் செறிந்து. (௧௨௦)

இத்திறமாச் சிங்க னிகல்விளைக்க வீரன்கண்
டத்தமன்வில் வாங்கினா னார்ப்பெழுப்ப—மைத்தகுவர்
கைதளர்ந்து பின்காட்டிக் கால்சாய் தருவென்ன
மெய்தளர்ந்து வீழ்ந்தார் மெலிந்து (௧௨௧)

அண்ட மதிர வவிர்நா ணொலியுறுத்தித்
திண்டனுவிற் காண்டஞ் சிதறியே—கண்டகன்முன்
விட்டவன்போர்க் கோலனைத்து வீத்தறுத்தா னீற்றுயிர்க
ளட்டவன்போல் வீரமொய்ம்ப னங்கு. (௧௨௨)

எங்கெங் கவன்பகழி யெய்தி யடர்த்தனவோ
வங்கெங்கு நீழல்போ லாளிமொய்ம்பன்—வெங்கதத்தி
னுய்த்தகணை போயவற்றை யூறு படுத்தினவே
மைத்தகுவ னஃதுகண்டான் வாய்ந்து. (௧௨௩)

வில்லெடுத்த துன்பொருட்டா மேவுறுதோண் மார்புகரம்
பல்லெடுத்த சென்னி பதந்துணிக்கேன்—கொல்லம்பா
லெஃன்ணிலங்கை யுள்ளே ளிருகையுடை நீயேற்பாய்
கண்ணின்றஃ தீர்வனது காண். (௧௨௪)

ஏமரமர்ம கேந்திரமா மேர்நகரி லீண்டு
மமாகத்தென் சேனைகளி லாட—னிமிருங்
குமாறிற் கொனாற்றமாக் கொண்டவெலா முற்று
முமிழுவிப்பே றுண்பனுயி ருற்று. (௧௨௫)

என்னுமுரை வெய்யோ னிசைப்ப விறல்வாகு
பன்னுகின்ற தென்ன பலபலங்கின்—னுன்னுபடை
வெல்வல் லனிகமெலாம் வீட்டி யுனைத்துரப்பேன்
வில்வன்மை காண்டியென்றான் வேர்த்து. (௧௨௬)

சொற்றிடலும் வெய்யோன் சுளித்தா யிரம்விலங்கைப்
பற்றி வளைத்துவெங்கோல் பத்திலக்கம்—வெற்றிமொய்ம்பன்
மேல்விடுத்தா னத்தொகையே விட்டவைதீர்த் தேந்தலவன்
மேல்விடுத்தா னத்தொகையே மேல். (௧௨௭)

வீரன் விடுகணையை வேந்தனோர் பத்திலக்க
மீரம்பிற் சாய்த்தா யிரகோடி—யாரடலே
வேந்தன் மிசையுய்த்தா னேந்தலுமே யத்தொகைக்கோல்
வேந்தன் மிசையுய்த்தான் வேர்த்து. (௧௨௮)

தாரார் புயன்கோற் றகுவனம்பைப் பார்படுத்த
வீரா யிரங்கணைகொண் டேந்தலையன்—போரார்
துணைநூறு வில்விறுத்தான் றோன்றலொர்விற் பற்றக்
கணைநூறு கோடியுய்த்தான் காய்ந்து. (௧௨௯)

செந்நீர் நிறத்திழியத் திண்மாச் சிலைகுனித்து
வெந்நீ ரிலக்கங்கோல் விட்டிடத்தெவ்—வந்நீர்மை
காணா விருதுநாட் காரினவை விட்டிறுத்தான்
மாணா ரடல்வீர வாகு. (௧௩௦)

சீயன் கணையைச் சிலீமுகந்தூய் மாற்றியோ
ராயிரங்கோ லுந்தியந்தே ராங்கழித்தான்—றீயனோர்
வையமேற் பாய்ந்துதனு வாங்கவவ னாயிரம்வி
லையணம்பி னாலறுத்தா னார்த்து. (௧௩௧)

தெவ்வா யிரந்திண் சிலைகளும்போய் மாதுயர
வெவ்வாழி வீழ்ந்திலைமை வேதாள—ரவ்வானோர்
மாலயன்மார் கண்டார்த்தார் மற்றதனைக் கண்டனனா
லாலங்கர் சீயமுக னாங்கு. (௧௩௨)

மாசுரர்தம் மார்ப்புமயன் மாலா தியரார்ப்புஞ்
காசுரவோ ரார்ப்புமின்னே காண்பலெனு—வாசுரவூர்
வாசமூறு வாளவுணன் மாயைதரு வன்மாயா
பாச மெடுத்தான் பதைத்து. (கருரு)

ஓட்டிக் கடும்போர்செ யொட்டலர்க டம்மையொர்பாற்
கட்டிக்கொண் டாவி கடிந்தேகிக்—கிட்டியே
சேங்கதிரோன் றோன்றுஞ் சிலம்புய்த்துப் போரமே
யங்கமர்கென் றுவெறிந்தா னார்த்து. (கருசா)

வாரிதியோ ரேழுமொன்றாய் வந்தாங் கதுசூழ்போ
யாரிருட்கோர் வைப்பா யனல்சிந்திப்—போதனைச்
சாரதரும் வானவருந் தாநோக்கி யேங்கினர்
வீரனுங்கண் டோர்ந்தான் வெகுண்டு. (கருகு)

ஆற்றலுளா னிவ்வா றறிந்தே யதுதீர்ப்பான்
மாற்றுபடை யொன்றும் வழங்காமுன்—காற்றினுற்றே
மீவரையும் வெல்புயத்தான் வீசிடுமா பாசமதங்
கேவரையும் யார்த்ததுவே யீர்த்து. (கருசு)

தானைமன்னர் பூதர் தலைவரெண்மர் வீரமொய்ம்போ
டேனையரும் பாசத் திடையுற்றார்— மானைதர
மாற்றாரிற் பாருணர்வு மன்னினது நீப்பனெனத்
தேற்றாவா செய்துளது நீங்கு (கருஎ)

தொல்லுணர்வு மாழ்கித் துயர்வாரை வாளெறிக்கொண்
டொல்லுதய வெற்புய்த் துடனுறைந்த—தல்லவுணர்
மாற்றலரா மேவரையு மாய்த்தினுயிர் கொண்டனனே
னாற்ற லழகிதென்றா னார்த்து. (கருஅ)

ஓடினன்கொல் லோவமர்க்கென் றுற்றதுமின் றேவெங்குந்
தேடினன்காண் கில்லன் சிறுவனெங்க—னீடினன்கொல்
சாடினனென் றோதல் சழக்கதுசொல் லோதம்பி
வீடினனன் றேவென்றான் வேர்த்து. (கருகூ)

சிங்கமுக னிவ்வண்ணஞ் செப்பினனன் றார்க்குமெல்லை
யங்கவன்மு னோர்தூத னண்ணியே—துங்கமுறு
சீர்த்ததிறற் பூதரொடு சேய்பா சறையிருந்தான்
பார்த்துவந்தே னென்றான் பரிந்து. (கசா0)

ஒற்றனுரை கேளா வுறவெற் பொரறக்கஞ்சி
மற்றவனுற் றான்கொல்லோ வல்லையிற்போ—யிற்றையன்றன்
போர்முடிப்ப னென்றேகப் புங்கவர்க ளோடலுற்றா
ரோர்குகற்றாழ்ந் தொற்றுரைப்பா னுற்று. (கசாக)

ஐயகேள் பூத ரனிகத் தலைவர்போய்
வெய்யசம ராற்ற வெகுண்டுவெய்யோன்—கையிலுற்ற
சூழ்ச்சிக் கயிற்றினாற் சூழ்நமரை வீக்கியிட்டான்
வீழ்ச்சி யுறவுதய வெற்பு. (௧௪௨)

ஆண்டகையே யென்றா னுரைகேட் டரிமுகத்தோன்
யாண்டுளான் யாண்டுளா னென்னவே—தூண்டிடுதேர்
மேலுளான் சூழ்படையின் மேவுவான் வீழூழின்
பாலுறுவான் போலுமென்றான் பார்த்து. (௧௪௩)

என்னலுஞ்செவ் வேணகையா வேற்றிருக்கை நீங்கியெழிற்
பொன்னங் கழலார்ப்பப் போந்துபுறந்—தன்னிரதம்
வந்து கொணர்தியென்றான் வல்லையவ னுய்ப்பவதின்
மைந்த னிவர்ந்தான் மகிழ்ந்து. (௧௪௪)

வெண்கவரி வட்ட மிளிர்கவிகை குற்றுடைவா
ளொண்பொன் னடப்பை யொளிர்படியங்—கொண்முறையில்
வேந்திமையோ ரிந்திரன்கான் மேவுதன தன்னருண
னேந்திவரச் சென்றா னினிது. (௧௪௫)

சேயமர்மேற் சேற றெரிந்து திறற்பூத
ராயிரவெள் ளத்தவரு மார்த்துநனி—காயெரிகால்
சூல மெழுக்கணிச்சி தோமரம்பன் மாமரம்வெற்
பேலவெடுத் தேசூழ்ந்தா ரேய்ந்து. (௧௪௬)

அடித்தார் பறைகள்சங் கார்த்தனர்வேள் சீர்த்தி
படித்தார் கவிகைவட்டம் பாங்கிற்—பிடித்தார்தம்
வீரமெடுத் தோதினார் வெள்ளேற்றுக் கேதனங்கள்
சாரதர்கள் கொண்டடைந்தார் சார்ந்து. (௧௪௭)

மூவர் முதல்வந்தான் முக்கணான் சேய்வந்தான்
மேவலர்தம் மேறுவந்தான் மேவிடுமென்—பாவிலருட்
சென்றிடர்தீர்ப் போன்வந்தான் றேவதே வன்வந்தா
னென்றனவே சின்ன மெலாம். (௧௪௮)

பூதர் புடைசூழப் புங்கவர்கள் போற்றவையன்
காதலுறு பாசறையின் கண்ணீங்கி—யோதும்
பறந்தலைக்கண் மின்னிற் படரவெய்யோ னேர்ந்தான்
மறந்தலைக்கொ டானையொடும் வந்து. (௧௪௯)

எழுவும் பரிதியுங்கூ ரேய்சூல வேலுங்
கொழுவுங் கதையுமுயர் குன்றும்—பழுவமுமே
வேகமுறு பூதரிவை வீசிநெடுந் தானவரை
மாகரிதே ரட்டார் வளைந்து. (௧௫௦)

குந்தமழுத் தண்டங் குலிசங் கழுமுள்வேன்
முந்துமெழு நேமி முசலஞ்சங்—குந்தும்
பிறபடையுங் கொண்டிமைப்பிற் பேரவுண ரட்டார்
நிறமன் கணப்படையை நேர்ந்து. (கரு௧)

இருதிண் படையு மிகல்விளக்கு மெல்லைக்
குருதியுகத் தோணிறங்கங் குப்புற்—றுருநிலம்வீழ்
தந்து பலர்மறிந்தார் சம்புநகைத் தீயின்மு
னந்துபுரம் போன்றதந்த ஞாட்பு. (கரு௨)

கண்டனனச் செய்கை கனன்றண் டரைவாரி
யுண்டனனென் சீற்ற மொழிக்குவனென்—றண்டமுஞ்சி
ராருமெட் டாசையுந்தா னுகவே யாளிமுக
னேருருவங் கொண்டா னுருத்து. (கரு௩)

ஆயிரமாச் சென்னிமுடி யண்ட முகட்டைநக்கப்
பாயிருமாக் கைகளண்டப் பாங்கலைப்ப—மேயபத
மண்டத் தடிபூழி யாக்கவுருக் கொண்டார்த்துக்
கண்டத்த வந்தான் கனல். (கரு௪)

வந்திடுமோ சீற்றமெறும் மன்மடங்க ரேற்றங்கண்
டந்தகன்றான் பேர்ந்து நின்று னுதவன்பின்—னொந்திரிந்தா
னிந்திரனச் சுற்று னெரிசோர்ந்தான் றேவரெலாஞ்
சிந்தை மருண்டார் திகைத்து. (கரு௫)

அன்ன வமயத் தரிமுகத்தோ னுர்ப்பினுட
னுன்னு மிராயிரங்கை யோச்சியே—மன்னகநேர்
வெய்துறுதிண் பூதமா வெள்ளமெலா மள்ளுபுவாய்
பெய்து விழுங்கினுன் பேர்ந்து. (கரு௬)

அண்டமோ ராயிரமு மாங்காங் கமைந்தனபோற்
கண்டகன்வாய் தோறுங் கணங்களுற—வுண்டனன்மன்
வாய்தொறுஞ்செல் லன்னவரிவ் வானெறியெங் குய்க்குமோ
வாய்தருவோ வென்பா ரயர்ந்து. (கரு௭)

வாய்க்கொள் ளவதி மடங்கன் முகத்தவுணன்
மூக்கி னுடன்செவிவன் மூலமொல்லை—நோக்கியே
நாடினார் இல்லரிது நண்ணூழை யாங்கொலென
ஓடினார் போயினு ருய்ந்து (கரு௮)

பந்திபடு வாய்தொறும்போய்ப் பாரிடர்வீழ்ந் தாழ்வயினுற்
றுந்தியெழு வந்தினும்ப ருற்றுமீ—ளந்திறம்போ
லாளி முகனுயிர்ப்பி னுயிரமா யோசனைமேய்
மீளியகீழ் வீழ்வர் மெலிந்து. (கரு௯)

திளைத்தான் மடியிலுறு திண்பூத ரங்கன்
இளைத்தார் கரப்படையிற் கீறித்—துளைத்தார்
கெடாமையிற் றொன்மைவன்மை கெட்டிளைத்தார் சில்லோ
ரடாலைமவே றென்செய்வ ராங்கு. (௧௬௦)

ஆயிரமா வெள்ளமா மாடலுறு பூதரைத்தன்
வாயிடைப்பெய் தாரகட்டில் வைத்துள்ள—சீயமுகச்
சூரன் செயலைத் தொலைவினொடு நாட்சொலினு
மார வறைதற்பாற் றன்று. (௧௬௧)

நோன்மையுறு பூதரையே நொய்தினுங்கி ஞனினிப்பார்
மேன்மை யுறுபொருளும் வெஃகினுங்கும்—பான்மையான்
விண்ணகத்தார் தம்மையுமே மேவியுண்ணு மென்றிமையோ
ரெண்ணகத்தார்ந் தேகினரச் சேய்ந்து. (௧௬௨)

ஒற்று ணவர்விரைவி லோடி யவுணர்கோன்
பொற்று ளிறைஞ்சிப் புகழிளவ—னற்றூர்வே
டேதன் றனைப்பிறரைச் சூழ்பூத ரிற்பாதி
காதியென்றூர் வெற்புவைத்தான் காய்ந்து. (௧௬௩)

இதுவினவிக் கந்தவே ளேற்றிடவே லோடுங்
கதுமெனவே நம்பிபெருங் காய—மதுகொண்
டெதிர்பூ தரையட்டா னின்னேவொன் றுரை
விதிர்தரவென் றீங்குறுவன் மீண்டு. (௧௬௪)

என்னலுமன் ஞர்த்தழீஇ யின்சொனவின் றுன்னருஞ்சீர்
நன்ன ரளித்துமன்ன ஞொடொருவன்—றன்னைப்பார்த்
திந்தநகர் வைகு மெறுழ்மாப் படையாவு
முந்துதிபோர்க் கென்று னுகந்து. (௧௬௫)

சொன்னமொழி கேட்டிறைஞ்சிச் சூழ்கம் மியன்படையை
மன்னமர்க்குப் போமினென வார்முரசெற்—றன்னவொலி
காதுறவே தானைவெள்ளங் காதுறவே சூர்த்துணைவன்
மோதுறவே ஞாட்புற்ற மொய்த்து. (௧௬௬)

துன்னனிகஞ் சூழ்ந்துசெலத் தும்பைமுடிச் சூரனெம்பி
மன்னமரோண் காண்பனென மந்திரமே—லுன்னிலையுற்
றேறுதிளவ லோங்குருவு மொண்பூத ருணுறலுங்
காதலுறக் கண்டான் களித்து. (௧௬௭)

இங்கிவனின் றற்புதமுற் றின்னகைசெய் யாதிற்பச்
சங்கையில்பல் சாரதர்தந் தானைமுற்றுஞ்—சிங்கமுக
னுங்கு மருஞ்செயலை நோக்கினன் முன்னாரு
டங்கு மறமுகவன் றான். (௧௬௮)

தனியா யுலகமடு சங்கரன்றன் மைந்த
னினியானோ ராட லியற்ற—முனியாங்குச்
செய்யகஞ்சஞ் செங்கதிருஞ் சேர்ந்துவரல் போன்றுவளி
வையமுந்தப் போர்க்குவந்தான் வாய்ந்து. (கசக)

வந்திடுமக் காலை வயப்பூதர் மாய்ந்ததுன்னு
வெந்திறற்சூர் தானைமன்னர் வேனிலைச்சூழ்—தந்தனர்செய்
காணுமன் மேருறழ்வில் வைபாங்கு வீழுருவி
மாலுறு னொலிகொண்டான் வாய்ந்து. (கஎ0)

ஆயிரமாங் கோடிமன்பா ரண்டம் வெடித்தமற்றை
மாயிருநீர் வன்னிவளி வானண்ட—மாயவிண்ட
வம்மா வொலிகேட் டரிமுகத்தோன் றானைமள்ளர்
விம்மா விழுந்தார் மெலிந்து. (கஎக)

மூரிவிற்கொ ணூரி முழக்கஞ் செவிமடுக்கப்
பாரிற் கவிழ்ந்த பரிகரிதே—ராரிதைச்செய்
நீரரன் சேயிவனு நிச்சயமே முன்னெம்பி
தாரகனைச் செற்றதென்றான் றான். (கஎஉ)

சீய முகனினைய செப்பியெதிர் பாலகன்றன்
மேயவன்மை யான்படுத்தி மீள்வனெனத்—தூயமணித்
தேரோடு நேர்ந்திமைப்பிற் சேயவனை நோக்கியே
சீரோடு செப்புவான் றேர்ந்து. (கஎங)

கண்ணுதலோன் மைந்த கருதலர்த மேண்மாற்ற
லண்ண லவர்கடனே யற்றால்வா—னண்ணக்
கிடந்தவரைத் தண்டித்தோங் கேடெமருக் கில்லை
நடந்தமிதன்கோல் போர்க்கென்றா னன்கு. (கஎச)

மற்றளியன் றன்னை வலியன்று னோர்ந்தொறுக்கி
னுற்றமுறை தண்ட முனூற்றியண்ட—முற்று
மிறைபுரிது மற்றுனீ ரேய்ந்தமரார்க் கிட்ட
சிறைவிடவந் தேமென்றான் சேய். (கஎரு)

எங்களிறை யிஃதியம்ப வேந்தனகைத் தண்டநந்த
வங்கை புடைத்தழகீ தாமெனவே—வெங்கதங்கொண்
டீங்கெமரை வென்று யிமையோர் சிறையுமின்றே
நீங்கினர்நீப் பாய்நீயு நேர்ந்து. (கஎசு)

உந்துசிறை யீசற்கு மோவமுடி யாதென்றான்
மைந்தநீ யஃதுவிட வல்லையோ—நந்திதந்த
பொங்கயிலா லேற்றானைப் பொன்றுவித்தா யோடினுய்தி
யெங்கணல்லூழ் தந்ததனை யீண்டு. (கஎஎ)

கூடரியவே லாற்றல் குமரநின்னேண் டேர்ந்துளேன்
றாரகன்போல் ஞாட்பிற் றளர்வனல்லே—னாரமரில்
வீரருந்திண் பூதருமே வீந்தனர்போர் செய்துமென்றாய்
சீரிதுநின் னாக்கத் திறம். (௧௭௮)

தாதண் டருவார் சயந்தனொடு வானவரைத்
தீதண் சிறைநீக்கச் சென்றநீ—மாதுணைவர்
பூதர் தொலைவாளா போக்கித் தமியனின்றா
யூதியமிஃ தேயா முனக்கு. (௧௭௯)

மூனையின் முடிந்தார் முடிவிலார் முன்னேற்
றினைவி னிரிந்தனரெண் ணில்லார்—நினைகிலாய்
மேயியமர்க் குற்றாய் விடேனான் கனவினுமே
தேவர் சிறையையென்றான் றேர்ந்து. (௧௮0)

என்றமொழி யேற்குமுன்ன ரீராறு தோளுடைவே
ளன்றிவன்றன் கொள்கையெனு க்குவில்லி—லொன்ற
வொருவயிர வாளியைவைத் துய்ப்பவது தீயோன்
மருமமுற்றுப் போயதுபின் வந்து. (௧௮௧)

செங்கதிர்வேற் சேய்விடுத்த செங்கோ றிறலுடைய
சிங்க முகத்தவுணன் செல்லலுற—வங்கமுற்றுப்
புண்டரநெய்த் தோரருவி போலொழுக நின்றனன்வா
னண்டாது கண்டார்த்தா ராங்கு. (௧௮௨)

வெற்றிவே லண்ணல் விசிகமவன் மார்புகள
முற்றுநெறி யாதலுங்கண் ணுற்றதனைப்—புற்றி
லெழுசிதலை யென்ன விவாகட்டி னின்று
கெழுகணங்கள் போந்த விளர்ந்து. (௧௮௩)

மன்னவன்ற னுந்திவழி வந்துகணம் போகுதல்கண்
டந்நெறிகை யான்மாற்றி யையன்மே—லுன்னருமோர்
தண்டமுய்த்தா னஃதுவாச் சண்முகனா லம்புவிட்டான்
கண்டகன்றன் பாலத்தின் கண். (௧௮௪)

சென்றிடுகோ ணெற்றியுறத் தீயோன் பொறிகலங்கி
நின்றனன்செந் நெய்த்தோர் நெறிமறைப்ப—வொன்று
நிறந்தனினின் றாரு நெடும்பூதஞ் செவ்வேள்
புறந்தனிலே போந்த பொலிந்து. (௧௮௫)

சிங்கமுக னுங்கு திறற்பூதம் யாவுமே
யங்கயில்வே ளாணையின்வந் தார்த்தலுமுன்—றுங்க
விளையார் கணவ ரிவரைக் குறித்தோர்
சளையாச் சரம்விடுத்தான் றான். (௧௮௬)

உந்து நெடுங்கோ லுததி பலகடந்தே
மூந்து முதயகிரி முன்னுற்று—வெந்திறலோர்
சொந்தவலை சிந்தத் துயின்றெழுந்தார் போலெழுந்தார்
கந்த னருளாற் களித்து. (௧௮௭)

பாசமது நீங்கிப் பரமற் கினியான்று
ணேசமுறப் போற்றியன்னார் நிற்றலுமே—தேசுறுவே
ளுய்த்தகணை புட்பகத்தை யொத்ததன்மேன் மற்றவரை
வைத்தவணுய்த் துற்றதொள்ளா வம். (௧௮௮)

அந்த வமையத் தடல்வீர மொய்ம்பனெண்மர்
முந்திலக்கர் பூத முரணனிகம்—கந்தனந்தான்
வந்தனைசெய் யாநிற்ப மற்றவன்பார்த் தார்கயிற்று
னொந்தயர்ந்தீர் போலுமென்று னொய்து. (௧௮௯)

மூந்தறிவு சோர்ந்தாலென் முன்னு ருயிர்தீர்ந்தே
யந்தரி யத்தாழ்ந் தயர்ந்தாலெ—னந்தையரு
ளெய்திற் குறையிலென வேந்த லருள்புரிய
மொய்தொழும்பர் போற்றினர் முன். (௧௯0)

வின்னு ணொலிகேட்டு வீழ்ந்தயர்ந்த மாப்படைசேய்
தன்னு டலையுன்னித் தானெழுந்து—துன்னு
வொருவனெமை யெல்லா மொழிக்குங்கொ லென்னு
மருவினசெவ் வேளை வளைந்து. (௧௯௧)

சுற்றலுநாற் றுனையான் றோன்றல் சிலைகுனித்துச்
செற்றவெங்கோன் மாரி சிதறினன்—மற்றவைதாம்
வன்னிநம னுலயிருள் வாளரவும் போன்றனபற்
பன்னிறமும் வாய்ந்த பரிந்து. (௧௯௨)

சூல நிகர்வ சுடர்வேல் புரைவபிண்டி
பால முறழ்வ பரிதியொப்ப—சாலமுறு
குந்தங் கழுமுள் குலிசம்வாள் போல்வனசீர்க்
கந்தவே ளுந்துங் கணை. (௧௯௩)

காற்றிற் கடிதுசெல்வ காலற் கடுப்பனவே
பாற்றுமொன்று தொட்டாற் பலகோடி—பேற்றினபூ
வுற்றவனை மாலரனை யொப்பனசெய் முத்தொழிலிற்
கொற்றமுறு வேள்விடுக்குங் கோல். (௧௯௪)

கார்பிளக்கும் வான்பிளக்குங் காப்பிளக்கு மாதவனூர்
தேர்பிளக்குந் தீப்பிளக்குந் தேவர்த—மூர்பிளக்கு
பார்பிளக்குங் கல்பிளக்கும் பாய்நீர் குடிக்குஞ்சூர்
வேரிபிளக்கும் வேலவனே வேர்த்து. (௧௯௫)

உப்புவன வோத முறைபு முதுவடவை
செப்புவன நோரது செங்கதிரை—யொப்புவன
மூப்புவன முற்றுமுற்று மூதண்ட மேவியெங்கு
மப்புவனமாக்கினவே ளம்பு. (ககசு)

சிரந்துணிந்தார் சில்லோர் செவிதுணிந்தார் சில்லோ
ருரந்துணிந்தார் சில்லோ ருறுநீள்—கரந்தடந்திண்
டோடுணிந்தார் சில்லோர் துடைதுணிந்தார் சில்லோர்வன்
ருடுணிந்தார் சில்லோர் தகைந்து. (ககஎ)

உறுவெவ் வினைக்கீ டுறப்பமைந்தா ரெல்லாந்
தெறுவெவ் விடத்திற் செறிந்தாங்—கெறுழொ
ளுருக்களற்றுன் னங்க முலைந்துபோய் மள்ளர்
செருக்களத்தி னின்றார் திகைத்து. (ககஅ)

கார்மா கரஞ்செவிவால் காறுமிந்து வெவ்வேறாய்ப்
போர்மா களத்திற் பொலிதோற்றம்—வார்மா
முசலமுரா மாறுரல்கண் மொய்யெயினர் வைகு
மசலமரு கார்வதொக்கு மாங்கு. (கககூ)

சீர்போ யவன்விடுகோல் சிந்தக் கலினம்போய்
வார்போ யணிபோய் வயங்குமணித்—தார்போய்த்
திடவை யுறுகதிமா செந்நீர்க்கடலில்
வடவைபோ னின்ற மருண்டு. (உ00)

சீரிற் றிகழ்கொடிஞ்சி செய்யதட்டுக் குற்றுக்கால்
கூரிற்று நீள்பல் கொடியிற்றுப்—பாரிற்றுச்
செந்நீர்க் களத்திரதஞ் சிந்துறுதல் வந்துபொரு
முந்நீர்க் கலனிகர்க்கு மொய்த்து. (உ0க)

வண்டா ரயிற்குகனெய் வாளிபோய் மீளியா
மண்டார் படையட்ட தற்புதமோ—விண்டான
மண்டத்த மாய்த்ததுவே வைப்பா யிரகோடி
யண்டத் தசுரரையு மாங்கு. (உ0உ)

புங்கவர்கள் வானகத்திற் போற்றிப் பிழைத்துநின்றார்
கங்கமுற்ற காகங் கவந்தமுற்ற—வங்கமிற்று
மெய்களத் தோங்குருவில் வேள்கணைகள் பட்டுணர்வு
போயரிதேர் நின்றனன்முன் போல். (உ0ங)

நின்றவெய்யன் றன்னயர்வு நீங்கியனி கந்தனைச்செய்
கொன்றனனென் றோர்ந்துள் கொதியாவி—லொன்றுபோ
லோரா யிரங்கோட்டி யுன்னுநா ருயிரப்பத்
தாராரம் யுய்க்கரக்கா னே. (உ0ச)

தீயனுய்த்த வேப்பாராச் சேயா யிரங்கணை தூய்
மேயவிசி சும்விலக்கி மீட்டுமோ—ராயிரமம்
புந்தவதை யத்தொகையே வுய்த்தகற்றிப் பத்திலக்கம்
வெந்தனிக்கோல் விட்டனன்வேண் மேல். (உ0ரு)

நோன்மையுளா னுய்த்தவம்பை நூறுபத் தாயிரமாங்
கோன்முறையே தூய்விலக்கக் கோணவுணன்—ற—றனிந்தே
யாயிரமாங் காண்ட மரன்மகன்றே ருந்துவந்தின்
றாயவுரத் துய்த்தான் றுதைந்து. (உ0சு)

பாகனெஞ்சிற் பட்டுப் படுமாப் பருவரல்கண்
டேகனரு ளேந்தனூ றெய்கணை தூய்ச்—சேகைநெடுந்
தேரினையே வீட்டுதலுந் தீயோ னனியார்த்துப்
பாரிழிந்தம் பெய்தான் பல. (உ0எ)

வீசுகணை யாவையுஞ்செவ் வேள்பகழி யால்விலக்கி
யாசுகமோ ராயிரம்விட் டன்னவன்வி—ஞசமுறத்
தாலமதிற் சேர்த்தலுந்தூ டாஞகச் சீறிவெய்யோ
னுலங்கர் சூலமுய்த்தா னங்கு. (உ0அ)

சூரிளவல் சூலத்தைத் துண்டித்தீ ரேழ்கணையா
லோரழற்கோ லாயிரஞ்சே யுய்த்திடக்கண்—டீரவன்கைத்
தண்டமொன்றிற் றாக்குவண்டு தாலந் தனிற்சிந்தி
யண்டநந்த வார்த்தகன்று னங்கு. (உ0கூ)

விட்ட கணைபொடிப்ப வெய்யவன்றண் டோடுசெலச்
சிட்டனம்பே ழெய்துகதை சேர்கரத்தை—யட்டிடலு
பேர்த்துமொரு கைவரவே பின்னுமந்தத் தண்டுபற்றித்
தீர்த்தன்மேல் வீசினன் றேர்ந்து. (உக0)

ஒன்றுன் விடுகதைமே லொள்ளழலம் பாயிரந்தூய்ச்
சின்றை பினஞ்செயவுந் தீயவன்கண்—டந்நாளிற்
கூற்றனல்கு பாசங் கொடுவீச வாயிரந்தீக்
கோற்றனிமா ணந்தவிட்டான் கோன். (உகக)

நாணற் றதுகாணு நாணுற்றீ ராயிரமாம்
பாணித் தொகையினையற் பற்றவரு—மேனுற்ற
சிங்கன் செயனேக்கிச் சேயா யிரங்கணையா
லங்கவன்றிண் கையறுத்தா னார்த்து. (உகஉ)

அற்ற நெடுங்கரங்க ளம்புவியில் வீழுமுன
முற்று முளைத்த முரிந்தகையை—மற்றவத்தங்
கொண்டா னரிமுகத்தன் கூர்ந்துசெல வோர்ந்ததனைக்
கண்டான் குமரன் கனன்று. (உகங)

ஓரா யிரங்கணையுய்த் தோரா யிரமுடிகொய்
தீரா யிரஞ்சரங்க ளேவிவெய்யோ—னோராரு
மீரா யிரமொய்ம் பிரத்தனன்வே ளன்னமுன்போல்
வாரா முளைத்தனவே வாய்ந்து. (உ௧௪)

அந்நாட் சிரங்கை யறுத்துமகத் திட்டதன்மை
தன்னால் விளைந்ததெனச் சண்முகவே—னன்னு
விருக்கவிவன் மாய்வதெங்க னென்றிமையோர் சோர
வுருக்கினர்சிங் கேறுரைப்பா னொன்று. (உ௧௫)

உளைக்குங்கோல் பல்யுகநீ யுய்க்கினுந்தோள் சென்னி
முளைக்கின்ற தன்றியந்த முற்றா—விளைக்கின்றாய்
செய்தவமு மப்பயனுந் தேர்ந்திலாய் சேமயாருநீ
மொய்தருவான் வந்தாய் முனை. (உ௧௬)

சேண்டலமார் தேவரையே செய்வே னிருஞ்சிறைபோ
யாண்டு வருகின்றது மாற்றலுளேன்—காண்டகுமெ
யீண்டே யழிவதுமில் லிங்கு னுயிர்விட்டேன்
மீண்டே குதியென்றான் வேந்து. (உ௧௭)

என்னலுஞ்செவ் வேள்வினவி யேந்த றனைநோக்கி
நின்னுயிர்க்கு மேயவெல்லை நீங்கிற்று—மன்னமனும்
பின்னைநின்றா னென்னீ பிதற்றுதிபே தாய்கணத்தி
லுன்னை முடித்துமென்றா னுற்று. (உ௧௮)

தீர்த்தனுரை கேளாச் சினவிவெற்பீ ராயிரத்தைப்
பேர்த்தவுணன் வீசப் பிறங்கவற்றைக்—கூர்த்த
வுரமார்கோ ளாறுய்த் துகுத்தனையான் மார்பிற்
சரமா யிரமுய்த்தான் றன். (உ௧௯)

மாயிருங்கூர் வாளியவன் மார்ப மகழ்ந்துமன்னக்
காயெரிகால் கண்ணன்'கரசலத்தாற்—பாயிருங்குன்
றன்னு வெடுப்பவைய ணோரா யிரங்கணையா
லன்னான் முடிவீழ்த்தா னங்கு. (உ௨௦)

அறுத்தசிரம் வீழுமுனே ராயிரமாஞ் சென்னி
மறித்தும்வந் தெய்த வலியோன்—பறித்தநெடுங்
குன்றம் பலவீசிக் கூர்தடந்தோள் கொட்டியும்பர்
நின்றயர வார்த்தா னெடிது. (உ௨௧)

ஒண்டிறல்வே லையனோர்ந் தோரா யிரத்திரட்டி
கொண்டகணை தூண்டிக் குவடொழித்துக்—கண்டகன்றன்
றோள்வரையைத் தன்னினன் றொன்மைபோல் வந்தெழுந்த
வாள்வினையுண் மேற்றுதவ மாம். (உ௨௨)

பாராவஃ தோராடற் பாற்றென் றிளவலுன்னி
யோரா யிரத்தெட்டி னுள்ளொருக்கொண் — டாராமன்
வண்டுமுறை பெய்தவுணன் வன்றோள் சிரமுற்றுங்
கண்டதுண்டஞ் செய்தான் கனன்று. (௨௨௩)

வகாரவடி வாளீன் மகரங்கோ லீர்மன்
சிகா நிரையகரஞ் சீமா—னகர
மிசையிற்போ நேமியிற்போ மேதினியிற் போமெண்
டிசையிற்போ மாரச் செறிந்து. (௨௨௪)

வேலவன்வெங் கோறணித்து வீச வவன்சிரங்க
ளேல விசழதுக்கி யேகவிண்ணிற்— சாலவெரு
வுற்றமரர் பார்விழுந்தா ரொள்விஞ்சை யர்வைப்பாம்
பொற்றைகளி லுற்றவவை போய். (௨௨௫)

செங்கதிர்வே லண்ணல் சிலீமுகமீர் தந்துவீழ்
சிங்கமுகன் றேசிழந்த சென்னிகளை—வெங்களமன்
வேதாளர் கொண்டடுக்கி மேனிலைகொண் மாடமென
மீதார வைகுவார் வேட்டு. (௨௨௬)

அன்னான் சிரம்வா யலரவவற் றங்குறபே
யுன்னு வுறையுளினு னுய்த்தமரப்—பன்னுவாய்
மெல்ல முகிழ்த்தலுமே மேவுசெவி துண்டநெறி
செல்லலுற்றுச் செல்லலுற்ற தேர்ந்து. (௨௨௭)

மன்னுங் குகனிவ் வணமறுப்பக் காரவுண
னுன்னுஞ் சிரந்தோ ளொடுமுளைப்பப்—பின்னுந்
திரண்டபல கோலோச்சிச் சென்னியொன்று மங்கை
யிரண்டுநிற்க யாவுமட்டா னேய்ந்து. (௨௨௮)

வன்போர்க் களத்தில் வயவாளி யிற்றுமிந்த
முன்போன் முளைப்ப முருகவே—ளன்போன்வெஞ்
சீற்றமுளான் போலச் சிறிதுரப்ப மாற்றலன்றன்
றோற்றுசிரந் தோளொளித்த சோர்ந்து. (௨௨௯)

ஐயனுங்கா ரத்தி னரிமுகத்தன் சென்னிமொய்ம்பு
மெய்யிலொடுங் கிற்றுமுன்போன் மேவாமை—வெய்யவன்கண்
டுன்னெடுநோட் கற்றவிஞ்சை டொண்மன் றயர்த்தான்போ
லன்னவனுள் வட்கிநின்றா னங்கு. (௨௩௦)

அங்கதுகண் டத்தனந்த மத்திரங்க ளட்டசிரஞ்
செங்கரந்தோன் றிற்றிலையென் செப்புகைய—விங்கு
விளைக்கு மமரினீ வீழ்ந்துபட்ட பின்னே
முளைக்க விருந்ததென்றான் மொய்த்து. (௨௩௧)

இருதலைவே லத்தவிற்ற வென்றலைதோ ளென்றே
கருதலையென் னாற்றலும்பர் காண்ப—வொருக
மிருகைகொண்டெல் லாமடுவே னென்றகழ்ந்தோர் வெற்பைப்
பொருகையன் விட்டான் புகைந்து. (௨௫௨)

விட்டிடுமோ வெற்பை விசாகன்கண் டோர்கணையா
லட்டிடலு மோர்ந்துகதை யங்கைவைத்தே—கட்டுவிற்கோல்
வேலன்றி யொன்றையட வேறுபயின் றில்லைபடை
பாலவென்றஃ துய்த்தான் பதைத்து. (௨௫௩)

வெய்யவன்றான் சொற்றசொல்லும் விட்ட கதைமாண்புஞ்
செய்யசுடர் மேனியத்தன் சிந்தைசெய்து—கையமர்ந்த
வெல்லை யுறுகுலிச வேலைவஞ்சன் றன்னுயிருண்
டொல்லைவரு கென்னவிட்டா னுற்று. (௨௫௪)

செங்கதிர்வேற் சேந்தனெந்தை தீயோன் றிறநோக்கி
வெங்குலிச வேல்விடுப்ப மேவுகதை—யங்ஙலைத்துத்
திண்ணிறத்திற் பாய்ந்துவெரின் சென்றிடலுஞ் சீயமுகன்
மண்ணிறத்தி வீழ்ந்தான் மடிந்து. (௨௫௫)

அங்கையுற் றாளரியை யட்டொண் குலிசம்போய்க்
கங்கையுற் றாடிவந்து கந்தவேள்—செங்கையுற்ற
தார்த்தா ரயன்முதலோ ராடினார் பாடினார்
தூர்த்தார்பூ மாரி துதித்து. (௨௫௬)

என்னா யகனிமையோர்க் கின்னருள்செய் தேண்பூதர்
மின்னா ரயில்வீரர் மேவவயல்—பொன்னாரும்
பாசறையுட் சீயம் பரித்தமணிப் பீடத்திற்
றேசமர்வேள் வீற்றிருந்தான் சென்று. (௨௫௭)

செங்கதிர்வே லண்ண றிகழ்பா சறையிருப்ப
வங்கவனோ டாடியம ராகவத்திற்—சிங்கமுகன்
பட்டசெய லொற்றர்போய்ப் பார்த்தைய முற்றுலையுந்
துட்டனிடஞ் சொல்வார் தொழுது. (௨௫௮)

குன்றங் குமைத்த குமரன் குலிசத்தா
லுன்றம்பி யாவி யொழிந்ததன்மை—யென்றுழைஞர்
சொற்றளவிற் சூரன் றுடித்துவிழி தீச்சொரிய
வுற்றயர்ந்து வீழ்ந்தா னுலைந்து. (௨௫௯)

கெழுசிகர மேல்வழுவிக் கீழ்த்தலத்திற் கண்கால்
விழுநீர்க் கடலுள் விழுந்தான்—செழுமுகிலின்
மாழ்கிக் கரம்புடைத்து மன்றுயர வாரிதியின்
மூழ்கிப் புலம்புவான் முன். (௨௬0)

என்னையோ பின்னையோ விங்கரிக்கு முன்னையோ
வுன்னையோ வொற்ற ரொழிந்தையென்றார்— மன்னொடன்று
வானவரை வென்று வயமளித்தா யின்றொருசே
யூனமுறக் கொன்றனனோ வுற்று. (உசக)

உண்டமர்தா னென்று ளுளங்களிக்கு முன்னுயிரைக்
கொண்டகன்றான் கூற்றென்னுங் கூற்றறிந்து—வண்டுளவ
மாலு மயனு மகவானும் பண்டுபோ
லேலுநகர்க் கேகாரோ வின்று. (உசஉ)

பொன்னைப் புவியைப் புதல்வரைநற் பூவையரைப்
பின்னைப் பிறவும் பெறலாகு—முன்னைத்
தனிப்படுத்தி நொந்துலைவேன் றம்பியிந்தத் தோற்றத்
தினிப்பெறுவ துண்டோ வியம்பு. (உசங)

அண்டர்க் கரியே யரிமுகனே வானடைந்தாய்
வண்டமர்தார்த் தாரகனை மக்களொடு—கண்டனையோ
யுற்றதுணை யாவி யுறவும் பிறவுமா
யிற்றவுனை விட்டுழல்வே னிங்கு. (உசச)

அற்றைப் பகலிபமா வானனன்றான் மாய்ந்தபின்ன
ரொற்றைப் புயம்போ யுளந்தளர்வே—யுற்றிருந்தே
னிற்றைப் பகனீ யிறந்தா யரிமுகனே
மற்றைப் புயமுமற்றேன் மான்று. (உசரு)

என்ன விறைவ னிடியே றெனவரற்று
மன்னவொலி கேட்டமர ரார்த்தனரா—மன்னசுர
னத்தமணிப் பீடிகையுற் றத்தனொடு போருளுற்றச்
சித்தமதிற் றேர்ந்தான் றெளிந்து. (உசசு)

சிங்கமுகாசுரன் வதைப்படலம் முற்றிற்று.

ஆ திரு வெண்பா, க௦அ௦.

# சூரபன்மன் வதைப்படலம்.

கொற்றமுறு வைவேல் குலவா யிரகோடி
யொற்றர் தமைநோக்கி யோர்சூரன்—மற்றெனவி
ரண்டமெங்கும் வைகு மனிகத் தொகையாவுங்
கொண்டடைதி ரென்றான் குறித்து. (க)

சொற்றலுந்தாழ்ந் தொற்றரெலாந் தொல்லண்டந் தோறும்போய்க்
கொற்றவன்றன் மாற்றமுறை கூறவே—மற்றவர்தா
னாற்படையாம் வாரியொடு நண்ணண்ட வாயினெறி
பாற்படவே சென்றார் பரிந்து. (உ).

மன்னண்டந் தோறுமுனம் வைத்தநெறி தானைவந்து
துன்னுவமால் வாயுண்டு தொல்லுயிரைப் — பின்னுந்தி
தந்ததொக்கு மன்றேல் சகலமுமன் சம்புகழல்
வந்துதிப்ப மானு மலிந்து. (௩)

இத்தன்மை யண்டத்தா ரேகும் படைவாலு
முத்தன்மை கண்டென் றுளிமறைந்த — மைத்தழலு
முண்ணடுக்க முற்று னுலவையுந்தன் மெய்விதிர்த்தா
னண்ணொருக்க முற்றயர்வா னுங்கு. (௪)

ஆர்த்த வொலியா லகிலமடுக் குற்றவெய்யோர்
கார்த்தமெய்யி னுலிருண்ட காயமது — தூர்த்தநண்பேர்
வன்மையின்முந்நீர்வறந்த மன்றுணைத்தாள் பேர்த்துவைக்குந்
தன்மையின்முன் னண்டமிற்ற தாழ்ந்து. (௫)

கூடும் படைநோக்கிக் கூர்மெய் குலைவுற்று
ரோடு மிடமின்றி யும்பரெலாம் — வீடுவன்போன்
மன்னனயர்ந் தானயனு மாலு முடிவதென்றே
வென்ன நினைந்தா ரினைந்து. (௬)

பூதலங்கள் வானம் பொருப்பெண் டிசையளக்கர்
பாதலங்க ளெங்கும் பரந்தவன்றி — யோதயன்மான்
மன்னனரு மாமுனிவர் வாழிடத்தும் வைகிநின்ற
துன்னருமாத் தானை துதைந்து. (௭)

தொல்லையண்டத் துற்றுவந்த தூசி சதகோடி
யெல்லையாம் யோசனைக ளென்றறிஞர் — சொல்லினர்
வேறுவருந் தானை மிகுதி யெவர்விதிப்பார்
கூறுமெண்மே லில்லை குணித்து. (௮)

ஐம்பூத மும்வெவ்வே றங்கமுற்ற நேருமேன்
மொய்ம்பூர் படைச்சீர் மொழிகுவர்யார் — கொம்பூத
முந்தனிக முன்மூதூர் மூடி நிறைந்தனவே
யிந்தவண்ட முற்றுமிமைப் பில். (௯)

தூதர்போய்ச் சூரன் றுணைத்தா டொழுதனிக
மூதண்டத் துற்றமுற்று முற்றினதா — ரோதுதக
லென்னுரையுட் சென்றளவி லேரவுணர் கோனெழுந்து
தன்னுறையுள் சென்றான் றனித்து. (௧௦)

மன்னனீர் தோய்ந்தை வகையுணவு மாந்திநெற்றி
தன்னிலவிர் நீறிட்டுத் தார்மிலைந்து — பொன்னவிர்நற்
றானை யுடனே தயங்குமணிப் பூணுதி
யேனையவும் பூண்டா னினிது. * (௧௧)

தேரா நிலத்தனரு டிண்படைமற் றேர்படையுஞ்
சீரா யிரகோடி தேரவையு—மோராளி
யானமும்பொற் றேரு மெறுழவுணர் கொண்டேகத்
தானவர்தங் கோன்பணித்தான் றான். (கஉ)

சூர்மருங்கில் வந்திடுமாச் சூதர் தமைநோக்கி
யோர்தா வோங்குமோ ரொப்பிலெழிற்—றேர்கொணர்தி
ரென்றறைய வன்னா னிணைத்தாள் பணிந்தேத்தி
நன்றெனவே சென்றார் நயந்து. (கங)

எழுபதி னாயிரமா மேனுடைய சீய
மெழுபதி னாயிரமா வீட்ட—மெழுபதி
னாயிரமாங் கூளியினை மார்த்தீர்ப்பப் பூட்டிநன்கு
மேயவொரு தேர்பணினார் வேட்டு. (கச)

பாரினுமே யான்றதவிர் பாற்கடலி னார்ப்புவது
கூருமண்ட மாயிரமாங் கோடிதன்—பேரிடத்தி
லாற்றிநிற்கும் வன்மையதா மாடலரி மன்கொடித்தேர்
காற்றினுஞ்செ னீர்மைத்து காய்ந்து. (கரு)

மிடல்வெற் பலமரவொன் வெய்யோன் குளிர
வடவை விளிதரச்செய் வன்மைத்—தடநெடுந்தே
ருந்து படைபரிப்ப தூழியுந் தாதிருப்ப
திந்திரனா லம்புரைவ தே. (கசு)

அன்ன நெடுந்தே ரவுணர்கோன் முன்செலுத்த
மன்னனதின் மேலிவர வாகைகொள்வா—யென்னவே
தானவர்பூ மாரிபெய்தார் சார்வலவ ரேறியுய்ப்ப
வானவிய மார்த்த வதிர்ந்து. (கஎ)

திண்பொற் படியகஞ்சீர் சேர்கோ டிகமடப்பை
தண்சத் திரங்கவரி தாங்கொண்டார்—நண்சிலதர்
மாபுரத்தெண் ணில்சிகரி வாயிலும்பல் னொள்ளாலும்போய்க்
கோபுரத்தின் முன்னடைந்தான் கோ. (கஅ)

முன்னருஞ்சூர் மூதூர் முதற்கடைவா யின்மருவ
வன்னதனைக் கண்டனிக மாலமே— யென்னக்
கலித்துப் படர்ந்த கணக்கிலிய மார்த்த
சலித்ததவர்த் தாங்கத் தலம். (க௯)

சேனை செலவே செறிந்தெழுநுண் பூழிபோய்
வானை யிருநிலனை மாதிரத்தை—யேனைய
மன்பரவை தன்னை வளைந்துநனி சோனைகொள்
பின்பனிபோற் போர்த்த பெரிது. (உ0)

பரிகரிவி லாழிமதம் பாய்ந்தாழி யாகத்
திரியவுணர் பங்கியங்நீர்த் தீயா—விரிவண்
டொகையார் படையினெழு தூளியந்த்த் தீயின்
புகையா நிலவுமே போர்த்து. (உக)

படையினெழு தூளிருளைப் பார்த்திபன்றான் பார்த்து
மிடைகதிர்க டம்மை விளிக்க—வடைந்தனபோ
லங்குடையா வென்றி யனிகத் திடைவந்தே
யங்குடையா நின்ற வவிர்ந்து. (உஉ)

இவ்வணங்கொ டானைக ளீண்டிப் படர்தரவே
தெவ்வணங்கு மேந்தல்பொற் றேரின்மேல்—வெவ்வணங்குன்
செங்களத்திற் சென்றனன்றார் சென்று வளைந்தவிடத்
தங்களத்தன் சேய்பா சறை. (உங)

அன்னதனைக் கண்டயன்மா லண்ட ரலக்கணுற்றார்
மன்னுகண வீரர் மயங்கினார்—முன்னிருவர்
மற்றுரு மீசன் மகனு மறுமுகவன்
பொற்றாள் பணிந்தார் புகழ்ந்து. (உச

அந்தமிலா வண்டமோ ராயிரத் தெட்டினின்றும்
வந்தபெருந் தானையொடு மன்சூர—னுந்திரத
மேலினன்வெம் போர்புரிவான் மேவினனம் பாசறையைக்
கோலிநிரை மொய்த்ததென்றார் கூர்ந்து. (உரு)

என்ன முறுவல்செய் தேர்கூர் மணித்தவிசார்
பன்னரும்வேள் பாகுவினைப் பார்க்கவவன்—முன்னமுணர்ந்
தன்றே முளவுகோ லங்கைபெற்று வாம்புரவி
மன்றேர் முனமுய்த்தான் வந்து. (உசா)

உந்திடுமேக் காலத்தி லொல்லை யெழுந்துகுகன்
குந்தமழுச் சூலங் குலிசம்வே—லந்தனுக்கோ
றண்டமெழுக் கூர்நாந் தகம்பலகை நேமிகொண்டான்
றிண்டகுவன் செய்தவமே சேர்த்து. (உஎ)

என்றுநடு வீச னிருந்தாங் கெழிற்குமரன்
வென்றிரத மேறினன் வீரமொய்ம்—பொன்றிலக்கத்
தெண்மர்பாற் போற்றிவந்தா ரீரா யிரவெள்ளத்
திண்கணவர் சூழ்ந்துசென்றார் தேர்ந்து. (உஅ)

போதன் முதலோர் புடைநின்று பூச்சொரிய
நாதன்றேர் மேலாகி நண்ணலர்கண்—மீதுசெலப்
பாங்கார் பரும்பூதர் பார்த்தவுணன் மாப்படையை
யேங்கா வினையசொற்று ரேய்ந்து. (உகூ)

தீயபுரி சூரபன்மன் செய்தவத்தி னாற்பெற்ற
வாயிரத்தெட் டண்டத் தவுணருமே—மேயினரா
மோரண்ட மொன்றி லிருந்தா ரிவரன்று
லாரண்டம் பாரினின்று ராங்கு. (௧0)

வரத்திற் பெரியார்மால் வன்பிற் பெரியார்
சிரத்திற் பெரியார் சினத்தோ—ரத்திற்
பெரியார் கரத்திற் பெரியார் நமனிற்
பெரியா ரவுணர் பெரிது. (௧௧)

மன்னிமையோர் வன்மைவளம் வவ்வியமர் செய்தலைத்தோ
ருன்னுயிர்கள் யாவு முணுநசையார்—துன்னயன்காண்
மண்டு தொழில் புரிந்து மாற்றவல்லார் ஞாலமுண்டு
மண்டமலைப் பார்பசிநோய்க் காங்கு. (௧௨)

வெங்கனல்கால் கண்ணார் விரிசடையோர் பேழ்வாயார்
சங்கதிருந் திங்களுந்தோய் சென்னியார்—பங்கமிலா
வென்றிமிக மேற்கொண்டோர் வெய்ய பவத்தினுக்கோர்
துன்றியவைப் பானோர் துதைந்து. (௧௩)

அங்கிமுக னளிமுக னத்திமுகன் சிங்கமுகன்
பொங்கவர்நேர் பல்லோர் பொலிவற்றார்—வெங்கண்
மதுகைட பன்மகிடன் மன்சலந்த ரன்போற்
கதுவிமொய்த்தா ரெண்ணிலார் காய்ந்து. (௧௪)

அரனயன்மால் கால்படைக ளங்கையுற்றோர் பல்லோ
ருரன்கொ ளவுண ருறுமெண்—டரனனந்த
கோடியென்பர் வானிலனும் கூர்ந்தனிக மாய்ச்சூழி
னாடியென்கொல் செய்குவது நாம். (௧௫)

ஓரண்டத் தாரமரா லுள்ளுலைந்தோ மாகினெல்லாப்
பேரண்டத் தார்போர் பெறிற்பிழைப்பின்—றொரு
மொருவரொமை யெல்லா முரப்பித் துரப்ப
ரிருவருநி னுய்யவல்லார் யார். (௧௬)

எல்லையிலா வேண்கொண்ட வெந்தலைவ ரேவருமே
யல்லனமா வீர ரவுணரைத்தாம்—வெல்லுவரோ
கல்லான் மரத்தாற் கடியினவர் நம்முயிரைக்
கொல்லா தொழிகுவரே கொல். (௧௭)

வேற்படைகொள் வீரனன்றி வேறெதிர்ப்பா ராருமிலை
காற்படையுஞ் சூழ்ந்தமையா னுமெல்லாம்—பாற்படவே
யோடுதலு மாகா முறுபகைவர்த் தாக்கியே
வீடுதனன் றென்றுசொற்றார் வேர்த்து. (௧௮)

சாரதர்தந் தானைத் தலைவர் சயவீரர்
வீரமொய்ம்பன் றானு மிடைந்தருஞ்—பேரனிக
வீட்டந் தனைநோக்கா விற்றனகம் வன்மையெனு
மாட்டந் தனையடைந்தார் வாய்ந்து. (௫௯)

வண்டார் வலாரி மருவமா ரெங்குஞ்சூ
ழெண்டா னவரனிகம் யாவுமே—கண்டார்
கவன்றா ரகர்தம்முட் காரியின்ன சொல்வான்
றவன்றாங் குளமா றனக்கு. (௬௦)

ஆண்டகையெங் கோமான்மே லாயிரத்தெட் டண்டத்து
மீண்டனிக மெல்லா மிறுத்தவிவற்—கேண்டருமோர்
சூள்கொண்டோ ரூழி தொடர்ந்துசெய்ய முற்றுமென்றான்
மாள்கின்ற தெங்கவுணர் மன். (௬௧)

காரவுண ராம்பானுட் கங்குல் விடிவதூஉஞ்
சீரமரர் வெய்யசிறை தீர்வதூஉங்—கூர
விழிவாய துன்பினுக்கி றெய்துவதூஉ முண்டோ
மொழிவாய் முதல்வவென்றான் முன். (௬௨)

மகவா னிளைய வருத்தலுமே ஞாலந்
தகவா னளந்த தலைவ—னுகவாவி
னீடிமையோர் தம்மிறைவ னெஞ்ச முறுகவலை
நாடியின்ன சொல்வா னயந்து. (௬௩)

காலமாய்க் கண்ட கருமமாய்க் காணரிய
சோலமாய்க் கொண்ட குணங்களாய்—ஞாலமா
மன்னவையு மின்றி யநாதியாய் மூலமாய்
முன்னவன்றா னாறு முகன். (௬௪)

குன்றுருவ வேல்விடுத்தோன் குன்றடைந்து நாங்காண
வன்றுருவங் கொண்ட தயர்த்தியோ—துன்றயனு
மாக்கு மெனதுருவா யங்களிக்கு மீசன்போ
னீக்கு மெவையு நெடிது. (௬௫)

பாயிருநீர் சூழ்சூர பன்மன் படையையெல்லா
மேயெனுமுன் வீட்டு மிளைஞனென—நீயண்ண
லாயிரமா கோடியண்டத் தாருயிர்கட் கெல்லாந்தா
னாயகனென் றோது மறை நன்கு. (௬௬)

சூரன் முதலோரைத் துன்னித் தொலைக்கவுன்னின்
மூர லதனின் முனிவினுண்மைச்—சீறினெழி
னேக்கினடு வானோர் கொடிப்பினென்று லன்னவனேன்
வாக்கினவில் வார்யார் வகுத்து. (௬எ)

ஈரனிகத் தோடிங்குச் சென்றிலக்கத் தொன்பான்றிண்
வீரர் புடைபோற்ற வெம்படைகை—யாரவே
சூரையட வந்ததன்மை தூக்கினோராட் டாங்குகனென்
பேரையுடைச் செவ்வேற் பிராற்கு. (௪௮)

தாரகனைக் கொல்வேலாற் றனவரை வீட்டிமற்றச்
சூரன் மிடலுந் தொலைக்குமென்னக்—கூரவற்
றேற்றியும்ப ரோடுஞ் செருப்பார்த்து மென்றுருகன்
பாற்றிருமால் போர்தான் பரிந்து. (௪௯)

அன்னதுகண் டாறுமுகத் தையன் முறுவல்செய்
தன்னமருக் கேகலும்பா ரும்பரொன்றாய்த்—துன்னவுண
வோதமொலித் தார்போ ருஞற்றமுன்ன ரேகியதிண்
பூதர் முரிந்தார் புலர்ந்து. (௫௦)

முரிந்ததும்வன் பூத முதல்வர் பொருதே
யிரிந்தலைந்தார் மற்றிலக்கத் தெண்மர்—புரிந்தமரம்
பின்னடைந்தா ரின்னதோர் பெற்றியெலா மோர்ந்துவல்லை
முன்னடைந்தான் வில்லொடுதிண் மொய்ம்பு. (௫௧)

எய்தியெறழ் வில்வாங்கி யேந்தல் கணைமாரி
பெய்தவுணர் தங்கள் பெருந்தடந்தோள்—கைதலைகண்
மார்புகழ லாதி வரைகளாய் வீழவே
யீர்புநின்று போர்புரிந்தா னேற்று. (௫௨)

உன்று விரகோடி யோதநடு நாகமொன்று
துன்று வலைத்தென்னத் துன்னலர்நேர்—மன்றுச்
சமர்செய் துலப்புறாத் தன்மைகண் டேந்த
லமர்செவ்வேள் பால்வந்தா னங்கு. (௫௩)

ஆற்ற லவுண ரனிக மிரிந்தனவே
சாற்று கணத்தலைவர் சாய்ந்தனரா—லேற்று
மருவயவர் தாமுரிந்தார் மைந்தனே யிங்கண்
வருமெனச்சூழ்ந் தார்பலரும் வந்து. (௫௪)

தண்டங் குலிசஞ் சரஞ்சூலம் வேல்பிறவுங்
கொண்டவுணர் பெய்திறனுங் கொன்பூதர்—விண்டமையும்
வீரர் மெலிவுற்று மீண்டமையுங் கண்டுசெவ்வேண்
மூரல் புரிந்தான் முனி. (௫௫)

மூக்கணுடைத் தாதைபோன் மூரல் சிறிதுசெய்து
மிக்கவலி நீட்சியுறு வில்வினைச்செங்—கைக்கொண்டு
கோட்டிநா ணொதைகொளக் கூறும் பலவுயிரி
னீட்டமெலா மாட்டமுற்ற வே (௫௬)

நக்க னருள்குகன்வின் ஞாணின் முதிரொலிபோய்த்
தொக்கசெவி தோறுமுறச் சூழவுண—ருக்கனரா
பன்றேர் பகிர்வ பரிபுரள்வ பாய்மதமா
சென்றே விழுவ திகைத்து. (௫௭)

சேந்தன் சிலையிற் செறிமையுறை சிந்துவபோற்
காந்தளவில் கோல்கள் கடவிறு—ஞந்தருவர்
மன்வான் புழைடைவளை யு மாவவனி நீளுததி
மின்வான் மிடைவ மிளிர்ந்து. (௫௮)

கொடியடுவ வெண்ணில் குடையடுவ பற்பல
படையடுவ மாவடுவ பன்மா—வடுவநெடுந்
தேரடுவ காரவுணத் தீயர் முடியடுவ
தாரகமாஞ் செவ்வேள் சரம். (௫௯)

விரையார் தருவின் விழுவர் தருவர்
திரையா மெனவிழுவ திண்மா—வரையா
மெனவிழுவ தேர்மஞ் சினமெனமா வீழ்வ
வினமதிபோல் வீழ்வகுடை வேய்ந்து. (௬0)

செல்லுறுதாள் கொல்படைகள் சிந்துகர நந்துதிறல்
சொல்லுறுவாய் வீறுபெறு தோளிணைக்கண்—கல்லெனவே
யார்த்திடும்வன் கண்ட மவுணர் துவசமொடு
தீர்த்தனெய்யுங் கோல்கொய்யுஞ் சென்று. (௬௧)

பொன்னுலகம் போயுலவும் பூமன் பதமேகு
மின்னூரமா ரொல்லுலக மேவுமே—மன்னிலத்திற்
கீண்டு விரைந்துசெலுங் கீழதல மூடுபோங்
காண்டகைய கந்தன் கணை. (௬௨)

முன்னருமூ தண்ட முகட்டுருவு மாதிரம்போம்
பன்னகமு மெண்கிரியும் பட்டுருவுந்—துன்னவுணர்
சென்னிமுடி யோடுமுயர் திண்டோள் வரைதள்ளும்
மன்னியசெவ் வேள்விடுமா வண்டு. (௬௩)

வானகமண் டிக்களக்கர் வன்கணமன் பாசறைசூழ்
வானவிடம் யாவுமைய னட்டிடலு—மானவினன்
வேந்த னுளமகிழா வீந்தா ரவுணரின்ன
னீந்திலே னென்றறைந்தார் நேர்ந்து. (௬௪)

வெந்தருவர் தானை விளிந்து கிடந்தமைகண்
டந்தரர்க ளுள்ளுவந்தா ரங்கதிர்வேற்—கந்தனைத்திண்
பூத ரவர்தலைவர் போர்வீர ராருமே
யாதரமுற் றேத்தினா ரார்த்து. (௬௫)

ஐயனம்பு தைப்ப வகன்வான் முகட்டவுணர்
வெய்ய படைதொலைந்து வெள்ளிடையே—செய்யவிது
கண்டிறைவன் பூங்கழல்கள் காண நெறியுமினி
யுண்டென் றுவப்பா ருளம். (௬௬)

காற்றென்ன வண்ட கடாசநெறி வாயிலுற்றே
யேற்றகரி தேர்பரியி னேகியே—சாற்றுமண்டம்
யாண்டுமுற்றார் வெள்ளிடைதா னென்னதுமில் லென்னவொருங்
கீண்டினர்முன் னுற்றவர்போ லேய்ந்து. (௬௭)

சீர்த்தமன்போர்க் குற்ற செயலுணர்ந்து முன்னடைந்தார்
கார்த்த பிணமாங் கருவரையு—மீர்த்திடுமூ
னெய்தரத்த யாறு மிடைப்படுதல் பார்த்தனரு
ளைதரத்துன் புற்றார் நலிந்து. (௬௮)

விஞ்சனைந்தார் நம்படையை வீத்தா னொடுபொருது
வெஞ்சமரில் வென்றிகொடு மீடுமெனு—நெஞ்சமது
தேற்றிடுங்காற் பூதர் திறல்வீரர் பாங்கினுறத்
தோற்றினன்முக் கண்ணான் சுதன். (௬௯)

சேயுருக்கண் டாற்ற சிறியனரி யானையிலா
னேயிவன்கொ னம்முடைய வெண்ணலனே—மேயவவ
னெய்திற் படையனைத்து நாறிடு னுன்னருஞ்சீ
ரெய்தல் வியப்பா மிது. (௭0)

அன்னதுதா னிற்க வவன்மேற்சூர் வந்துபொரு
முன்னரமர் செய்தே முடிக்குதுநா—மென்னலவின்
றாரவுணர் சேனைமுற்ற வண்பூத ருட்கினார்
வீரர் சலித்தார் மெலிந்து. (௭௧)

ஐயன் மருத்தினைப்பார்த் தாரணிகச் சூழலெங்கும்
வையம் விடுத்திடென வன்பவன்—வெய்யவர்கள்
மன்னு மிடத்துரைத்தான் மண்டிசைவான் மீதுலவு
மின்னலின்வேர் பொற்றேர் விரைந்து. (௭௨)

சேயவுணர் சேனைவிழத் தேனொழுக்கிற் சேரநந்த
மாயிரமாங் கோடிகளா வம்புவிட்டான்—மேயவர்த
மங்கந் துணிவுற்ற வாழியிற்செந் நீர்வளைந்த
வெங்கட் பணிநெளிந்த வேர்த்து. (௭௩)

மூவினைசெய் மூர்த்தி முனிக்கலையொடு கைதூண்டு
மேவினையுந் தேரினையு மேபுகழ்வார்—வீவினைச்செய்
கோல்விசைபொற் றேர்விசையுட் கொண்டவர்வேள் கைவிசையோ
கால்விசையோ வென்றார் களித்து. (௭௪)

தூயநெடு வாளி துணித்தவங்க மீதெழுத
தீயருயிர் வான்புகுத றேர்ந்துசெல—லேயுமலை
பற்றே லமரா ரடுபகைதீர்ப் பான்வைரா
நூற்றே றுதல்சிவனு மோர்ந்து. (௭௫)

காலொருபாற் கோடொருபாற் கையொருபாற் காதொருபால்
வாலொருபான் மாக்களிறு மன்றோற்ற—நூலுணரார்
சொல்லுபிரசங்கத்திற் சொற்பொருள்சோர்ந் தொற்றுமையின்
றொல்லுமுறை காட்டுமே யுற்று. (௭௬)

வாரற்ற வார்ப்பற்ற மன்னுங் கலினமற்ற
தாரற்ற பல்லணமுந் தானற்ற—சீருற்ற
சுற்றத் தவர்நிலம்பொன் றொகைமுத லொவ்வொன்றின்
பற்றற் றவர்போல் பரி. (௭௭)

பொன்றுரும் வையம் புரவிபோய்ப் பாகுபோய்
மின்றுருஞ் சில்லிபோய் மேவுவளி—தன்றலே
வாரிவெள்ளத் தாழு மரக்கலம்போற் செங்களத்திற்
சோரிவெள்ளத் தாழுஞ் சுழன்று (௭௮)

மன்னுமிடந் தோறு மழையெனவே வெங்கணைகண்
மின்னவிருஞ் செங்கதிர்வேல் வேள்சொரிந்தாள்—கொன்னுதிய
சூலங்கொ ணேமிகொ றன்வச் சிரங்கொல்கூர்
வேலதுகொல் லென்ன விரைந்து. (௭௯)

சூழியன்மா தானை துணிந்தவுட லேழ்கடல்பே
ராழியொடு வானு மடைத்தனவேள்—பாழியம்பா
லீரா விறந்தவெண்ணின் றெண்கவந்த மாடினவை
யோரா யிரகோடி யுண்டு. (௮0)

ஆரவுண ராக்கைநெய்த்தோ ராறாகி யாழியா
யோரும் பெரும்புறமா வோதமாய்க்—கூருமா
ஆழியெழு கீத்தம்போ லோங்கிப் பரந்ததே
யேழினோ டேழுலகு மேய்ந்து. (௮௧)

காரா ரவுணக் களேபரங்கா னீத்தமாத்
தோரார்கலமாகச்செங்குருதி—நீராக
வெங்கடனேர் தீபமா வேளுந் தகமீனைச்
செங்கடனே ராகுஞ் செறிந்து. (௮௨

அண்டமிது முற்றவுண ராவிகொள வேலையண்டங்
கொண்டபடை பின்னுங் குழுவிவரல்—கண்டருள்கூ
ராவி னினியனென்னி லம்பிலண்ட கோளகையின்
வாயின் மறித்தான் வலிது. (௮௩)

விட்ட கணையால் விளிந்த களேபரம்வான்
றொட்டவனி முற்றுமுற்றுச் சூழ்வனகண் — டிட்டயங்கு
கந்தவே டந்தைபோற் கண்களினா னோக்குதலும்
வெந்தவே யெல்லாம் விரைந்து. (௮௪)

வெந்ததுகள் பட்டனவான் மேவு களேபரந்தா
னாந்தாத்த நீர்வறந்த வுன்னுலக — முந்துபோ
லாயினமா லம்புயத்தோ னண்ட ரறுமுகனை
மேயினரார்த் தேத்தினார் வேட்டு. (௮௫)

அன்னபோ தொல்லை யடுகளத்திற் சூரடைந்து
மன்னித் திறஞ்சேர்ந்து மாகமுறத் — தன்னனிகந்
தன்னையலைத் தானையும்பர் தம்மோடு சாய்ப்பனா
னென்ன கவின்றா னினைந்து. (௮௬)

மாற்றமிந்த வாறுரைக்கு மன்னவர்மன் றன்னுளத்திற்
சீற்றமது மூளச் செருக்குறித்தான் — காற்றூர்ந்து
பூந்தனித்தே ரேறிப் புலவரெலாம் போற்றிடவே
சேந்தனுநேர் புக்கான் றெரிந்து. (௮௭)

புக்கபோ தையனொளிர் பொற்பார்ந்த தோற்றமும்பான்
மிக்க கரநிரையு மின்படையுந் — தொக்கமா
னனவிலும் வீரமுமே நோக்கிமுன்சொ றக்கனைப்போற்
கோனினைய கூறுங் கொடிது. (௮௮)

வானென்று நோக்கனருண் மன்வரத்தி னானிறவேன்
யானென்று மிப்பெற்றி யாயிருப்பேன் — றானென்று
கூர்த்தென்னோ டேற்றார் குலைந்திறந்தார் பல்லோரன்
றோர்ந்திலைநீ போலு முளத்து. (௮௯)

உளமெலிந்தென் வேலை யுனாற்றியுலை யும்பர்
இளவி சரதமெனக் கேட்டே — யிளமை
மிகுந்திடுமோர் பிள்ளைமையான் மேவினையிங் கள்ளல்
புகுந்திடுமோர் போதகமே போல். (௯௦)

உடைப்பெருமாத் தானைசெற்றா யுன்னைச்சே யென்று
விடுப்பதில்லை வெந்நுற்று மேவிப் — படுப்பனும்பர்
சாரதர்க டம்மையுமே தாக்கிக் கெடுப்பனென்றான்
சூரனெனும் வெய்யோன் சுளித்து. (௯௧)

தீய செயலினையே செய்கயவ நீவறிதே
வாய துறக்கயப்ப வம்புரைத்தா — யாயவே
மேலுரைக்கற் பாலதென்னை மேவுனக்கி யாம்விடுவெங்
கேகனுரைக்கு மென்றான் குகன். (௯௨)

தாரகமாம் வேளினைய சாற்றலும்வெஞ் சூர்வெகுண்டு
மேரு நிகர்வதோர் வில்வளைக்கப்—பாரிடர்மன்
வானோர் விடத்தை வளைத்தாங்குத் தானவர்கோ
னேனோன் றனைவளைத்தா ரார்த்து." (௯௩)

சிலைவீ சினர்தோ மரம்வீ சினர்சூ
லிலைவீ சினர்படைக ளெல்லா—முலைய
வலைவீ சினரெதிர்ந்தார் மாயவெறிந் தாம்பல்
வலைவீசி யாப்பவர்போல் வாய்ந்து. (௯௪)

கண்டவுணர் கோன்விரைந்து காண்ட மழைசிதறித்
தண்டவில்வெம் பூதர் சமைத்தடிந்தான்—மண்டவர்தாம்
வீடினார் தோள்கரம்போய் வீழ்ந்தனமன் வேற்றுருக்கொண்
டோடினா ராயினா ரோய்ந்து. (௯௫)

பூதர்தாஞ் சாய்தலும் போற்றிலக்கத் தெண்மரும்வே
றேதுவனுஞ் சூழ்ந்துடனே துன்னியிருங்—கோதைதொங்கு
பாரமுறு விற்கோட்டிப் பன்னரிய கோன்மாரி
காரவுணன் மேற்சொரிந்தார் காய்ந்து. (௯௬)

தூவுகணை யாவும்வெஞ் சூர் மேற் படவிளிவு
மேவினவா றொன்றும் விளைத்திலமன்—மாவயவர்
சீரோவப் பாராச் சிலைகுனியாக் கோல்பொழியாத்
தேரோடு சாரியுற்றான் றேர்ந்து. (௯௭)

உன்னூறு கோடிவெவ்வே வோர்தொடையி னூரவுய்த்து
மன்னூறு செய்வனியான் வட்டணைபோய்—முன்னூற
மாறுவிடு கோறுணித்து மற்றவய வீரர்தா
மேறுதேர் வில்லிறுத்தா னெய்ந்து. (௯௮)

அன்னவர்போ ராற்றுமுனே ராயிரமோ ராயிரங்கோன்
சென்னிபுரந் தோள்கரத்திற் சிந்திடலு—மன்னிலக்கர்
நேருமெண்மர் வில்வலிபோய் நீங்கினர்திண் வீரனென்றோன்
றேரின்மேற் பாய்ந்தான் சினந்து. (௯௯)

பாய்ந்துதிறல் வாகு பான்முனருள் வானூரீஇ
வேந்தன்கொன் விற்றுணிக்க வெவ்வவுணன்—காய்ந்துரத்தி
லோர்கரத்தி னற்புடைத்தா னெய்யெனவீழ்ந் தானவன்றா
னார்ச லுணர்ந்தெறிந்தா னங்கு. (௧00)

எறிந்தபோ தேர்விசும்பி லேகு மிளவ
லறிந்துசென்று வேள்பா லடைந்தான்—றறிந்தசிலை
பார்விட் டகன்றுவிண்போய்ப் பன்சே யடங்னக
சேர்வி லெடுத்தா னெடித்து. (௧0௧)

வினைகழலார் மன்னன் வரிவில் வளைத்துப்
புனலனல்கா லொலித்தல் போல—வெனைவருமே
யுள்ளந் துளங்க வுறுநா ணொலியெடுத்தான்
வள்ள லறிந்தனனே மற்று. (௧0௨)

கார்வண்ணன் பாருண்பொழுதுங் கஞ்சன் றுயில்பொழுதுந்
தீர்வுறு தண்டமுற்றுஞ் சென்றுருவி—யார்வி
ணிலவி யுயர்கயிலை நேர்வதோர் சீர்கொள்
குலவி லெடுத்தான் குகன். (௧0௩)

குன்று நிகராக் குலவுபெரும் வில்வாங்கித்
துன்று மெழுவகையாந் தோற்றமுற்று—நின்ற
கணத்துயிரின் கூட்டமொடு காருருமார்த் தென்னக்
குணத்தொனிதான் கொண்டான் குகன். (௧0௪)

மருவருணத் தோகை வழங்கலுமே கொற்றம்
வருதிண் வரிவில் வளைஇ—யொருபத்து
நூறா யிரத்திரட்டி னோன்கணைபெய் தானமற்கு
ஆறா யிரம்புரிகு ருற்று. (௧0௫)

வான்மறைத்த வாசை மறைத்த மதிதோயொண்
மீன்மறைத்த வெய்யோன் வெயின்மறைத்த—கான்மறைத்த
வாரு மலைமறைத்த வம்பார் மறைத்தவுடர்
கூரு மலைமறைத்த கோல். (௧0௬)

காற்றிற் செலுவ கனலிற் படர்வகொடுங்
கூற்றிற் கொலுவவிடக் கொள்கையுற்ற—பாற்றுச்
சிறையுள் ளனபல் சிரம்படைத்த வெண்டிக்
கறைபுகழ்கொள் சூரபன்ம னம்பு. (௧0௭)

மேரு வினைத்துளைப்ப வெவ்வேறு வண்ணத்த
கூருறுகோன் மாரிபெய்தான் கோனமா—ராருமே
கைகுலைத்தே யைய கரவிறும் போயுறைதற்
கெய்திடுமெங் குள்ளதென்று ரிங்கு. (௧0௮)

உரைத்தவர்க்கு மான்மா றுரைவழங்கு முன்வேல்
கரத்திலங்கு வேளிஃது கண்ணுற்—றெரித்துவெய்ய
தீவிடுக்கு மூதைபோற் றீயசில தன்பேரிகரி
லேவிடுத்தக் கோறடிந்தா னேய்ந்து. (௧0௯)

அங்கவுணர் கோனெங்கலைய னெதிருறவே
மங்குலென மானமிலா வண்டெய்தான்—புங்கவனுங்
கோன்மழைபெய் தான்கொடியோன் கூரேக் கணைப்புரத்திப்
போன்மொய்த் தறுத்த புகைந்து. (௧௧0)

அறுத்தபின்னும் வெய்யோ னறுமுகவன் மேலே
மறுத்தும் பகழிபெய்தான் வாளி—கறுத்துருமன்
கந்தனா றம்பிற் கடிந்தவற்றை நீறாக்கி
யுந்துவண் டேழ் நூறுவிட்டா னுற்று. (௧௧௧)

மாயைமகன் மற்றதனை வாளிகளி னாலறுத்தே
யாயிரங்கோல் செய்மு னணுகவிட்டான்—மேயவதை
யத்தொகையவத்திரத்தட் டம்பா யிரத்திரட்டி
யுய்த்தனன்வே டெவ்வெருவ வுற்று. (௧௧௨)

சீரார் குகன்விடுகோல் செல்ல வவற்றைச்சூ
ரீரா யிரம்பகழி யேவிவிட்டான்—ரூராருஞ்
சேயம் பனைத்துஞ் செலச்செலவே தான்முடித்தான்
றீயடைவ வாயிடல்போ றோர்ந்து. (௧௧௩)

ஐயன் விடுகணையை யவ்வவுணர் கோனீக்கும்
வெய்யன் விடுகணையை வேளறுக்கு—மெய்புநெடு
வாளிகுறைந் தாங்கெழுநீ மல்கியது பார்பகிர்ந்த
நீளசலம் வற்றியழுந் நீர். (௧௧௪)

தார்கெழுவேற் சேந்தனுமந் தானவர்தம் வேந்தனும்வெம்
போர்புரிதல் காணப் பொருவீர—வீர்வளைதான்
வெய்யவிவ ருள்ளெவர்பான் மேவி நடத்துமென
வையமுளத் தார்ந்துநின்றா ளாங்கு. (௧௧௫)

யாளிக்கு முன்னோனை யானைக்குப் பின்னோனை
வாளிக் குலமா மழைமறைத்த—வேளின்
வடியத் திரநூறி மற்றவனூர் பொற்றேர்க்
கொடியறுத்து நின்றார்த்தான் கோன். (௧௧௬)

சூரன்செவ் வாயிற் சுரிமுகம்வைத் தூதினன்றன்
சீரதிசைத் தென்னச் சினங்கொண்டு—கூரவே
யேற்ற கணைமழைபா லீராறு தோளுடையான்
றோற்ற மறைத்திட்டான் சூழ்ந்து. (௧௧௭)

மறைத்த விசிகத்தை வாளி மழையாற்
குறைத்தசுர னூர்தேர்க் கொடியை—மறைத்தலைவ
னேழ்கணையி னாலறுத்தே யேந்தல் குமரேச
னாழ்கடலின் வாயிட்டா னங்கு. (௧௧௮)

தானவர்கோன் கேதனமொண் சாகரத்தி லற்றுவிழப்
பானுகம்ப னென்னும் படைத்தலைவன்—றானுவந்து
புங்கவர்கள் போற்றப் புகழ்ந்துகுனித் தாயிரவாய்ச்
சங்கம்வைத் தூதினன் சார்ந்து. (௧௧௯)

பானுகம்ப னூதும் பணிலத்தி னோதை
தானுகம்பன் றணிலவத் தங்கிற்று—வானவர்த
நாதன் விறல்கண்டு நாரணன்றன் றூயசங்கும்
போதமுழங் கிற்றே புரிந்து. (கஉ௦)

போதகனில் வானவர்வேள் பொற்றடந்தேர் மீதுகொடி
யாதிநீ யென்றனலை யங்கேவச்—சோதியுமோர்
குக்குடமாங் கேதனமாய்க் கோமான்றேர் மேன்மேவி
மைக்குலம்போ லார்த்தான் மகிழ்ந்து. (கஉக)

கொக்குரவே டேர்க்கொடியாய்க் குக்குடங்கூ யிற்றவுணர்
தங்குல் புலர்வை கறைகாட்ட—பங்கயன்மு
னூர்பலரு மார்த்தனரா லவ்வொலிபோ யண்டமுட்டிச்
சூர்தன் செவிதுனிற்று சூழ்ந்து. (கஉஉ)

என்முன் வரற்கஞ் சிமையோர்வந் தார்த்தனர்வே
டன்வலிகொ னன்றிதெனுச் சாரயன்சீ—மன்மருளத்
தேவரைமுன் சொன்றுபின்னர்ச் செய்தன்னை வெல்வனென்று
னேவரையு மெண்ணிலா னேற்று. (கஉங)

இருக்கமைந்தன் போரிங் கிமையோர் திறலார்
செருக்ககல்வான் றேர்விண் செலுத்தென்—றிருக்கும்
வலவற் குரைத்திடலு மற்றவன்றூழ்ந் தொல்லை
செலவுய்த் தனன்வையஞ் சேண். (கஉச)

பாகனுகை தேரெழீஇப் பன்முகில்கீண் டும்பருறை
மாகமதிற் சென்றடைய மன்னவர்ம—னாகமன்ன
நீளியல்கொள் வில்வளை இ நோமரர் சோர்ந்திரிய
வாளிமழை பெய்தான் வலிது. (கஉ௫)

பெய்கின் றழிகீசன் பெற்றிதனை நோக்கியுள
மைகின் றவர்க்கருளு நாதன்சேய்—மொய்தகித
மார்விசிக முய்த்தவைகீத் தண்வலவற் பார்த்துவிண்மேற்
றேர்விடுதி யென்றான் றெரிந்து. (கஉசு)

என்னலுந்தாழ்ந் தேண்வலவ னிம்பரும்பர் புக்கெழல்போன்
மின்னவிருந் தேரதனை விண்கடவித்—தன்னவுணர்
மன்முன் விடவிரியு மாகாஞ்ச லீரெனவோர்
மென்முன் கரயமைத்தான் வேள். (கஉஎ)

கந்தனுரை கேளாக் கடவுளர்க ளெந்தையிவன்
வந்திடு முய்ந்தமெனு மாமகிழ்வு—நந்தவெஞ்சூர்
சென்றறிவார் தேவரென்முன் செய்கொலலெனத் தேர்ந்தெதிர்ப்
னன்றிதெனச் செய்தா னகை. [போ (கஉஅ)

சீற்றமிகு சூரன் சிலீமுகம நேகமுய்த்தான்
வேற்றலைவன் வாளிபல விட்டவைநீத்—தாற்றவமர்
செய்தா னிவர்தம்மிற் செல்லம்பு செல்லம்பிற்
பெய்தார் பொருதார் பெரிது. (௧௨௯)

விரைவினிரு வோரும் விசிகமழை தூய்ப்போர்
புரிபொழுதி லாசை புரையுற்—றெரிதந்த
தாரிரும்பார் சோர்ந்திரங்க வன்னவர்தேர் மீதலத்துச்
சாரிகையாப் போய்த்திரிந்த சார்ந்து. (௧௩௦)

பாதலமே சூழ்குவன பன்றிசையே யோடுவன
பூதலமே மேவுவன பூமணகர்—மீதுறுவ
கூறுபல வண்டங் குலவுவன நேமிசெல்வ
தேறுமவ ரேறுமணித் தேர். (௧௩௧)

மன்னிருவர் தேர்செல்வ மன்னிருவர் தாமருண்டா
ருன்னிருவர் மற்றோ ருயங்கினார்—துன்னிருநீர்
வண்டா ரணிபலைந்த வான்மா ருகடுதிர்ந்த
வெண்டா ரகையுகுந்த வீந்து. (௧௩௨)

தேரிரண்டு மேகித் திகழூழ தண்டமெங்குஞ்
சாரி வருகலொடுஞ் சண்முகன்மே—லாரு
மிணையிலனீ றூரா னெழிலி யெனவே
கணைமழைக ணீர்த்தான் கடிந்து. (௧௩௩)

மழுவனந்த கோடி மலிகப் பணமாங்
குழுவனந்த கோடி குலிசங்—கழுழ
னெழுவனந்த கோடிவே லெண்ணனந்த கோடி
கொழுவனந்த கோடியுய்த்தான் கோன். (௧௩௪)

அன்னபடை மாரிதனை யத்தன்காற் றிற்றிகழ்கோன்
மன்னவிடுத்தவற்றை மாற்றி முறை—பின்னருமோ
ரேழுடனே ழேவேவி பேறிரத மாதொலைக்கச்
சூழுறுமோர் தேரிலுற்றான் சூர். (௧௩௫)

மன்வில் வளைத்தவில் வன்பகழி தூண்டவரன்
றன்மகன்கண் டோர்திண் டனுவாங்கித்—துன்கணைக
ளேயவற்றை மாற்றிடலுஞ் சூரனந்த கோடிவெங்கோல்
சேயவன்மே லுய்த்தான் றெரிந்து. (௧௩௬)

கந்த னவற்றையெலாங் காண்டமழை யான்மாற்றி
யந்தநுவன் றோண்மிசையோ ராயிரங்கோ—லுந்தவவை
சூர்புயத்து மேற்படலுந் தூளாய்ச் சிதறிற்றோர்
போர்வரைமேல் வீழாலி போல். (௧௩௭)

அந்தையுறு தானவர்கோ னன்னதனை நோக்கியே
யெந்தையொரம்பிற் செல்ல விராயிரங்கோல்—சிந்தையினும்
வேகமாய்த் தூண்டவவை மேவியெந்து நுண்டுகளா
தாகமா வாசையுற்ற வார்ந்து. (கக அ)

ஆங்கதுபோ தையனுய்த்த வம்பனைத்து மாற்றியே
பாங்கமரும் வீரர்மா பாரிடர்மேல்—வேங்கணைக
ளேற்றலுற்றான் றன்மைகண்டு துன்னு யிரஞ்சரந்து
யாற்றலுற்றான் விற்றுணித்தா னங்கு. (கக க)

மற்றுமோர் வில்லேந்தி மஞ்சுலைய வார்த்தருவம்
பெற்றுவிண்ணிற் றோன்றவது பேண்குகன்கண்—ணுற்றும்பர்
சென்றார்ந்து தாக்கவிறை சேர்போ திளவலொடு
நின்றாடல் செய்குவன்சூர் நேர். (க௪0)

விண்ணின்று சூரன் விரைந்து கரந்துசென்று
மண்ணிற் செலநிலம்வேள் உந்துவெம்போர்க்—கண்ணுதையிற்
றோற்றமது மாற்றியே தூரீக் கடனடுவண்
கூற்றமன்னு ஞான் குறித்து. (க௪க)

மன்னவண்வேள் சென்றபொர மாயையின்வெஞ் சூர்மறைந்து
துன்னுந் திசைமுடிவிற் றோன்றவங்கு—முன்னிடப்போய்
மாதவத்திற் போருஞற்ற மன்னன் கரவற்றோ
பாதலத்தி னின்றான் பரிந்து. (க௪உ)

ஐயனங்குஞ் சென்றுசம ராற்றவுரு மாற்றியே
வெய்யன் மகமேரு மேனிற்பச்—செய்யனவண்
டுன்னவவன் பானுலகிற் றோன்றவங்கண் போய்க்குகன்சூர்
தன்னொடமர் செய்துநின்றான் றான். (க௪௩)

ஆற்றிமைப் போழ்தே யசுரனண்ட கோளத்தின்
மேற்றிகழ்வா யில்படர மேவவண்போ—யேற்றெதிர்போர்
செய்தனையா னேறிவுளித் தேரையம்பி னலட்டா
னுய்திறனல் குத்தமவே ளுற்று. (க௪௪)

கந்தன் கணையாற் கவின்மணித்தே ரிற்றிடலும்
மிந்திரஞா லத்தேரை யெண்ணவது—வந்தததின்
மன்னியர்ந்து போயண்ட வாயி லடைத்தமைகண்
டென்னிறைமை நன்றென்று னிங்கு. (க௪௫)

இறையிலவுணர்கோ னேந்துதனு வாங்கி
யறையநந்த கோடியம்பெய் தண்ட—நெறிவாயில்
பொத்து கணைக்கதவம் போழ்ந்தப்பா லாம்படையை
யத்தகுவன் கூவினு னார்த்து. (க௪௬)

ஆர்த்திடுமக் காலத்தி லண்டத்தப் பானின்ற
மூத்திடுநாற் றானைவெள்ளந் துண்ணெனப்போய்ப்—போர்த்தொ
செய்வான் குகன்பாற் றெழித்துமுற்ற வும்பருள [ழிலைச்
கவார்ந் தயர்ந்தார் நலிந்து. (கசஎ)

ஆலமோ வூழி யனலோ விடிமேக
சாலமோ வென்றயரத் தானைவெள்ளங்—கோலவேள்
தன்முகில்கான் றென்னப் படைவீசி யார்த்திடவெங்
கோன்சிறித் நோக்கினன்றன் கோ. (கசஅ)

வெற்படுமோ வேற்குகன்றீ மேவ விழித்தளவின்
மூற்படுமோ தானை முடிவுறலு—மெற்படுமோ
அண்டத்தப் பாற்படைபோர்ந் தண்மியத்தன் பாற்படைகள்
மீண்டத்தப் பார்த்துய்த்த வேர்த்து. (கசகூ)

பாப்பினுர் தானைதனைப் பாரா மறைக்கோர்
காப்பினுன் றீயுமிழ்தன் மானு—முரப்பிணு
மூழிற் சிறிதனல்பஞ் சோங்கறனிற் புக்கென்னப்
பூழியாய்ப் போர்த்தனவிண் பூ. (கரு0)

அந்தமிலாச் சேனைமுற்று மையனொருங் காரத்தால்
வெந்தழியப் பின்னுமே மேலையண்டத்—துந்துமத
வாபரிதேர் வல்லவுணர் மன்படைக ளார்த்துவா
மன்னன் கண்டா னெடிது (கருக)

இந்தனங்கை யாழி கழுமுளெழுந் தண்டமழுச்
சந்த முறுபடையைத் தானேக்கி—நந்தம்பாற்
றன்னு படைநிற்கத் துன்னுர் படையனைத்துங்
கொன்றடைதி ரிங்கென்றான் கூர்ந்து. (சருஉ)

பங்கமில்வேள் விட்ட படையனந்த கோடியா
யங்கதிருந் தீயு மாவும்போ—லெங்குமாய்
நின்ற படையனைத்து நீறுக்கி யோரிமைப்பின்
மன்ற விறல்படைத்த மற்று. (கருங)

ஆயகுகற் சூழ்படையைத் துன்னித் தொலைவுசெய்தே
மேயபடை டைந்து மிவணெழிய—மேயவோ
ஆயிரத்தே ழண்டத் தகலமும்போ யாங்கனிக
மயமுழு தட்டுலவு மற்று. (கருச)

இந்து படைமுற்று மண்டங்க டோறுநின்ற
வெந்ததுவர்த் தேய்த்து விரைந்துதிரி—தந்திடலுந்
தெவ்வவுணர் கோமான் செயிர்த்திதனை நோக்கிவல்லை
இவ்வனுயி ருண்பனென்று னேற்று. (கருரு)

சாற்றிமன்முன் றானுவருள் சக்கரத்தை யேத்திமுறை
வேற்றிகழ்கை வேண்மேல் விரைந்துவிட் — போற்றுகுக
னாரும் வெருவவரு மன்னதைவா வென்றபற்றப்
சூருட் டளர்ந்துநின்றான் சோர்ந்து. (க[illegible])

ஒல்லருமா மாயைவல்ல வோர்தனித்தேர் மேனின்றான்
பல்லுருவங் கொண்டு பகழிபெய்ய — வெல்லயிலோன்
றெம்மாய நன்றிதெனச் சேதனக்கோ லுய்த்தலுமஃ
தம்மாய முற்றுமட்ட தாங்கு. (க[illegible])

மாயவுரு மாய மதுகைபோய் மாழாந்து
தீய வொருவனே தேரினின்றான் — மேயதோர்த்
தண்டருஞ்செவ் வேற்கை யறுமுகனைப் போற்றிமண
வண்டரும்பூ மாரிபெய்தார் வாய்ந்து. (க[illegible])

ஆர்த்தவெஞ்சூர் தேரோடுந் துண்ணென்ன வேகாந்து
போர்த்தவண்டப் பித்திகைவாய் போயெய்தி — யார்த்தறைகூய்ப்
புக்காங்கப் பாலண்டம் போகத் தொடர்ந்தறிவின்
மிக்கானுஞ் சென்றான் விரைந்து. (க[illegible])

தின்னகத்திற் செல்லுந் தனித்தே ரொடுங்கடந்த
கொன்னமர்செய் திண்ணவுணர் கோனின்ற — வன்னவிடஞ்
சேறலுமே யெந்தையாஞ் சேயுடன்வெம் போருஞற்றி
வேறண்டம் போயினான் வேந்து. (க[illegible])

இன்னவண மேந்த விரும்புவன வண்டமுற்று
மின்னெனச்சென் றார்போர் விளைத்துநின்று — பின்னுமறை
வாரியற்கை யிற்செலவே ளவ்வண்டந் தோறும்போய்ப்
போரியற்றிப் போனான் புரிந்து. (க[illegible])

அந்தவம யத்தண்ட ரங்குரவர் தம்மைவிட்ட
மைந்தர்போற் றேம்பலுற்று மாலையண்மி — வெந்தகுவன்
மாயைவல்லோ னீண்டொரீஇ மற்றண்ட மேயதன்மை
சேயஃது சூழ்ந்திலன்கொ றேர்ந்து (க[illegible])

வாடினனென் றொன்னலனை மைந்தன் றொடர்ந்துசென்றான்
கூடினனோ நேர்ந்து குறுகலனைத் — தேடினனோ
தேரிலமற் றண்டத்துஞ் சேயவனோ டேகினனெ
னேரிடுமோ வென்றயர்ந்து நின்று. (க[illegible])

என்றபோ தங்க னெழிற்பூவை வண்ணத்தான்
றுன்று மயனும்பர் சூழலைப்பார்த் — தொன்றுமரி
சூரனுடை யாற்றலையே சூழ்ந்துமதித் தையன்வில்
வீரமறந் தையுறுவீர் வீழ்ந்து. (க[illegible])

ஓதியா யோர்ந்தா ருணர்வுமே யொண்ணாத
நீதியாய் நேரு நிமலமதாய்ச்—சோதியாய்ப்
பேதியா தேகமாய்ப் பேசுமெம்ம னோர்க்கெல்லா
மாதியா மாறுமுக னாங்கு. (௧௬௫)

ஈறில் பரனே யெழிற்குழவி தன்னியல்பா
யாறுமுகங் கொண்டுதித்த தல்லாமல்—வேறுதான்
சொல்லற் கியையுமோ தோன்றறன்மை தேறியுநீ
ரல்லற் படுகின்றீ ராழ்ந்து. (௧௬௬)

ஐய முறுதலீ ராயிர கோடியண்டத்
தொய்யெனச்சென் றூறு முடன்றொடர்ந்து—வெய்யனொடு
போரியற்றிச் செய்தாரந்துபோந்திடுவ னோரிமைப்பி
னீருமே காண்குவீர் நேர். (௧௬௭)

என்று திருமா லியம்ப வயன்முதலோர்
நன்றெனவே தேறினார் நண்ணவன்செ—லொன்றியவோ
ராயிர கோடியா மண்டத் தினுமோடித்
தூயனம ராடினான் சூழ்ந்து. (௧௬௮)

வெந்திறன்மாப் போராற்றி மேவசுரர் கோன்மீட்டு
மிந்தவண்டத் தேர்மலிம கேந்திரத்தில்—வந்திறுத்தான்
சாயை விடாதுசெல்வோர் தம்மைப்போற் சூரோடு
சேயுந் தொடர்ந்துவந்தான் சேர்ந்து. (௧௬௯)

வந்ததன்மை நோக்கியயன் மன்னைத் தொ...ந்தனனென்
றுந்தவுணர் தானை யுருத்துவளை—தந்திடலு
மெந்தை முறுவல்செய் தேண்படையை நீறாக்கித்
தந்தைசெயல் காட்டினான் றான். (௧௭௦)

ஆறுமுகனகையி னங்கியினாற் றானவர்க
ணீறுபட்ட சாம்பர் நிவாமதை—வீறார்பர்
கண்டனர்பூ மாரிபெய்தார் காய்சூர் தனிநின்று
னொண்டவனுண் சிந்தனல்போ லுற்று. (௧௭௧)

முன்புறுசே யங்கண் முறுவல்செய் திட்டதுவுந்
தன்படைமாய் தந்ததுவுந் தான்றனியா—நின்முறையும்
வீரரொடு பூதர் வியந்தார்ப் பதுங்கண்டு
சூரகத்திற் சொல்லலுற்றான் சூழ்ந்து. (௧௭௨)

பின்ன ரெழின்மைந்தர் போரமைச்ச ரேனையோர்
முன்னர் முடிந்தார் முடிவுறா—வன்னிலைய
பன்னனிகஞ் செவ்வேள் படுத்தான் றனியானே
னென்னசெய்வ தென்றுயிர்த்தா னிங்கு. (௧௭௩)

மாயைதனை மன்னினைக்க மற்றவணோர் வந்துநின்றே
யாயதிறன் மைந்தகளர் வாயென்னைக்—கூயினதென்
னென்னமகா ராதி யிறந்தோ ரெழத்தக்க
துன்னுதிற நல்கென்றான் சூழ்ந்து. (௧௭௪)

உன்னுமொக்க றுஞ்ச வொருவனே யாயும்பர்
துன்னுசிறை விட்டிலனீ தோன்றலுட—னின்னு
மிகல்செய்ய வெண்ணினையே யெல்லாத் திருவு
மகல்வதற்கோ ரையமிலை யால். (௧௭௫)

பன்னிருதோட் பண்ணவனைப் பாலனென்றே யுன்னலைநீ
யன்னவனங் கைவேலி னாற்படுதி—யுன்னரிய
வின்னினுயி ரேகநின்றா யென்னுரைகேட் பாயல்லை
சென்னிவிதி தீர்ந்துளரார் தேர்ந்து. (௧௭௬)

நின்றிடவஃ தேண்மைந்த நின்னுண் மகிழ்வுறுவான்
பொன்றினர்தாம் வேண்டிற் புறக்கடல்சார்—துன்றுமன்றன்
மண்டமுத மந்தரமா மால்வரையை யீண்டுநீ
கொண்டடைதி கூடுமென்றாள் கூர்ந்து. (௧௭௭)

இவ்வண்ண மாயையுரைத் தேகுதலுஞ் சூர்கேளா
வவ்வைதன் சூழ்ச்சிநன் றென்றார் மகிழ்வுற்—றெவ்வமிலா
வின்னமுத மந்தரங்கொண் டேக வெவ்வரையுய்த்து
மென்ன நினைந்தா னினிது. (௧௭௮)

தேரினின்று நீங்கியே சீயத்தின் மேலிவர்ந்து
சீரிந் திரஞாலத் தேரினைக்கூ—யோருளத்தின்
பொற்புலையச் சென்று புறக்கடலின் சாரமுத
வெற்பைக் கொணர்தியென்றான் வேந்து. (௧௭௯)

இந்திர ஞாலம்போ யேழ்கடற்கப் பாலமுத
மந்தரம்பேர்த் தேற்று மகேந்திரத்துட்—டந்திடலு
மண்ணவிரக் கால்வரவே யாங்கொழிந்த தானைமுற்றும்
துண்ணென் றெழுந்த துடித்து. (௧௮௦)

தூள்பட்ட யானை துரகதந்தே ரீர்க்குமா
வாள்பட்ட நெற்றியுடை வல்லவுணர்—நீள்பட்ட
சேனை யுயிர்த்தெழுந்து சேண்பார் நிறைந்தண்ட
மேனிலையின் காறுமுற்ற மீண்டு. (௧௮௧)

தண்டமெழுத் தோமரம்வாள் சக்கரம்வேல் கோனெடுங்கோ
தண்ட முதற்படைகொ டானவரோ—ரண்டர்
துடிக்கும் படிவேழஞ் சூழ்பரிமு தண்டம்
வெடிக்கும் படியார்த்த வோர்த்து. (௧௮௨)

என்னும் புலிவதனன் வன்னிமுக னெற்பகைஞ
னென்னுமறங் காயமைச்ச ரோரிருவர்—துன்னுஞ்
செழுந்தார்மூ வாயிரராஞ் செல்வருட னேரே
யெழுந்தா ரிமைப்பி னினிது. (கஅங)

நோக்கின்ற தொல்வடிவிற் றுன்னினர்சூழ் தானைகண்டு
நோக்கின் றிவணம்மேற் போந்தவனார்—சீர்க்கவெனச்
சூழுனது ரோணமுடிச் சூரன் புடைதன்னிற்
கூழுனர்போர் செய்வான் குறித்து. (கஅச)

உய்ந்திவர்தா மாருமெல்லை யுன்னிந் திராஞால
மந்தரமோ டுற்றதுவு மற்றவர்க—ணந்தவெழு
மாண்புமிறை நோக்கி மகிழ்ந்தனையைப் போற்றியே
வேண்புயங்கள் பூரித்தா னேய்ந்து. (கஅரு)

ஆற்றலிரப் புள்ளா னரியா சனமேறி
யேற்றபெரு நல்லவைக ளேய்ந்தொத்தான்—போற்றுந்
துணைவர்தோள் சென்னி துயங்கி நிவந்த
வணையை யியற்றிவா ரார். (கஅசு)

இமையுளார் பற்றுமுனந் தேர்ந்தோ டுதுமென்றே
யாமதமா தேரூர்ந்த மன்னொருபா—லுமொருபால்
சார்ந்தவரோா சாராகித் தாங்குபடை சிந்தியும்பர்
பேர்ந்திரிகின் றூர்நோக்கார் பின். (கஅஎ)

புன்னுருவங் கொண்டும்பர் போயினார் வேதாள
வெள்ளமுறு வீரரிவண் வீந்தமென்று—ருள்ளு
விலக்கரெண்ம ரேந்த லிவைநோக்கி யச்ச
மலக்கண் கலக்கமுற்று ராங்கு. (கஅஅ)

வென்றியுறு வேளிவ் விளைவனைத்து நோக்கிநின்ற
துன்றலன் றன் சூழ்ச்சியுமாய் சொன்னெறியுங்—குன்றெறுழ்வும்
பொன்றினர்தா மூய்ந்து பொலிவுற் றெழுகுழுவு
மன்றுநன் றென்றுநக்கா னன்கு. (கஅகூ)

அன்ன வமயத் தரிமுகனென் றின்பகைஞன்
முன்னெவருஞ் சூரபன்மன் முன்சென்று—மன்னவிவண்
மேவுதியா மெல்லாம்போய் வேளொ டவன்படைசெற்
றுவிகொடு மீடுமென்று ராங்கு. (ககூ0)

மற்றவர்சொன் மன்வினவி மாற்றலரைச் சாய்த்தமரிற்
சொற்றமுட னெய்திரெனக் கூறிவிட்டா—னுற்றவர்க
ளுற்படையார்ப் போடுருமி னும நெடும்படைதூய்
வெற்படையாற் சூழ்ந்தார் விரைந்து. (ககூக)

வீக்க முறுபடையும் வீரர் தொகையுநொறின்
மாக்கதியிற் சூழ்வுற்ற வன்புமே—நோக்கியும்ப
ருய்வா னுருததே யுயிர்த்தொகைசெய லாமிறுதி
செய்வான் படையெடுத்தான் சேய். (௧௯௨)

அங்கையிற் கொண்டே யகத்துவழி பாடுஞற்றிச்
சிங்கமுக னதியாந் தீயவுணர்—பொங்கக்
கொடுந்திறலார் தானைக் குழுவையிங்கு வல்லை
யடுதியா லென்றுவிட்டா னாங்கு. (௧௯௩)

அன்னபடை பாந்தளிடி யால முருத்திரர்த
மன்னுருவந் தீத்தெய் வதப்படையாய்த்—துன்னியே
மேவவுணர் மாப்படையை வீட்டி யிமைப்பினொன்
றேவரையுங் கொன்றதுவே யேற்று. (௧௯௪)

சூரின் பரிசனமாச் சூழ்ந்தபடை யாவுமட்டும்
பேரிந் திரஞாலப் பேருடைய—தேரின்க
ணாங்குற்ற வெற்பையுநீ றாக்கிக் குமரவேள்
பாங்குற்ற தீசன் படை. (௧௯௫)

சூரனிக மாயத் துயர்ந்து தளர்ந்திரங்கி
யாரொரு வாழ்ந்துதனி யானின்றான்—சாரதரும்
வீரரும்பூ மேலமரும் வித்தகனும் விண்ணவரு
மாரு முவகையுற்றா ரார்த்து. (௧௯௬)

அந்நிலையி னின்றிடுஞ்சூ ராற்ற வெகுளியுற்றுத்
தன்னிந் திரஞாலந் தன்னைப்பார்த்—துன்னிளஞ்சேய்
பாற்குழுவி யுற்ற பரிசனரைக் கொண்டண்ட
மேற்குழுவ வைத்தியென்றான் வேர்த்து. (௧௯௭)

சூர னுரைவினவித் தண்ணென் றெழுந்தோடி
வீரமொய்ம் பாதியா மேவினோர்—தீரவே
தாளரிருந் தானைகொடு தாங்கிமய றந்தண்ட
கோளகைவைத் தார்ந்ததுதேர் கூர்ந்து. (௧௯௮)

சேந்தன் றமியனாய்ச் சேனைபோய் நின்றனன்வெவ்
வேந்தனது காணா வியந்தனன்சீ—ரேந்திரதஞ்
சூர்வலிகொள் சூழ்ச்சியுந்தற் சூழ்ந்தவரைக் கொண்டுபடர்
தேர்வலியுந் தேர்ந்தனனே சேய் (௧௯௯)

கண்டழன்று விற்குனித்தோர் காண்டம்வைத் தார்படையைக்
கொண்டண்ட கோளகையிற் கூர்ந்துபுகும்—திண்டனித்தேர்
தன்னைக் கொணர்தியெனச் சண்முகவே ளுய்க்கவது
மின்னிற் புகுந்ததண்ட மேல். (௨00)

துன்னிவண்டத் தேரேண் டொலைத்தே யஸைதக்கொணர்ந்து
மன்னயில்வேல் வேண்முன் வருதலுமே—புன்னிலக்க
ரெண்ம ரிளவ லிரும்பூதர் குப்புற்று
ரண்மணியார் தேரினுமே யாங்கு. (உ0௧)

குதித்தா ரெவருங் குகன்றாள் பணிந்து
துதித்தா ரருட்கடலிற் றோய்ந்தே—கதித்தாரு
மல்லலந்தின்று டேரைச்சூர் மாள்கைதின்ன நீயங்கன்
செல்லலைகில் விங்கென் றன் சேய். (உ0உ)

ஆண்டதனைக் கேட்டனவி லஞ்சிமுன்கொள் வன்மைபோய்ப்
பாண்டிலந்தே ரையன் பணிபினின்ற—தாண்டகைதன்
விண்டபடை மீண்டதுந்தேர் மீண்டு வாராமையுஞ்சூர்
கண்டனன்வெந் தீயிற் கனன்று. (உ0௩)

அன்னதனைக் கண்டசுர னுங்கொருவில் வாங்கியே
பன்னிருகை வேண்மேற் பகழிசெய்தான்—மின்னினன்போற்
றேசிறைவன் சேயவற்றைத் தின்சிலையைக் கோட்டிவெங்கோல்
வீசி விலக்கினான் வேர்த்து. (உ0௪)

தீயன் சினங்கொளீஇத் தேருகைக்கும் வன்மையோன்
காயமெலாந் தைக்கக் கணைபொழிந்தான்—மேயவளிப்
பாகன் வருந்திப் பரிதூண்டா நின்றனனவ்
தேகன் றெரிந்தா னினிது. (உ0௫)

கண்டவெழிற் கந்தன் கணையா யிரந்தூய்ச்சூர்
கொண்டவரி வில்லைக் குறைத்துப்ப—றுண்டமதா
யாக்கலுமோர் சூலமுட னுடலரி யூர்தியைச்சேய்
மாக்கதிர்த்தேர் முன்னருய்த்தான் மன். (உ0௬)

தூண்டரிமான் வள்ளுகிர்க ளென்கரத்தா லெந்தைபிரான்
பாண்டிலந்தேர் மாவைப் பதைப்பவெற்றி—யாண்டயலார்
பூதாஞ்சவார்ப்பப் புரவலன்கைச் சூலத்தை
நாதன்மேல் வீசினா னன்கு. (உ0௭)

அன்னதுமின் னிற்செலும்போ தாயிரமாங் கோடியம்பு
வின்னிரையிற் பூட்டி விடமுருகன்—றன்னவற்றைப்
பல்லுருவம் பெற்றுப் படர்சூலம் வீட்டியே
செல்லுருமிற் சென்றதன்றே சேண். (உ0அ)

செல்ல விசாகன் நிருத்தாதை தந்தபடை
வல்லபத்தை யுன்னியத்த வச்சிரத்தை—வெல்லக்
கருதியொன்னான் விட்ட கழுமுடனைப் பற்றி
வருதியெனச் செல்லவுய்த்தான் மற்று. (உ0௯)

விட்ட குலிசம் விரைந்தேகித் தீக்கான்றே
வொட்டலன்றன் சூலமது வொல்லைவந்து—கிட்டேதலும்
மன்னதனைப் பற்றி யவிர்முத் தலைகவ்வி
மன்னுட்க மீண்டதன்றே வாய்ந்து. (உகO)

முத்தலைவேல் கொண்டு முரண்குலிச வேல்குமான்
கைத்தலத்துய்த் தேதானுங் கையமர்ந்த—தத்துணையி
லன்னதுகண் டண்டரெலா மங்கை குவித்தீண்டிவ்
வொன்னலர்க்காய்ந் தாடியென்று ருற்று. (உகக)

என்னவெந்தை கேளா விராயிரவெங் கோல்பூட்டி
மன்னலனூர் தந்துசெலும் வான்மடங்கன்—மின்னவிருஞ்
சென்னி தனிலழுத்தச் சேணிற் சினந்தாற்றி
வன்னிலத்தில் வீழ்ந்ததுவே மாய்ந்து. (உகஉ)

ஊர்தி யிறந்ததுவு மொண்சூலம் வேள்காத்திற்
சேர்தந் ததுவுஞ்சூர் தேர்ந்துசெயிர்த்—தோர்படையைத்
தோதனைச் சியமதைச் சிந்தவனே டுற்றவரை
யோருருக்கொண் டெண்பனென்று னுற்று. (உகங)

என்றுமனத் துன்னி யிணையிலரு மாயையா
னின்ற வவுணர்கோ னேமியம்பு—வொன்றுருவ
முற்றவடி வெய்தி யுவரியினூர்த் தொண்சிறகர்
பெற்றவரை போலுற்றான் பேர்ந்து. (உகச)

பறையடித்த தென்னப் பகரவுணன் புள்ளாய்ச்
சிறையடித்துச் சேணிலெழுத் திண்மாத்—தறைவரைப்பு
முற்று மணிச்சிறகான் மூடிச் சுழலுமும்ப
ருற்றவினன் வான்மறைய வுற்று. (உகரு)

அடிக்கு மிறகா லவிர்பூதர் தம்மை
பிடிக்கும் விழுங்கும் பெருமான்—கொடிக்குலமன்
றேரதனைச் சூழ்ந்துலவுந் தேர்வலவன் றன்னையெற்றும்
வீரரையும் பற்றுமந்த வீ. (உகசு)

இவ்வணம்வெஞ் சூர னியற்று செயல்காணூக்
கைவ்வண் மலர்புடைத்திக் கற்புநன்றென்—றவ்வண்ணன்
மேருநிகர் வில்வாங்கி மேவநந்த கோடியம்பு
சூருறுபுண் மேற்பொழிந்தான் சூழ்ந்து. (உகஎ)

நெறிதருகோன் மாரி நிமலன் விடச்சூர்
சிறையி லவற்றையயல் சிந்தி—யறைதருகூர்ந்
துண்டத்திற் கொய்யுந் துணைத்தாளி னின்முறிக்கும்
விண்டத்த வேசுழலும் வேர்த்து. (உகஅ)

ஞாலமுலை வெங்கு ணனிபடருந் திண்பூத
சால மெறிந்துகவ்வித் தான்செல்லுஞ்—சீலனது
கண்டுபுள்ளைத் தேரொடுபோய்க் காய்தல் பிழையென்றுட்
கொண்டுமேக வாற்குறித்தான் கூர்ந்து. (௨௧௯

இந்திரனைக் காலை யிறையோன் குறிப்பொடருண்
முந்துதன்மேல் வைத்த முறைதெரிந்து—சந்தரமார்
தோகையுறு மாமயிலாய்த் தோன்றியொள்வேற் சாமிதனை
யோகையுடன் போற்றிநின்றா னுற்று. (௨௨0)

நின்றிமோ மஞ்ஞை நிலங்கிழிய மேருமுதற்
குன்றங் குலையக் குலவேழர்—துன்றிவிழ
மாதிரைநீர் வற்றவரா மாழ்கியஞ்ச வன்சிறகான்
மோதி மொழியலுற்றான் முன். (௨௨௧)

வைவே லிறைவகேள் வானவர்கள் போற்றவென்பார்
செய்பே ரருளிற் சிறந்துளே—னுய்வானோர்
மெய்வா னெறிகண்டேன் மின்கழலுங் கப்பெற்றேன்
பொய்வாழ்வுந் தீர்வேன் பொலிந்து. (௨௨௨)

கன்றவல்லல் செய்தெமரைக் காய்சிறையில் வீட்டியசூர்
துன்றுபுள்ளி னுக்கையது துன்னுமிடஞ்—சென்றுசென்று
மாலிகனன் காற்றிவெல்வான் வல்லை யடியேன்றன்
மேலிவர்தி யூரவென்றான் வேந்து. (௨௨௩)

என்னலுமெங் கோமா னிரதத்தி னீங்கியே
மன்னுமஞ்ஞை யாய வலாரிதன்மேன்—மின்னவைகித்
தீதூ ரவுணன் செலவுதனை நோக்கியும்பர்
மீதூர லுற்றான் விரைந்து. (௨௨௪)

மையமருங் கண்டன் மகனுருமி னார்த்தகவுஞ்
செய்ய மயினடத்தித் தீயையந்த—வெய்யவனி
சென்றாங்குச் சூழ்ந்திடப்புள் சேணின்று தாக்கமஞ்ஞை
நின்றாங் கெதிர்த்ததுபோர் நேர். (௨௨௫)

நேர்பசலைத் துண்டமது நீட்டியுடல் கீண்டுதிரம்
வார்தரவா யிற்கவ்வி வாங்கியே—கூர்சிறையாற்
கொள்ளுருவ மேற்புடைத்துக் கொன்காலி னுற்றாக்கிப்
புள்ளுருவர் செய்தனர்வெம் போர். (௨௨௬)

இத்திறம்போர் செய்காலை யோர்மஞ்ஞை யேந்தறலைத்
பைத்தலையார் தூவி பறித்துமுகங்—கொத்தி
யுருமணிக்க லாபமீர்த் தூறுசெய்தா னேமிக்
குருமணிப்புள் ளானோன் கொடிது. (௨௨௭)

அச்செயல்வேள் காணு வழலென்ன வேகக்குக்
கைச்சிலையைக் கோட்டிக் கணையவுண—ஞுச்சிமுதற்
கால்வரையிற் பெய்தான் கயவன் பதைத்ததறி
மேல்வரையிற் போய்த்திரிவான் வேர்த்து. (௨௨௯)

திரிகின்ற போது சிகிகூடத்தி யேகி
யரனமர்கோல் பெய்ய வவுண—ஞரமெலிந்து
பற்கறித்துச் சீறிப் பகவன் கரத்திலங்கு
விற்கறிப்ப துன்னினுன் வேர்த்து. (௨௨௯)

வருதலும்வேள் வாள்வீசி மன்னலன்புள் ளாக்கை
யிருதுணியாய் வீழ வெறிந்தான்—வெருவவும்பர்
சூரா மனண்டமுடி தோய்ந்தவிர வோங்கியே
பாராகி நின்றான் பரந்து. (௨௩௦)

எழுகடலுந் தூர்த்தென் றிரதந் தடுத்து
வழுவில்சால் சென்னெறியு மாற்றிக்—செழுவநின்றான்
சேந்தனது காணுச் சிலைகுனித்தே ழம்புதொடுத்
தேர்ந்தகவி னுன் றுரைப்பா ருங்கு. (௨௩௧)

வானளவு மோங்கி வசுந்தரையா வென்றுனின்றான்
கோலக்கணை நீவிர் குறைதருமேழ்—மீனமுறு
மத்திகளி ராய்ப்போ யடிவீ ரெனவிடுத்தான்
பத்திலை மேவும் பரன். (௨௩௨)

ஓ ஏருக த்தகளை யூழினனி யார்த்தெழுமேழ்
மோது நிரைச் படல்டோன் முற்றியெஞ்சூர்—காதகன்றன்
மண்ணுருவை மாற்றித்தம் மகாணுருவ மேற்றெளிர்வே
லன்னவிட மீண்டேற்ற வாங்கு. (௨௩௩)

வெய்யவனு காணு வெருண்டிகட லாருக
வாய வா ஞன்ன யருநிறம்போன்—மையமரு
மாணுவ னீத்த வடிவாகி யாத்தன்மு
னீணுவங் காறநின்று னீண்டு. (௨௩௪)

ஒன்னலன்றன் மாய வுருவி னிலைநோக்கித்
துன்னுகணை நூறு தொடுத்தேசூர்—முன்னடையா
மன்னூழித் தீயியல்பாய் வாய்ந்தட்டே வம்மென்னக்
சொன்னூழின் விட்டான் குகன். (௨௩௫)

அவ்வாறே யோர்நூறு மப்பு மருணீரா
லெவ்வா வனற்பே ருருவாய்ப்போய்த்—தெவ்வாக
நின்றவன்ற னீத்தவுரு நீங்கிடவெவ் வாயுமே
சென்றுண் டனவே செறிந்து. (௨௩௬)

நீத்த வியற்கைதனை நீத்ததன்மை காணுரு
மாத்தகுவர் கோமான் மனங்கவன்று—தீத்தழலா
மேனியது கொண்டு வியனண்ட கோளமட்டுந்
தானிமிர்ந்து நின்றான் றனித்து. (உ௬எ)

நிண்ணுமதைக் கண்டே நகைசெய்து கூற்றமென்ன
வெண்ணுங்கோ லோரா யிரமூழி—பண்ணுமாச்
சூறையி னேகிவெய்ய சூர்மாய மாய்த்துவம்மென்
றுறைமுக னுய்த்தா னழன்று. (உ௬அ)

உய்க்குங் கணைபோ யுலகெங்குஞ் சூழ்மருத்தின்
றொக்க திறனெய்திச் சூரனவா—மிக்குருவை
வாயகன்றெவ் வாயுமாய் வாய்மடித்து வாய்தந்து
நாயகன்றன் பாங்கடைந்த நன்கு. (உ௬௯)

ஒன்று னுறுசினங்கொண் டோதையுரு வுற்றார்ப்ப
மின்றோர் விறல்கெழுவேல் வேளேத்தி—கொன்றோர்கோ
லாயிரநூ றம்புகொண் டவ்வுருவை யாடரவாய்ப்
போயழித்து வம்மென்றான் போர்த்து. (உஎ0)

அக்கணைத்தி லக்கணைக ளாந்தரத்தி லந்தரமா
பைக்கணத்த பறேலைய பன்னகமா—மிக்குருவாய்
மாற்கொருவைப் பாவன்னன் மாவுருவைத் தாமிசைந்து
வேற்குகன்பான் மீண்ட விரைந்து. (உஎக)

இன்னவண மீரிருநா ளீறுற்று மீறுறு
துன்னரும்போ ராற்றி யொருசூரன்—பின்னருமே
மாயமுறு பெற்றி மனத்துன்னிப் பல்லுருவ
மாயவிரத் தோன்றினு னங்கு. (உஎஉ)

மூவரா மென்ன முயங்கியொரு சார்வருமாந்
தேவரா மென்னவொரு தேம்வருமா—மேவருமன்
காற்றெனவோர் சார்வருயாங் காரெனவோர் சார்வருமாங்
கூற்றெனவோர் சார்வருமாங் கோ. (உஎ௩)

ஒருசார் விடம்போ லொருசார் பணிபோ
லொருசார் வரைபோ லொருசா—ரிருள்போ
லொருசார் படைபோ லொருசார் கரிபோ
லொருசா ரரிபோ லுறும். (உஎ௪)

ஆனைமுகன் சிங்கமுக னங்கிமுகன் யாளிமுக
னேனையர்போ லோர்சா ரிசைந்துவருந்—தானைமன்னுந்
தந்திரிபோ லோர்சார் தயங்கிவரும் வல்லவனு
மந்திரிபோ லோர்சார் வரும். (உஎ௫)

இத்தன்மை மைத்தகுவ னெங்கு நிறைவாகி
யத்தன்பாற் சூழ வவைநோக்கி—மொய்த்தசுரர்
புந்தி தளர்ந்து புலர்ந்திரிந்தா ராழிநில
நந்திடும்போ தாமுயிர்போ னைந்து. (௨௪௬)

அந்நிலைமை நோக்கியே யாரா யிரகோடி
மின்னுகணை வாங்கியங்கை விற்பூட்டி—மன்னுமம்பென்
றேவிர்கா ணீவிர்போய்த் தெவ்வுருவம் யாவுமட்டே
மேவிர்கா ளென்றுவிட்டான் வேள். (௨௪௭)

விட்டிடுகோல் போய்வெகுண்டு மேவலனேங் கோருருவு
மெட்டுனைறிக் கம்புவிவா னீண்டியே—யட்டனசூ
சேகறு யங்கணின்று னேவினமீண் டையன்பி
னுகமுறு தூணிபுக்க வாங்கு. (௨௪௮)

வெம்புயலிற் றோன்றிவிளி மின்னெனப்பற் பல்லுருவ
மிம்பரிலெம் முன்ன மெடுத்துநின்று—யம்பினு
லம்ம வவற்றையெலா மட்டனமீ றில்லாத
நம்முருவங் காண்டியென்று னன்கு. (௨௪௯)

தானியம்பு வண்ணமுந்நீர் சாருலகு திக்கண்ட
வானிமையோ ராருயிர்கண் மற்றுமத்தன்—மேனியின்க
ணோருருவாய் மேயதன்றி யோருருவே றில்லையெனப்
பேருருவாய் நின்றான் பெரிது. (௨௫௦)

செவ்வியமா வுள்ளடிமுற் சென்னிவரை வெற்புமுத
லெவ்வுபர மான்மாவீ றுற்றிலங்க—வெவ்வுயிரு
மாட்டிநிற்கு மந்த னவிர்றிருமா மேனியின்கண்
காட்டிநிற்கக் கண்டார் களித்து. (௨௫௧)

செஞ்சுடரெண் ணில்கோடி சேர்ந்திருந்த தென்னவொளி
விஞ்சுருவை நோக்கா வெருவியும்ப—ரஞ்சலியா
வண்கையுற நின்றனர்வே லஞ்சன்மி னென்றருளி
னெண்கை யமைந்தா னுகந்து. (௨௫௨)

அண்டரெலா மைய னருண்முறைகேட் டுள்ளுவகை
விண்டுளிகாண் மந்துறைபோன் மேவிநின்றார்—மண்டகில
மேவுருவங் கண்டவுணன் விம்மிதத்த னாய்நிற்பத்
தேவுணர்வு தந்தான் சிறிது. (௨௫௩)

சேயனிகழ் செற்றண்டஞ் சென்றமர்செய் தேற்றவர்க்காய்த்
தேயமணித் தேர்தடுத்தே யான்கொண்ட—மாயமுற்றும்
வீட்டியெலாந் தானாக மேவிடுமோர் மாவடிவங்
கா[illegible]மயென்கண் முன்னின்றான் காண். (௨௫௪)

கோலமஞ்ஞை தன்னிற் குலவிவரு செவ்வேளைப்
பால னெனவிருந்தேன் பண்பறியேன் — மாலயனார்
வாரணன்முற் றேவர்க்கு மற்றவர்க்கு மோர்மூல
காரணமா மூர்த்தியிவன் காண். (௨௫௫)

தூற்றபெரு மாவடிவந் தன்னிமுன்னர் வந்தவொற்றன்
சொற்றவுண்மை வாய்மையே சூழ்ச்சியின்யான் — பெற்றவண்ட
மான்று நிவந்தவெலா மத்தனடி ரோமத்திற்
றோன்றிநிற்கு மன்றே துதைந்து. (௨௫௬)

அண்டர் முனிவர்மற் றுனோ ரகிலமுமாக்
கொண்டபடி வம்யார் குறித்தறிவா — ரெண்டருக
ணுக்கைமுற்றும் பெற்றவர்க்கு மாரநந்த கோடிகற்ப
னோக்கிடவு மேகடக்கு னொய்து. (௨௫௭)

சீர்தருவேள் கொண்ட திருவுருவப் பேரெழிற்
ஞர்தமக்குண் டிவ்வுலகி லற்புதமே — கூர்தரப்பல்
காணோக் கினுமென்றன் கண்டெவிட்டிற் றில்லையினும்
யானோற் றலிற்பெற்றே னீது. (௨௫௮)

ஆரா யிரகோடி யங்கசர்தங் கோலமெல்லாஞ்
சேரா வுருப்பெறினுஞ் செவ்வேடன் — சீராருங்
காலெழிலுக் காற்றாக்காற் காமரவன் பேர்வடிவுக்
கேலவுரைப் பாரா ரிணை. (௨௫௯)

இங்கெ னிளவ லிளையமைந்தன் சொற்றதுண்மை
யங்குமரன் மேனியெழி லங்கமுற்று — நங்களுள
மூழிபல காண்கினுநன் குள்கினுமுற் றூதெய்ய
னூழினமர்க் குற்றூ னுகந்து. (௨௬௦)

சீற்றமுற்றுந் தீர்ந்த செருவிலுறு மூக்கமற்ற
தாற்றவரோ மஞ்சிவிர்த்த வார்விழிநீ — ரூற்றிற்
பெருகிற் றிவன்பாற் பிறந்தனபே ரன்பே
யுருகிற்றென் னுள்ள முகந்து. (௨௬௧)

போய வகந்தை புருந்தனநற் போதமேண்
டுயதோர் தோள்கண் டெடுத்தவுள — நேயமுட
னெண்டேவர் போற்று மெழிற்பேர் வடிவமுற்றுங்
கண்டேன் றவத்தாற் களித்து. (௨௬௨)

சூழ்த றுணைத்தா டொழுத லிணைக்காங்க
டாழ்த றலைதுதித்த றூலுமனா — மாழ்தந்து
நானன் கிவற்காளாய் நல்வாழ்வு மேவுதற்கு
மானந் தடுத்ததே வந்து. (௨௬௩)

ஒன்னலனுஞ் செம்ம லுருக்கண் டழல்வதன்றி
யுன்னனல்கொள் வெண்ணெயென வுள்ளுருகி—யின்னுயிர்மே
லென்வயத்த னாதலின்றி யெண்குணத்துச் சண்முகத்தோன்
றன்வயத்த னாதலுற்றேன் றான். (௨௬௪)

தாரரு மார்பன் றமியனொடிந் நாள்காறும்
போராடி நின்றதெல்லாம் புந்திகொள்ளி—னோராடல்
சீர்தயங்கச் செய்ததல்லாற் சென்றனையான் செற்றதுமேல்
யார்தடுக்க வல்லா ரெதிர்ந்து. (௨௬௫)

வேதமிலா வானவரை யான்சிறையி விட்டதெலாந்
தீதெனவே சொற்றனரச் செய்கையினான்—வேதந்தா
னென்றுமறி தற்கரியா னிங்கணுகப் பெற்றேனா
னன்றதுவே யாயிற்று நன்கு. (௨௬௬)

ஒன்றிரண்டு மூன்று முருக்கொண்ட மூர்த்திமுன்
னின்றமர்செய் தேனிந்நா ணெஞ்சயரேன்—மன்றகைமை
நன்றடைந்தேன் வீரனுமே நானுனே னிற்குஞ்சீ
ரென்றுமுட னிற்பதுண்டோ விங்கு. (௨௬௭)

வானோர் சிறைநீக்கி வள்ளலையான் றாழ்ந்திந்த
வூனோ டுயிர்போற்றி யுன்னளிய—ரானோர்போ
லெய்துவனே லோரா யிரகோடி யண்டமுற்று
மெய்தருசீர் பொன்றுதோ முன். (௨௬௮)

என்னவிவ்வா றோர்நிற்ப வேந்த லனைத்துமாந்
தன்னவிர்மாத் தோற்றந் தணந்துகுகன்—மின்னெழில்கூர்
நன்மயிலாய் நண்ணியவ னற்போத மாற்றியே
தொன்மைபோ லாக்கினான் சூழ்ந்து. (௨௬௯)

சூர னுணர்வகன்று தோகையுருக் கண்டளவிற்
கூர வெகுளிமேற் கொண்டேக்கம்—போரிலுற
வென்றிண்மை நன்றென் றிருகை புடைத்துநக்கு
மன்றன் முடியசைத்தான் மற்று. (௨௭0)

பேயுருக்கொள் கள்வன் றிகழ்போர் செயற்காற்றான்
மாயையினா லென்னை மயல்புரிந்தா—னாயதனைத்
தள்ளவல்லே னென்றாற் சமமெனக்கார் மெய்யழியே
னுள்ளமழி கின்றதுண்டோ வூங்கு. (௨௭௧)

குமரவே ளோடெதிர்த்துக் கொற்றமுறு கின்றே
னமரவனீ திந்த வடிவெஞ்—சமர்மூட்டி
யேயற்ற விமையவரை யின்னே முடித்துமுன்னே
சேற்றி மகல்வனென்றான் றேர்ந்து. (௨௭௨)

அன்ன துறுதியா வாரவுணன் கொண்டபின்று
மன்னுமொரு மாயங்கொண் மந்திரத்தைப்—பன்னியென்று
மாலுறவே ஞாலமொடு வானமுற்று மாயிருளி
னேலுருவ மேற்றார்த்தா னேய்ந்து (உஎந)

வீரைதனின் முன்னம் விடமெழுந்த வாறுபோற்
பாரினோ டண்டமுற்றும் பாயிருளி—னோருருவங்
கொண்டிடையே பாய்ந்துநிரை கொள்சிரங்கை மெய்ச்சுரரை
யுண்டிடுவான் சென்றா னுயர்ந்து. (உஎச)

காரியல்கொள் சூரன் ககனத் தெழலுமம்ப
ரோரியல்கொ ளோர்தியினு னுய்த்துணர்ந்தே—யாருநம்மைச்
சாடியவந் தெய்துமெனத் தாஞ்சிதறி நில்லாமே
யோடினருள் சோர்ந்திரங்க லுற்று. (உஎரு)

சிற்பரனே யோலமன்பர் சித்தமுணர் வோயோல
மெய்ப்படிவத் தேவர்கடே வேயோலந்—தற்பரைநல்
கொண்மகனே யோல மொளிர்சுடரே யோலமெழிற்
சண்முகனே யோலமென்றார் தாழ்ந்து. (உஎசு)

கங்குலண்கார் நேர்ந்த காரமறை வின்னேகி
துங்கியசெல் வானோட நோன்மையிலே—மெங்கினியா
மேவியுய்வ மையவல்லே வெய்யோ னுயிர்கொண்டே
யாவி யருளுகென்றா ரார்த்து. (உஎஎ)

தேற்றலையீ தெந்தாய் சிறிதுநீ தாழ்ப்பாயே
லாற்றலுட னேவந் தனைத்துமுண்ணு—மாற்றலன்றன்
மன்னுயிரை வாங்குதியால் வல்லையெனப் போற்றினன்
மின்னுமயி லாய்க்கொண்ட வேந்து. (உஎஅ)

அன்னார் மொழியுமவ னாற்றலுமே தேர்ந்தானகன்
மின்னார் கரத்தமரொள் வேலினைப்பார்க்—தொன்னாய்ப்
போர்மே வவனகம் போழ்ந்தே குதியென்றாச்
சூர்மேற் செலத்தொட்டான் சூழ்ந்து. (உஎகூ)

சேயொருவன் றொட்ட திருநெடுமா னாங்கொன்றே
யாயிரமாங் கோடி யருக்கரிற்றே—சேயநனி
தோன்றியனல் கான்றுசெலச் சூர்கொ ளிருளுருவந்
தான்றியங்கிச் சென்றதம்மா தாழ்ந்து. (உஅ0)

அன்னவன்றன் மாய மழிந்ததும்வே லேவயின்முன்
மன்னியது நோக்கிநந்தா மாவரங்கொ—ளென்னையிங்க
னென்செய்யுஞ் சேய்விடுவே லென்றுநக்குச் சீற்றமுற்றான்
மின்செய்யும் வாளுடைய வேந்து. (உஅக)

எற்றுநீ ராழிதனை யெண்டிசையை மாவுலகை
மற்ற மலரில் வதிபவன்மு—னுற்றபல
வாருயிரை வீட்டி யடுவேன்மே லீதென்று
வாரிநடு வாயினான் மன். (௨௮௨)

வன்னிபுகை மாழை மரகதஞ்செம் மாமணிபோன்
மன்னு தளிர்தழைபூ மற்றிரண்டுர்—துன்னியெங்கும்
போதமா காரிற் பொலிகவடு போக்கியே
சூதமா நின்றனன்வெஞ் சூர். (௨௮௩)

விண்மா முகடளவு மேல்போய்க் கிளர்சாகை
யொண்மா திரம்வரையு மோச்சியே—திண்மாக்கொள்
பார்முழுதுந் தாங்குகச்ச பத்துணைத்து ரோட்டிவெய்ய
சூர்பருமால் வெற்பின்னின்றான் சூழ்ந்து. (௨௮௪)

ஓராயிரநூ றோசனையென் றோதளவை யான்ற
பராரைமா வாயுலவை பல்கி—விராவிவன்மா
லேழுலகீர் ஞால மிருவிசும்பி னெல்லைவரை
நீழல் பரப்பிநின்றா னேர்ந்து. (௨௮௫)

ஓடிவரும் வேங்கை யுரிகொள் சரபமக
ளூடிவரு மம்மா னவிர்கரவேன்—மாடிவர
மாவுருவ வெண்கரியும் வன்மடங்க றானுமஞ்ச
மாவுருவ மாய்நின்றான் மன். (௨௮௬)

நன்குறுதிக் காடை நரையா னுளான்மைந்தன்
புன்கிரவுஞ் சந்துளைத்த பூவைவேன்—முன்குயிலா
மிக்குருவ மஞ்ஞைவன்னி மேவுகொடிச் சேவலஞ்சக்
கொக்குருவங் கொண்டுநின்றான் கோ. (௨௮௭)

ஒக்குமித்தி மன்னி யொளிர்சோதி சம்புநல்கு
பூங்கடப்பந் தாருளான் பூவைவேல்—ஞாங்கருள
வேவடிவ மாவரசு மேவுபல தேவரஞ்ச
மாவடிவ மாநின்றான் மன். (௨௮௮)

ஓதருமா சூதமா யோங்குலவை யாற்றிசைவான்
போதவெறி தந்தசைந்தான் பூதலங்க—மீதுலவத்
தாங்காவ வேந்தழுங்கச் சாபமலை சூறையினு
லாங்கசைவு கொண்டாங் கரசு. (௨௮௯)

ஞால மிடிந்தவிரு நான்மாக் கரிமடிந்த
வேலைமுற்று மொன்றாற்ற வெற்புலைந்த—மேலுளமீன்
வீழ்ந்தவென்று மாழ்கினம்மா மேருவுற்று ரும்பாஞ்சி
வீழ்ந்தமிசை யாருலகம் வீந்து. (௨௯௦)

சிந்துரமே நின்றவெய்யோன் செய்கையுருக் கொள்கைவலி
ஈந்து திறமுற்று நாடியே—யெந்தைதொட்ட
ஞாங்கருருத் தொல்லை நடந்ததண்டத் தீயனைத்து
மோங்குருவொன் றற்றமைபோ லுற்று. (௨௯௧)

குன்றுருவிப் பாய்ந்தவயில் கூருயிரெல் லாமழிய
வொன்றுருவிற் றோன்று மொருவன்போற்—சென்றதுசீர்
மேலமன்ற வேற்படைக்கு வேறுபடை தம்முளரன்
சூலமன்றி யில்லை துணை. (௨௯௨)

மூவுலகு மேழ்கடலு மூதண்ட கூடமுற்று
மாவுலவு மார்பனயன் வான்பதமு—மேவரன்வாழ்
பொற்றையல்லா மற்றப் பொருப்புந் தழற்சிகையின்
சற்றை யுமிழ்ந்தவயில் காய்ந்து. (௨௯௩)

ஆலம் பிடித்தமல னங்க ணனலுறுத்திச்
சூலம் பிடித்ததொழில் சொல்வித்தாங்—கேல
மடம்பிடியா நின்றசூர் மாவைத் தடிந்த
துடம்பிடியாந் தெய்வ முருத்து. (௨௯௪)

ஆழ்ந்தகட லுப்ப ணமரா மிரவடிவம்
போழ்ந்துக்கிர் வேலாற் பொருக்கென்ன—வீழ்ந்து
தவவன்மை யாலே தனித்தெழுந்தா னென்றாற்
றவவன்மை யன்றோ தலை. (௨௯௫)

உருவிற் றலைமை யுறுகதிர்வே றன்மே
லுருவித் தலைசாய்ந்து மொண்டொல்—லுருவெய்தி
யுய்வதுன்னிப் பாரா னுறையுடைவாள் வாங்கியமர்
செய்வதுன்னி வந்தான் சினந்து. (௨௯௬)

செங்கதிர்வேல் சென்றெதிர்ந்த தியவெஞ்சூர் மார்பங்கீண்
டங்கமிரு கூறாக்கி யாழியினுய்த்—தெங்குமறை
கங்கையெய்தி யாடிக் கருதிமையோ ரேத்தவெங்கை
யங்கையெய்தி வீற்றிருந்த தாங்கு. (௨௯௭)

தாரவடிவேன் மீளச் சயம்புவரத் தால்விளியா
மேவலனுஞ் சூரெழுந்து மெய்யிரண்டிற்—சேவலொன் றாந்
தோகையொன்று மாகித் துதிதருசெவ் வேண் முன்னம்
வாகையம ராற்றவந்தான் வாய்ந்து. (௨௯௮)

மணியசல மொன்று மரகதவெற் பொன்று
மிணைகொ ளடிசிறக ரேய்ந்து—திணிதருநற்
சேவ லொடுமயிலாய்த் தேவனூ ருய்க்கவந்தான்
மேவலன்செவ் வேண்முனமர் வேட்டு. (௨௯௯)

மருளுட்டும் புன்போல வந்திடுஞ்சூ ரெந்தை
யருளுட்டஞ் சேர்த்த வளவிற்—றெருளுட்டு
நெஞ்சத்த னாகியக னீங்கிநின்றான் வஞ்சத்தன்
புஞ்சத்தன் மாயமெலாம் போய். (௯௦௦)

தீயபுரிந் தாரேனுஞ் செவ்வே டிருமுனுற்றாற்
றாயரா யின்புததி தோய்வரென்கை—யாயவுமே
வேண்டுமோ விந்நாண் மிகுபோர் விளைத்தவெஞ்சூ
ரீண்டுவரம் பெற்றுய்ந்தா னீங்கு. (௯௦௧)

அக்கணமெங் கோமா னருளா லுணர்வுற்ற
குக்குடத்தை நோக்கிக் கொடியாநீ—மிக்குயர்நற்
றேர்மேவி யார்த்தியெனச் சேவறக்க தேபணியென்
றேர்மேவி விண்ணெழுந்த தேய்ந்து. (௯௦௨)

சீர்மேவு செஞ்சூட்டுச் சேவல் செழுங்கொடியா
யோர்மே வுளத்திற்செல் லொண்டனிப்பொற்—றேர்மீப்போ
யண்ட மிடிதரவே யார்த்தருமே றட்கவன்னி
கண்டஞ்ச மேவியதங் கண். (௯௦௩)

சீர்திகழ்வேற் செவ்வே டிருக்குருவிற் கொண்டதொல்லை
யூர்திவிட்டு நீங்கி யுணர்வுற்ற—சூர்திகழ்மாத்
தோகைமே லேறிச் சுமக்குதியெந் தம்மையெனு
வோகையோ டேர்தலுற்றா னுற்று. (௯௦௪)

மேரு வரையிடிய மேவுநிலந் தான்வெடிப்பச்
சோர வனல்பதைத்துச் சூறையுட்க—வாருமண்ட
கூடநந்த வார்த்துக் கொழுந்தோகை வீசியிடி
யாடரவே நிற்றே மயில். (௯௦௫)

பார்தாங்கு பாம்புமற்றப் பாந்தளரு ளச்சுறவார்த்
தேர்தாங்கு மீசனைமுன் னேய்ந்தரியாங்—கார்தாங்கு
மாண்மையெனச் செவ்வேற் பரன்றனைச்சூ ரமஞ்ஞை
மேன்மையுறக் கொண்டதுதன் மேல். (௯௦௬)

சூல்கொண்ட கார்மின்னிச் சூழநடுச் செல்லினன்போல்
வேல்கொண்ட பெம்மான் விளங்குமயின்—மேல்கொண்டு
மாகமுற்றுஞ் சுற்றி மகேந்திரமூ தூர்வரைப்பி
னாகவத்தி னெல்லைபுக்கா னாங்கு. (௯௦௭)

மிக்குளவேற் கோமான் பொறியார் மயூரமாய்க்
குக்குடமாய் நின்றவரைக் கூர்தரப்பார்த்—திக்கணநா
மிக்க வியற்கையாய் மேவுநீ ரென்னவவர்
தக்கவுரு வாய்ப்பணிந்தார் சார்ந்து. (௯௦௮)

வள்ளறனைத் தாழ்ந்து வழுத்தி யிமையோர்த
முள்ள முருக வுருவிழிநீர்—தள்ள
வினிய மொழிதவற வின்மதுவுண் வண்டிற்
றனிமகிழ்வு கொண்டுநின்றார் தாம். (௩0௯

அணங்கயில்வேள் சூர்முதலை யட்டுவந்த தோர்ந்து
நிணங்குலவு போர்க்களத்தி னின்ற—கணங்கள்
கெழுதார்த் தகைவீரர் கேழிளவல் யாருந்
தொழுதார்த்தார் சூழ்ந்தார் துதைந்து. (௩௧0)

சூரபன்மன் வதைப்படலம் முற்றிற்று

ஆ திருவெண்பா ௩௩௯0.

---

# தேவர்கள் போற்றுபடலம்.

---

நேர்தன்னமுமில்லா நின்மலன் றன்வேலாற்
சூர்தன் னுடல்பிளந்து தோகைமே—லார்தகைமை
மன்னரிமால் வேதனும்பர் வானமிர்தெய் திற்றென்ன
வன்னதுகண் டார்த்தா ரணைந்து. (௧)

ஆர்த்தா ரெழுந்துதுள்ளி யாடினார் பாடினார்
போர்த்தார் புளகம்பொற் பூமாரி—தூர்த்தாரான்
முன்னற் கருமருளை முன்னித் தொழுதனர்வேள்
மன்னற் றுதிப்பார் மகிழ்ந்து. (௨)

நீலாழி தன்னு ணிறமுகில்கொ ணீர்வறப்ப
வேலா கவம்புரிந்தே யேகுதனி—வேலாலே
சூர்தடிந்தாய் தாமெமக்குத் தொல்லைப் பழவினையின்
வேர்தடிந்தா யென்வேண்டும் வேறு.

அஞ்சுமுக நாரி யருமகனே காரவுண
ரஞ்சுமுக ஞர்வரத்தா லார்த்தலைக்க—வஞ்சுமுகந்
தேறுமுக மின்றித் தியங்குமெமை யாளவன்றே
வாறுமுகங் கொண்டுதித்தா யாங்கு. (௪)

தீயவர்செய் தீமையெலாந் தீர்ந்தோம் பழியகன்றோ
மேயமறை யாறு வெறுக்கைபெற்றோங்—காயவுணர்
தம்மால் வருந்தெமக்குத் தண்ணருணீ செய்தமையா
லம்மா பிழைத்தோ மடுத்து. (௫)

செய்பவனு மைம்புலனுஞ் செய்வித்து நிற்பவனு
மெய்து பொருளு மெனையுநீ—யுய்வகையி
னையவடி யேமுணர்ந்தோ மன்னதனால் வெம்பவம்போய்ச்
செய்யகதி சேர்துந் திகழ்ந்து. (௬)

ஈண்டே யெமருக் கிடர்செ யவுணரெலா
மாண்டே விளியும் வகைபுரிந்தே—யாண்டனையா
வேண்டே மினியாது மேலாய நின்கழற்கே
பூண்டேந் தொழும்பு புரிந்து. (௭)

என்று விளம்பி யெவருநனி யேத்துதலு
மின்று ரயில்வேல் விமலன்கேட்—டுன்றுவோர்
மன்று ரணனயன்மால் வானோர்க்கு மேனோர்க்குந்
நன்று ரருள்புரிந்தான் றான். (௮)

தேவர்கள் போற்றுபடலம் முற்றிற்று.

ஆ. திருவெண்பா ௧௩௯௮.

# இரணியன்புலம்புறு படலம்.

அதுபோ தவுணு ரவுணர் சிலவர்
கதுமெனப்போய்க் காவலன்சீர்க் கந்த—னுதிதருவே
றன்று விறந்ததன்மை சாற்றப் பதுமைமற்ற
மின்று ரொடுகேட்டாள் வேர்த்து (௧)

மன்னவர்மன் மாய்ந்தனனென் மாற்றமது கேட்டளவிற்
பன்னியுயிர் நீங்கினாள் பன்னுமற்ற—பின்னனைய
நன்றுணைவி மார்கள் வயிறலைத்து நொந்தழுங்கிப்
பொன்றினர்போல் வீழ்ந்தார் புலர்ந்து. (௨)

அன்னார் பெருந்தீ யழற்குண்ட மொன்றாக்கிக்
கொன்னார் பதுமைதனைக் கொண்டுய்த்தும்—பின்னாருந்
துன்றுகுயி லீட்டந் துளிர்மாவிற் புக்கனபோற்
சென்று விழுந்தார் செறிந்து. (௩)

வெந்தழலி லன்னார் விளிந்தா ரதுநிற்கத்
தந்தை முடிந்ததுவுந் தான்சேவல்—சந்தமயின்
மன்னியலில் வேண்மருங்கு வந்ததுவுங் கண்டிரங்கி
மன்னிரணி யன்கரைவான் விண். (௪)

நின்றென் பழையுணராய் நானவின்ற மாற்றங்க
ளொன்று முறுதியென வுன்னலையே—பொன்றுதற்கோ
புக்கால வேலவன்முன் போர்புரிந்தாய் வேந்தநினை
யெக்காலங் காண்பே னினி. (௫)

ஒன்னார் வலிகண் டுனைச்செருவிற் போற்றாமே
யின்னா ருயிர்தாங்கி யாமெளிதே—னென்னாநீ
யன்னதனை நோக்கியோ வன்பிலன்முன் வந்திலைகொ
லென்னதனைச் சொல்வா யினிது. (௬)

நில்லா வுடலை நிலையா மெனக்கருதிப்
பல்லார் பழிக்கும் படியுனக்கும்—வல்லாளா
சொல்லா தகன்றனனீ துஞ்சியபின் வந்தடைந்தே
னல்லார் களிற்சிறந்தே னான்.

ஆழியங்கைப் புத்தே ளயன்முதலாம் வானவர்கள்
வாழி யெனவழுத்த வைகியநீ—பூழியணி
பாழியா ரெண்டோட் பரன்சிறுவன் றேரின்கட்
கோழியாக் கூவுதியோ கூர்ந்து. (௮)

பெற்றவண்டத் தாருயிர்கள் பேரிடமின் றேயிறைஞ்சப்
பொற்றகழன் மேவு புரவலநீ—யிற்றை
யயிலார் வடிவே லமர்கரத்தோன் றன்னை
மயிலாச் சுமக்குதியோ வாய்ந்து. (௯)

பொங்கு வெகுளி பொரும்போ ரிகலுள்ளந்
தங்குவன்மை மானஞ் சயமகந்தை—யிங்கிவைதா
மங்குற்ற நின்னை யடைந்திலை வேறுதா
னெங்குற்ற தையா வியம்பு. (௧௦)

என்று கனக னிரங்கி நெடிதுயிர்த்துத்
துன்றுகட லின்முன்போற் றுன்னிவல்லே—சென்றுபுகா
மாடெய்திப் பெற்றோர்க்கு மற்றோர்க்குஞ் செய்கடனு
ேறெய்திச் செய்தா னுவந்து. (௧௧)

மாண்டார்தமக்கவுணர் மன்மரபிற் கேற்றபடி
பூண்டார்க் கனகன் புரிந்தெவையும்—வேண்டானாய்க்
கூற்றொருசார் வீழக் குமைத்தவனை யுண்ணினைந்து
நோற்றொருசா ருற்றா னுனித்து (௧௨)

இரணியன்புலப்புறு படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா ௧௬௧௦

---

# மீட்சிப்படலம்

---

மற்றதுபோ தேண்வீர வாகு தனைநோக்கிக்
கொற்ற நெடுவேற் குமரன்சூர்—முற்றவைத்து
வாட்டு சிறையினின்று வானோர் தமையெல்லா
மீட்டு வருதியென்றான் வேட்டு.

குன்றமெறி வேலனை நூ கூறுதலு நன்றிதெனை
வென்றிமொய்ம்பு தாழ்ந்து விடைபெறீஇ—யொன்றுகள
நின்று தருவர் நெடுகேர்போய் வானவர்க
டுன்றுசிறை வைப்புற்றான் சூழ்ந்து. (உ)

செல்லுந் திறலோன் றிறனோக்கித் தேவர்தா
மெல்லவரு மற்புதஞ் செய்தித்தான்—வல்லி
பரியவங்கை கூப்பிப் பருவரனீப் பானீ
பெரிதுவந்தா யென்றணைந்தார் பேர்ந்து. (ங)

வம்மின்கள் வம்மின்கள் வானத்தி ரெல்லீரு
நும்மையடர் சூரை யொருநொடிப்பு—ளெம்மைய
னிம்மெனவேல் கொண்டெறிந்தா னென்னலுமே தேவரெலா
மம்மமகிழ்ந் தேகினா ராங்கு. (ச)

வயந்தனக்கோர் வைப்பாகும் வள்ளன்முன் செல்லச்
சயந்தனோ டும்பர் தணந்தங்—குயர்ந்த
வணங்கார் களத்தணுகி யத்தனடி போற்றி
வணங்கா மகிழ்ந்தார் மருங்கு. (ரு)

அத்தனண்டர் பாற்பே ரருள்கொண்டு நோக்கிவெஞ்சூர்
வைத்த சிறையில் வருந்தினீ—ரித்துயர்போ
யென்றுமின்பின் வாழ்குதி ரென்னலுமன் னோர்பணிந்து
துன்றிடர்தீர்ந் துய்ந்துமென்றார் சூழ்ந்து. (சா)

வாசவனின் புற்று வணங்குஞ் சயந்தனைத்தா
னேச முறத்தழீஇ நீள்பலநா—ளீசன்செய்
வல்லியிலெய்த் தாய்கொலெனை மாற்றநவின் றும்பரையும்
புல்லினனம் மாமுறையே போய். (எ)

கொற்றவேற் கோமான் கொடுந்தகுவன் கொன்களத்தி
லற்றறநா ளாவி யகல்பூதர்—துற்றபடை
முற்றும் வருவான் முருகவேண் முன்னவனை
யுற்றனவே யெல்லா மொருங்கு. (அ)

அருணன் கமர்முகமோ ராறுடைய வம்மான்
வருணன் முகநோக்கி வன்சூர்—முரணகரை
யொல்லை யழித்தியென்றா னோதத்து ளங்ககரை
வல்லை யழுத்தினனீர் மன். (கூ)

அன்னபொழு தாறுமுக னம்புயன்மால் வேந்தேத்த
முன்னருமா வீரர் முரண்பூதர்—மன்னனனி
யார்த்துடனே செல்ல வமர்மா நிலந்தணந்து
பேர்த்துவெஞ்சூ ரூர்கடந்தார் பின். (கo)

இலங்கைதணந் தாழ்ய்ந் தேகியண்டர் போற்ற
நலங்கிளருஞ் செந்திநர் நண்ணித்—துலங்குமஞ்ஞை
நின்றிழிந்து பொன்னூர் நிகேதனத்தி லிட்டவரி
மின்றவிசில் வீற்றிருந்தான் வேள். (கக)

சூராதி யாய சுலவுதமர் மாண்டமையாற்
சோரம ஞசெளசந் தீர்தருவான்—போராழி
மூழ்குவன்போ லுட்புகுந்தான் மொய்செங் கரங்குவித்தே
யேழ்குரகத் தேர்மே லினன். (கஉ)

தொக்கமனைக் கஞ்சந் தொகையிதழ்க்கை கூப்பவே
மிக்கவினன் வீரைபுக மேவியெழு—செக்கர்.
வராதா பதர்வளர்க்கும் வன்னியொக்குஞ் செவ்வேள்
பிரதாப மானும் பெரிது. (கங)

அன்னபொழு தாறிருதோ ளண்ணலைமான் முற்றேவர்
சென்னியுறத் தாழ்ந்து சிறியேமிங்—குன்னிணைத்தாள்
பூசை புரிதுமென்றார் புண்ணியனன் றென்றிசைய
வாசையொடெல் லாமழைத்தா ராங்கு. (கச)

மந்திரமா மூர்த்தியுமை மாதுணரச் சொல்குமார
தந்திரமா நூற்படியே சண்முகற்குப்—புந்திமகிழ்ந்
தாரா தனம்புரிந்தங் கண்டரெலாம் போற்றவவர்ப்
பாரா வருள்புரிந்தான் பாங்கு. (கரு)

மின்கதிர்வேல் வேனுமக்கு வேண்டுவன கேளிரென
வென்குறையுண் டேண்டு ரிணைத்தடிந்தாய்—நின்கழற்க
ணென்றுமன்பு மல்கவர மெந்தாய் தருதியென்றார்
நன்றென் றருள்புரிந்தா னன்கு. (கசு)

வண்டா ரயன்முதலோர் வள்ளலைப்பூ சித்துவாங்
கொண்டார் தமியேனுங் கொள்வனென—விண்டாவு
செங்காஞ்சே ஞைச்சிச் சிரந்தாழ்ந் தெழுபவன்போ
லங்கதிரோன் றோன்றினா னங்கு. (கஎ)

அப்பொழுதங் காலயமொன் றாக்குவித்துச் சிற்பரனை
வைப்புறுமா தானுவினின் மன்னவிரித்—தொப்பில்
கழிபொருள்க ளண்டர் கனிந்துதவ வன்பின்
வழிபட்டனன் காற்றினன்வேள் வாய்ந்து. (கஅ)

மீட்சிப்படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா கசஉஅ.

யுத்தகாண்டம் முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

## கந்தபுராண வெண்பா

### ஐந்தாவது

### தேவகாண்டம்

---

# திருப்பரங்குன்று சேர்படலம்.

---

மன்புலவை வேடர் வழியிலெலனை யீர்த்தலைக்கா
தின்புலவு மோகத்தி லெய்தவுய்ப்பா—யன்பர்
நெருக்குமரக் கோட்டத்த னின்மலமாஞ் செய்ய
வுருக்குமரக் கோட்டத்த வுற்று. (க)

இன்னதன்மை யீச னிணைத்தாள் வழிபடல்செய்
தங்கிலைய நீங்கியண்ட ரார்முனிவர்—தன்னனிக
முன்னு தலைவ ரொருங்குபுடை சாரவே
மின்னுமயின் மேல்கொண்டான் வேள். (உ)

மேவுமஞ்ஞை மேலமர்செவ் வேண்மா லயன்மகவான்
றவிலெறும் வீரர் தமைநோக்கி—நீவிரெலா
மும்மினவிர்ந் தோங்குமணி யூர்தி மிசையினராய்
வம்மினம்பா லென்றான் மகிழ்ந்து. (ங)

மாலு மயலு மகவானு மற்றவரு
மேலும் பரிமே லிவர்ந்தற்றார்—சாலுமணிக்
கோயின் மருங்கெங்குங் கொன்பூத வெள்ளமீ
ராயிரம்வந் தீண்டினவே யார்த்து. (ச)

சேனை படாச் செறிபூழி தூசியிற்போய்
வானை வளைத்த வளைமுதலா—மேனையிய
மார்த்தவென் றா ழோட வவிர்கவிகை யோடுகொடி
போர்த்த புதுமை பொலிந்து. (ரு)

வின்னக் கொடிகொடிசீர் மல்காவு வட்டமிலை
பன்னற் கவிகை மரைமலர்கண்—மின்னயின்மீன்
மாத்தாங்கர் தோலாமை வாயனிக மாவாரி
புத்தனவே சாலப் பொலிந்து. (சு)

கொற்றமன்வே ளூர்மஞ்ஞை கூர்ந்தொறும்வெம் ப[illegible]ந்தலை
வுற்றசைய மூக்கி னுலகுகுத்தி — யுய்த்தறியு
முன்குயினைக் கீறி யுருமுறவே பற்றுமால்
கொன்குக் குடமாங் கொடி. (௭)

இவ்வண்ணந் தானை யெழுச்சிகொடு சென்றிடவே
தெவ்வண்ண லைக்காய் திருக்கைவேற் — செவ்வண்ணக்
குன்றகந்தோ றோடுங் குழகனவி ரிங்கரி
னின்றகன்றே போனா னெடிது. (௮)

பூத ரொலிவினவிப் புட்குலமு மாக்குலமும்
போதவெருண் டுள்ளம் புழுங்கியே — காதரந்தா
னுற்றிரிந்த பாந்த ளொடுங்கி முழைபுகுந்த
துற்றகுரங் கோடினவே சூழ்ந்து. (௯)

காந்தள் விளக்கேந்தக் காமர் மயிலாடப்
பாந்தளது பாராப் பரிசுதவா — மாந்தர்போற்
சென்று மறையுஞ் செழுஞ்சார லார்புலிமா
னொன்றொலிகேட் டஞ்சினவே யுற்று. (௧௦)

ஆரணமா வார்ப்பு மமரர்தாம் போற்றொலியும்
வாரணவு பேரியங்கண் மாமுழக்குஞ் — சீரணவு
போர்ப்பினனி கத்தொலியும் பொற்றேரை வாரணமா
வார்ப்பி னனிமறைந்த வாங்கு. (௧௧)

மிடைகுறிஞ்சி மாண்பினைய வீறநட வைகொள்
படைநடுவ ணேகிப் பலங்கொண் — டடைசூர்
வரங்குன்ற வுய்த்திடுவேன் மன்கூடன் மேல்பாற்
பரங்குன்ற முற்றான் பரிந்து. (௧௨)

ஆவயின்முன் னங்கணுறு தவத்தோ ரோடயன்மு
னேவருஞ்செவ் வேளை யிறைஞ்சியிங்கண் — மேவுதியிவ்
வோங்கல் சிறந்ததென்றே யோதிடநஞ் சிந்தையுமஃ
தாங்கொலென வேறினன்வே ளாங்கு. (௧௩)

ஓங்குவரை தம்மு ளுயர்தருமா மேருவினை
வாங்குதிரை யார்பயங்கொள் வாரிவளைந் — தாங்குச்
சிரங்குன்றம் போன்ற திறற்பூத வெள்ளம்
பரங்குன்றஞ் சூழ்ந்த பரந்து. (௧௪)

காலை யதிற்கடவுட் கம்மியன்வெற் பில்வரம்பில்
கோலவுள்ள றெய்வக் குலக்கோயில் — சாலைதட
நல்கவவை பார்த்தருளி நண்ணவயர் தம்மைநிறீஇ
மல்குதளி சார்ந்தான் வரன். (௧௫)

மன்மயின்மே னின்றிழிந்து வானவர்பான் மேவிடப்போய்
மின்மடங்கன் மெல்லணைமேல் வீற்றிருந்து—பொன்மரும
ஞாதியரை யாங்காங் கமர்த்தினன் சேவடிசா
ரோதியரை யாள்வே னுகந்து. (கசு)

குலக்கிரிநேர் பூதமன்னர் கொன்வீர மொய்ம்ப
னிலக்கரெண்மர் யாரு மிறைவன்—மலர்க்கழரூழ்ந்
தாங்கிருந்தா ரன்பா ரறுமுனிவ ரர்ச்சனைசெய்
தோங்கிருந்தாள் போற்றினா ருற்று. (கஎ)

வழிபடு ராசான்றன் மைந்தர்க் கருடான்
பொழிதருகண் ணோட்டம் புரிந்து—கழிய
மறைதந்து மன்சின் மயப்பொருள்கள் யாவு
மறைதந்து வைகினா னங்கு. (கஅ)

——:0:——

திருப்பரங்குன்று சேர்படலம் முற்றிற்று.

## தெய்வயானையம்மை திருமணப்படலம்.

கூடந்துடைக் குஞ்சரத்தைக் கொன்வேற் குகற்குநல்க
வேந்த விதயத்தி லெண்ணியே—பூந்தவிசார்
மின்கருத்த னாதியருண் மேவவுரை செய்யவுவந்
துன்கருத்து நன்றென்றா ரோர்ந்து. (க)

பன்னிருகை வேள்பாற் படப்பிடியும் பொய்கைவாய்
முன்னரே நோற்றமையான் மொய்ம்பயனும்—பின்னரெய்திற்
றன்னுற் கியல்வதுவை யாலீதற் கீங்குமுய
லென்னாக் கரைந்தா ரினிது. (உ)

அனையபோ தொற்றனைப்பார்த் தண்ணல்பொன் வெற்பின்
மனைவி யொடுதனயை வல்லே—யினிது
விளித்தனையே கென்னப்போய் மின்சசியைக் கண்டு
களித்தனோயான் றாழ்ந்தான் கழல். (ங)

மாண்டான்சூர் மைந்தரொடு வானோர் சிறையகன்றா ர்
மீண்டான் பரங்குன்ற மேயினன்வே—ளாண்டாங்
கடுத்தனனின் கேள்வ னழைத்துவா ரும்மை
விடுத்தனனே கென்றான் விரைந்து. (ச)

அம்மொழிகேட் டம்மி னணங்ககன்று விம்மிதமுற்
றெம்மையுமே யில்லதோ ரின்பெய்திக்—கொம்மென்
றெழுந்தனள்வெண் ணான்மருப்பி யானைமேற் கொண்டு
செழுந்தனயை யோடுசென்றாள் சேண். (ரு)

பொருப்பரக்குன் றார்சனையும் பொற்குவடும் பெற்ற
திருப்பரங்குன் றேகித் திருவு—மருப்பரங்குன்
றக்கமுலை யானையும்வந் தண்ணலிடம் வைகமின்னைத்
தொக்கமின்னார் தாழ்ந்தார் தொழுது. (௬)

கண்டான் மகனைக் கருணையி னாற்றழீஇக்
கொண்டான் மகிழ்ந்தான்பால் கொங்கையுக—விண்டான்
கவலை வெறுமையுளார் காஞ்சனம்பெற் றாற்போ
லுவகையுற்றான் வேந்து முகந்து. (௭)

அஞ்ஞான்று வானவரோ டாக்கைமுற்று நோக்கமுற்றான்
மைஞ்ஞான்ற கூந்தன் மகள்வதுவை—கைஞ்ஞாங்கர்ப்
புங்கவற்குச் செப்பிடுவான் புந்திகொடு கந்தமல
ரங்கழற்கிட் டேத்தினா னங்கு. (௮)

காரவுணா ராய களைகட்டா யிங்ஙின்ற
சீரமரர் தங்கள் சிறைமீட்டாய்—தேரெனக்கு
முன்னின்ற சீர்புரிந்தாய் முற்று முணர்ந்தெளியேன்
செய்ந்நன்றி யுண்டோ செயற்கு. (௯)

மூந்தியான் பெற்றவெழின் மொய்குழலா ளிவ்வரைக்கண்
வந்தமர்வா டன்னை மணமுடித்தே—யெந்தையே
கந்துறழ்நின் றோளிற் கலந்தி யடியேங்க
ளுய்ந்துபயன் கொள்ளவென்றா னோர்ந்து. (௧௦)

என்னலுமே யிந்திரனை யெந்தை நனிநோக்கி
யந்நங்கை நோற்றனண்முன் னாதலினீ—முன்னுமண
நாளை முடித்துமென நாங்களுய்ந்தோ மென்றுவந்தை
தாளை முடிபுனைந்தான் றாழ்ந்து. (௧௧)

ஒல்லைவாய் தற்புடைவந் தொற்றர் தமைநோக்க
வல்லையவர் யாரும் வணங்கியே—சொல்லருஞ்சீர்
மன்னா யசனே மருவடியேஞ் செய்வதென்கொ
லென்னா நவின்றா ரினிது. (௧௨)

மூவர்க்குண் முன்னோன் முயங்குகிரி சேரிமுற்
றேவர்க்குந் தாபதர்க்குந் தீமையிலா—வேவர்க்கும்
காளையென நின்றவெழிற் கந்தவே ளெந்தைமண
நாளையெனச் சொல்வீர் நயந்து. (௧௩)

மல்குபுகழ்ச் செவ்வேண் மணங்கூறி யேவருமே
செல்குலவு மிவ்வரையிற் சேர்தருவா—னல்கிடுமென்
றக்கணமெய் வேர்த்தறைய வவ்வொற்றர் நன்குதொழு
தக்கணமே போயினா ரங்கு. (௧௪)

போனபோ தொற்றர் புலன்மிக்க கம்மியற்கூய்
மானவேற் செவ்வேள் வதுவைதனக்—கானசெயன்
முற்ற வமைத்தி முறையே யிவணென்றான்
கொற்ற முறுவமரர் கோன். (௧௫)

புனைவனதுட் கொண்டு பொருப்பொருசார் பார்மேற்
கனக மணிகுயிற்றிக் காமர்—நனியுறவோர்
மண்டபங்கண் டோர்வாளி வான்றாக்கித் தார்நாற்றி
யொண்டவிசு வேட்கமைத்தா னொன்று. (௧௬)

வேதநவி னுதனயல் விண்டுமுத லண்டருக்கே
ராதனங்கள் கண்டுமென்ற லாங்களன்மா—டோதருவா
னண்ணிலா மன்சிகரி நன்கமைத்து மண்டபத்தோ
டெண்ணிலா மன்றமைத்தா னேய்ந்து. (௧௭)

சோலைமலர் வாவி சுனைகள் பலவகுத்தே
யேலுங் கடிக்குரிய யாவுநல்கச்—சால
வவைதெரிந்தே ரண்ணலுவந் தார்வதுவைக் கான
வெவையும் வரித்தா னினிது. (௧௮)

தேவர்கள் கோமான்றன் செய்கையிது நிற்கமுன்ன
மேவலர்க ளோடி யிசைத்திடலுங்—காவற்
பெருமான் முசுகுந்தன் பெட்டுமணங் காண
வருமா றுரைப்பாம் வகுத்து. (௧௯)

போற்று கயிலைப் பொழிலிடைமே னாட்பரனார்
கோற்றொடியு மாகமகிழ் கொண்டிருப்ப—யேற்றவில்வத்
தாரு முசுவுவொன்று சாரிருவர் மேற்றூர்த்த
தாருமன்பர் போலிலைகொய் தாங்கு. (௨௦)

ஆர்த்த தொருமாலைத் தோகைபொரு ளாகியே
சேர்த்திடலு மன்னுள் செயற்கைதனைப்—பார்த்துநகை
மிண்டுவழி பட்டினதை யென்னை வெருள்வதென்றான்
யாண்டுமறைக் கெட்டா விறை. (௨௧)

என்னலுமே நங்கை யிகன்மாச் சினந்தணந்து
நன்ன ரருள்புரிய நாயகனு—முன்னவனு
மொன்று முசுக்கலையி னுள்ளத் திருளகற்றி
நன்றுணர்வு தந்தா னயந்து. (௨௨)

மெய்யுணர்வு சேரமா மேனின் றிழிந்துமுசு
வையனுடன் றொழுதன்பி னுங்கிறைஞ்சி—யையக்
குழையுமுளை மில்லாக் கொடியே னிழைத்த
பிழைபொறுத்தி யென்றதுவே பின். (௨௩)

பிழையிதென வச்சமொடு பேசலெமை யீண்டே
விழுமியதோர் கூவிளையின் மென்பைங்—குழைதூய்
வழிபடுதல் செய்தாய் மனுக்குலத்திற் றோன்றி
முழுதுலகா ளென்றான் முதல். (உ௪)

அன்னமொழி தேர்ந்துகள்வ னுருமஞ ரெய்திவிம்மி
மன்னிறையைத் தாழ்ந்தும்மை வைகலும்பார்த்—துன்னமுவர்
இங்கனம்வாழ் கின்றதிகந் தெந்தாய்மண் போய்த்தளைப்பட்
டெங்ஙனநா னுய்வே னினி. (உ௫)

அன்னதுகேட் டைநின் னகநன் றவனிலைகிப்
பின்னிவணீ மீள்வாய் பிறகிளைய—லென்னமுசு
வையமுற்ற மாழாதிவ் வத்திரத்தோ டாரவருள்
செய்யெனவே வேண்டியது தேர்ந்து. (உ௬)

ஐயனரு ளவ்வரம்பெற் றங்கயிலை நின்றகன்று
செய்யமுசு வோர்கணத்திற் சிந்துலவு—வையத்
தருமாமெய் குன்றா வரிச்சந் திரனோர்
மருமானிற் றோன்றியதே வந்து. (உ௭)

மாமுகமொன் றேமுசுவா மற்றுளவோர் கூர்வடிவாய்
நாமமுசு குந்தனென நண்ணிமணிக்—கோமுடிதான்
றொன்முறையே சூடித் துலங்கிருமா ஞாலமெலா
மன்முறையே யாண்டான் மகிழ்ந்து. (உ௮)

சீர்க்கருவூர்த் தேமேவிச் செங்கோல் செலுத்தரசாய்ச்
சூர்க்குலைவுற் றோர்சார் துதைந்திருந்தான்—வேற்குமா
னன்னாற் றொலைத்தது கேட் டாரணர்போய்ச் சிறைமை
மன்னாட்சி வாய்ந்தமர்ந்தான் மற்று. (உ௯)

வாய்ந்தவெல்லை மன்னவன்முன் வாசவன்றன் றூதுவர்போ
யேய்ந்தகழல் வாழ்த்தியளி யேவலர்யாம்—வேந்தநீ
சுற்றமொடு வாழிவெய்ய சூர்த்தொலைத்து வேலன்சீ
ருற்றபரங் குன்றமர்ந்தா னுற்று. (௩0)

கொற்றவேற் காளைக்குக் கோன்மகவா னீன்பிடியை
யிற்றைபோய் நாளையினி தீகின்றான்—மற்றிதனைக்
கூறிடுவா னெம்மையுய்த்தான் கோவே பரங்குன்றஞ்
சேறியா லென்றறைந்தார் சேர்ந்து. (௩௧)

ஆண்டகைமெய் பூரித் தவர்த்தழீஇச் சோபனமா
மீண்டிதனுக் கீயுமா றேதுமில்லை—மாண்டநிதி
நீண்டகுடை நல்குகோ நேரரசு நல்குகோ
வேண்டுகின்ற தென்னென்றான் வேந்து. (௩உ)

கோதின் முசுகுந்தன் கொள்ளுவகை யுள்ளுணர்ந்தே
யோதுமொற்றர்க் கிவ்வெல்லா மொல்வதன்று—மீதலமாண்
மன்றலைவன் முன்சேறன் மற்றெவையும் பெற்றதொக்கு
மென்றறைந்து போயினா ரேய்ந்து. (௩௩)

ஏயவொற்றர் பூபால ரெண்டிசையோ ரேவருக்குஞ்
சேயிலைவேற் சேய்வதுவை செப்பியே—மீயுலவு
மாதித்த னாதியர்க்கு மாசி லறவோர்க்கு
மோதித் தகச்சென்றா ருற்று. (௩௪)

மன்னன் முசுகுந்தன் மாநகர வாணரொடு
தன்னனிகம் வேள்வதுவை தான்காண—முன்னடப்பாள்
வள்ளுவனைத் கூயிபமேல் வார்முரசஞ் சாற்றென்றா
னொள்ளறொறும் போய்ப்போய் நெடிது. (௩௫)

அன்னா னதுவினவி யாம்பன் மிசையிவர்ந்தே
பன்னா முரசறைந்து பார்வைமெய்யன்—முன்னாண்
மிகவாரூ ரத்தன் விழவு மொழியுந்
தகவார் தரமொழிந்தான் றான். (௩௬)

ஓங்குதிரை வாங்குதிரை வார்முரச மார்கலியார்ப்
போங்குமின்றேர் தூங்குகல மும்பறிண்மீன்—றாங்கு
படைமகரங் காலாள் படிவலைஞ ராகக்
கடனிகர்த்துச் சென்றவனி கம். (௩௭)

மன்னெயினர் மீதூர் வயவரத் தூவருவி
யுன்னுமத மாமுகின்மி னோடையாத்—துன்னிக்
குருமணியார் கோடு குலவக் கொடுமே
விருமலைபோற் சென்ற விபம். (௩௮)

மேலமர்வார் மேனோக்க மேவி முகந்திருப்பிச்
சாலநகை தந்தாடித் தார்மிடற்றி—லாலத்
தரத்தி னடந்து சதிகாட்டி யாடும்
பரத்தையர்போற் சென்ற பரி. (௩௯)

பொற்சிகரம் வானளவப் பூங்கொடிகள் பாங்குலவ
நற்சினையார் தாரு நடக்காலாச்—சிற்சி .
லலம்புமுகின் மின்றுகிலா வாரச் சிறைகொள்
சிலம்பெனவே சென்றமணித் தேர். (௪௦)

எதிர்ந்த மாக்களையச் சேய்விழியா னோக்க
விதிர்ந்து வாய்வெரீஇ வீழா—வதிர்ந்து
வீயவே செய்திறத்த வென்றிகொண் மா வாள்வயவர்
ஐயம்போற் சென்றார் செறிந்து. (௪௧)

பல்லியங்க ளார்ப்பப் பலமாப் படைமின்ன
வொல்லுந் துகிற்கொடிவா னுற்றசையச்—சொல்லருஞ்சீர்க்
கோன்முடிமேல் வேந்தர் குலமலர்ப்பூ மாரிபெய்யச்
சூன்முகில்போற் சென்றபடை சூழ்ந்து. (சஉ)

தாள்கொண்ட நீள்கழலார் சாயகம்பெய் தூணியார்
தோள்கொண்ட வில்லார் தொடைமுடியார்—வாள்கொண்ட
கண்ணார் மருங்கு கவின்மதன்போ லேகினார்
திண்ணார்வல் வீரர் சிலர். (சங)

கண்ணா லெவர்க்குமே காமம் விளைவித்துப்
பண்ணார் மொழியாற் பரவசஞ்செய்—விண்ணாருந்
தாரிற் பொலிகுழலார் தாரகைவான் சேறல்போற்
பாரிற் படர்ந்தார் பலர். (சச)

தேரிற் சிலர்சென்றார் திண்வயவர் சிந்துரத்திற்
சீரிற் சிலர்சென்றார் சேணுலவு—காரிற்
கவிகை புடைநிழற்றக் காமர் மடவார்
சிவிகையிலே சென்றார் சிலர். (சரு)

பிளிறுதெய்வ யானை பெருமணங்காண் பெட்பிற்
குளிறுவய வீரர்மேல் கொண்டேர்—களிறுந்
துடியுமிடைக் கொவ்வாத தோகையர்க ளேறும்
பிடியுங் களிகொண்ட பேர்ந்து. (சசா)

மாதனம்பற் கொவ்வாண் மருமமுற வோர்காளை
மாதனம்பெற் றாரின் மகிழ்வுற்றான்—போத
வெறுமையுற்றார் மெல்லிடையாள் வென்னுறவோர் தோன்றல்
வறுமையுற்றார் போற்றுயர்ந்தான் வாய்ந்து. (சஎ)

பன்னற் கரும்பைப் பருமவல்குன் மாதொருத்தி
பொன்னற் கிழியார் பொருளுறல்போன்—மின்னிக்
கனங்கொண்டு விம்முதனங் காணவொரு காளை
சினங்கொண்டு சென்றா டிகைத்து. (சஅ)

தாமமணி மார்புடைய சம்பரனுக் கோர்பகையாங்
காமனுமன் றற்குகந்த காதலியு—மாமெனவே
மங்கையர்தம் மோடினிய மாற்றம் பகர்ந்தவர்கை
செங்கையுறச் சென்றார் சிலர். (சகூ)

கையிலார் கைபெற்றுங் காலிலார் கால்பெற்று
மெய்யிலார் மெய்பெற்று மேவுமை—செய்யவுரை
பெற்றும் விழியிலர்கண் பெற்றுஞ்சென் றார்குகன்றா
ளுற்றவன்பர்க் கென்னகுறை யுண்டு. (ருo)

ஒருத்தலது புல்லப்போ மோர்பிடியின் மேவுந்
திருத்தகையா ளேங்கிச் செலக்கண்—டொருத்தன்
மருங்கி லரியுடையீர் வாரணத்துக் கஞ்சி
யிருங்கவலேன் கொண்டிரென்றா னீங்கு. (ருக)

யானை நுதலி லிவர்சிந்துரமந்தி
யேனைமக்கள் பூண்படைக ளேய்பகலும்—வானையண்ணா
மங்கவிகை கேதனங்க ளாரிரவுங் காட்டவே
பொங்கனிகம் போன புரிந்து. (ருஉ)

கொக்கரை பேரி குடமுழாக் கொம்புசின்னந்
தக்கை தடாரிகுழல் சல்லரிமுன்—றொக்க
பலவியங்க டாங்கிப் பலரியம்பிச் சென்றார்
சுலவுகட லார்ப்பெனவே சூழ்ந்து. (ருங)

இன்னசன மீண்டியே யெங்குமா யேகுமெல்லைத்
தன்னினத்தார் தந்திரத்தார் தார்வேந்தர்—பின்னுமுளார்
முன்பினுறத் தேர்மேன் முசுகுந்தன் போதலுற்றா
னன்பின் மணங்காண்பா னாங்கு. (ருச)

கானும் வரையுங் கடந்து நதிதணந்து
தேனுலவு தார்மார்பன் சேனையொடு—வானுலக
ரன்பரங்குன் றாள்பணியு மார்ப்புமிக வேற்படைவேண்
மன்பரங்குன் றெய்தினான் வந்து. (ருரு)

முசுமுகந்த வேந்தன் முனம்வந் துழிமா
வசுமதியாண் மன்னரெலாம் வந்து—மிசையண்
பரங்குன்ற மன்னிப் பரித்தலா னாமம்
பரங்குன்ற மாகியதிப் பார். (ருசா)

கருமைநிற மெய்திக் கடனீர் பொழிந்தே
புருமுகவே யார்க்கு மொலிகொண்—டொருமையுற்று
மெண்கோடு வெற்பி லிவர்மஞ் சிபமென்று
வெண்கோடு காட்டுமே வேறு. (ருஎ)

பொருப்புருவம் வீழருவி பொங்குமத வாரி
கருப்பன் மணியார் குவடு—மருப்பகல்வான்
றோயுந் துளைவேய் துதிக்கையாத் தூங்கவரை
யேயு மிபமா மினிது. (ருஅ)

கோடுறுபூங் கோடு குனித்துங் குழைபிடிக்குக்
கோடுறுமா வேழங் கொடுத்துமுனி—லூடு
துருத்தியறல் சொள்ளுமா தூயநீர் கொண்டே
யுருத்தி யருத்தியுறு மாங்கு. (ருகூ)

சிலம்பிலுயர் வேய்தொடுத்த தேத்தடையைக் கையால்
வலம்படுமோ பற்றுவதோர் மாண்பு—பொலம்படுநீள்
கோவிற் பொலிமதியைக் கோளுழுதின் வாளரவு
மேவிப் பிடிப்பதொக்கு மேல். (௬௦)

வெற்பாரும் வெம்முலையை விற்றுடனே மீட்கவல்ல
பொற்பாரு மாதருள்போற் போந்தசில—கற்பாரு
நண்பாக மேவுமின்னூர் நன்மனம்போ னின்றசில
வண்பாக ருய்க்குமத மா. (௬௧)

அந்தரமே வண்டாரங்கா ளாழியின்மத் தாகிறுத்து
மந்தரமே போன்றொளிரு மாநவிர—நந்தரவ
வந்திரைகள் சால வவிர்வரையைச் சூழ்வதொக்கு
பந்தியின்வந் துற்ற பரி. (௬௨)

மானவேற் சாமி மணங்கா ணியவந்த
மானவர்பூ பாலர் வயங்குமணி—மானமொடு
நோரநந்த கோடி நிலத்தோர் நிரைத்தாங்குத்
தோரநந்த கோடிநின்ற சேர்ந்து. (௬௩)

ஆடமைத்தோ ணல்லாரு மாடவரு மேனையரு
மாடகூ டத்தா வணம்புகுந்தார்—கோடுமிசை
போயிலங்க வீழதலம் புக்கவிராற் பூங்காவுட்
கோயிலமை தந்த திறைக்கு. (௬௪)

மாசிலையார் மைந்தருமோர் மாதருமாங் காங்காடி
மாசிலையாம் வேட்டுருப்பம் வாங்கவே—பாசிலையி
லேந்துறையின் முத்த மௌமன் மலர்த்தடத்தின்
பூந்துறையிற் புக்கார் புரிந்து. (௬௫)

செந்தா மரைத்தடத்திற் சேயிழையோர் மாதெழில்கூர்
கந்தா மணிப்புயத்துக் காளைமுன—நந்தாநீர்
மூழ்கியெழ வன்னான் முகமுண் டகமென்னு
மாழ்கியயல் பார்ப்பான் வறிது. (௬௬)

பங்கயமன் வாவியிலோர் பாவையுறப் பாய்வாரா
லங்கயன்மீ னுமையுறப் பார்ந்தலைப்ப—பொங்கு
கடுத்தடங்கண் மான்மெலிவு கண்டவளை யோர்வே
ளடுத்தணைப்பான் றேண்மே லினிது. (௬௭)

நீரின் முழுகொருமி னீவியிழந் தங்கழலாற்
றேரின் பகைமறைத்துச் செங்கைமலர்—காரிற்
றகையைம்பால் சேர்த்துநண்பன் சக்குறப்பொற் கஞ்ச
முகையிரண்டு காட்டினான் முன். (௬௮)

செங்கமலம் பைங்குவளை சேதாம்பல் சைவலமே
ரங்கனையா ராட வலைதோற்ற—மங்கையர்த
மாமுகங்கண் வாயைம்பான் மாமைநேர் கண்டினைந்து
தாமலைதன் மானுந் தடத்து. (௬௯)

ஆயிழையில் வாவிதனக் காயிரங்கண் பாரெனத்தன்
னேயனெய்தல் காட்டமின்னு நேர்வதனம்—வாயனந்தங்
காணுற் றெனக்கமலங் கைரவமே காட்டவன்றா
னாணுற் றயர்வா னலிந்து. (௭0)

கோதை யொருத்திமலர் கொய்யவதேய் தாயைதெர்ந்
தாதரவிற் றன்வரன்கொய் தக்குதவக்—காதலிகண்
டீடினாள் சோர்வுற் றுலையவவ னின்றெடுப்பக்
கூடினா ளன்புநனி கொண்டு. (௭௧)

கொங்கமருங் கூந்தற் கொடியேநின் கொங்கைக்கிவ்
வங்கமல மொட்டுநிக ராமென்றே—யிங்கிதமாச்
சேயொருத்தன் கூறச் சினந்து முகங்கோட்டிப்
போயொருத்தி நின்றாள் புலர்ந்து. (௭௨)

ஏந்த லொருவ னிணைக்கரத்தி னீர்முகந்து
காந்தைமிசை வீசவந்தக் காரிகைதன்—சேந்த
குமுதவாய் தன்னிலறல் கொண்டவன்மேற் பெய்தா
ளமுத முகுப்பதுபோ லாங்கு. (௭௩)

பூவை யொருத்திபுனை பூந்தானை தானனைந்து
மேவுமெய்யி லொன்றி விளங்கவங்க—நீவி
தணந்தனையோ மாதென்னத் தான்றழீஇத் தேர்ந்து
மணந்தவன்வெட் குற்றான் வறிது. (௭௪)

வீக்கயநீ ராடி வியன்கரையின் மேவிமரைப்
பூக்கரத்தி லேந்திவரும் பூவையரை—நோக்குங்கான்
மாக்கடலி னின்று மலர்கரத்தி லேந்திவருந்
தாக்கணங்கே யென்னத் தகும். (௭௫)

புதுமணிநீ ராடிப் பொருமலர்கை யேந்தி
மதனு மிரதியுமே மான—வதிக
வுருமஞ்சார் மைந்தரோ டொண்டொடியார் போயோர்
துருமஞ்சார் தந்தார் துதைந்து. (௭௬)

குயிலின் மொழிதந்து கொம்பினங்கை நீட்டி
வெயிலனுகாப் பொங்கர் விழைவுற்—றயிலென்
மழைக்கண் மகளிரையு மைந்தரையும் வாவென்
றழைக்கின்ற தொக்குமே யாங்கு. (௭௭)

நாயகற்கு மெட்டாத நற்கேழ் மலர்பறிப்பான்
றூயவன்றன் றிண்புயத்திற் றுனிவர்ந்து—மீயமர்வான்
மேவீர மாலைபுனை வீரரெழிற் றோளிலமர்
மாவீர மாங்கர்வாண் மற்று. (எஅ)

கோங்குமுகை கொய்தணங்குன் கொங்கையொக்கு மிஃதென்று
வீங்குபுயத் தோர்காளை வெம்முலையின்—பாங்குவைக்க
வன்னான் பயோதரமுன் றூர்ந்து நடாதகையா
மின்னு ளெனநின்றாள் வேட்டு. (எகூ)

முல்லைமுகை கொய்தொருவன் மொய்குழலி துன்னெழில்கூர்
பல்லை நிகர்க்குமீ பாரெனலு—மொல்லையது
நேராதென் றேகாம னேரு மெனல்குறித்தே
சோரா விருந்தா டெடுத்து. (அ0)

வாழ்த்து நுமோர் மின்றன் வரனையிந்தப் பூங்கொம்பைத்
தாழ்த்தென்னத் தன்னமவன் றாழ்த்தமையாற்—காழ்த்தனித்தாள்
பற்றிமரத் தேறவந்தப் பாதவந்து ராதிமல
ருற்றிடலு முற்றா ளுவப்பு. (அக)

இன்னவணங் காவிலன்று சேர்ந்தாடிப் பாடிபுக
வன்னவண மாட வவாவியரி—வன்னவண
வாழியாம் வான்பொழில்போ யார்தந்தான் றோர்தனின்மா
வேழியாத் திட்டோ வினிது. (அஉ)

மாவரைசேர் திண்புயத்து மைந்தரையு மாதரையு
மேவரிய வின்பம் விளைவிப்பான்—றூவருண
மன்னவே செய்வலென வான்கலைமெய் போர்த்தாருது
தென்னவே தோன்றினன் விண் ணிந்து. (அ௩)

வேற்கண் மடந்தையரும் வேளனைய காளையரு
மார்க்க நறவ மருந்தலுற்றார்—பாற்கடலிற்
றுன்னரிய வின்னமிர்தந் துய்க்குமிடை யெய்க்குமின்னார்
மன்னமா றென்ன மகிழ்ந்து. (அச)

செங்கனக வெள்ளத்திற் றேறனுக ரோர்மகடூஉ
வங்கணிலா விம்ப மதிற்றோற்றத்—திங்களுமே
யென்னோ டருந்துகின்ற னஃதென்கொ லென்றவடன்
மன்னோடு சொல்வாண் மகிழ்ந்து. (அரு)

கிண்ணுகரோர் நங்கையெழிற் கச்சுநெகிழ் தந்துவெளி
வண்ணமுலை தோன்றவான் மாதுகைப்பொற்—கிண்ணமதை
வாங்குபுமா மங்கைநிறம் வைத்திதனை யொத்ததுநின்
வீங்குதன மென்பான் வியந்து. (அசு)

மாதொருத்தி யுண்கண் மயக்கினின் முன் னூடுவான்
கோதில் பெயர்நவின்று கூப்பிடலுங்—காதலுட
னன்னான் வரவே யணைந்திணைப்பொற் றேரூடீஇ
மன்னா விருந்தான் மகிழ்வு. (அஎ)

இன்னபரி செய்த வெழில்கொள் பரிசனங்கள்
முன்னுமுசு குந்தன் முதலரையர்—தன்னிகரில்
கொன்னெடுவேற் றானைக் குமரவேள் வீற்றிருக்கும்
பொன்னெடுவெற் பேறினார் போய். (அஅ)

வெற்பிற் புனைவோன் விதித்த திருநகரின்
பொற்பின் வளங்கண்டு பூபால—ரற்பின்
மகவான் கழல்பணிய மன்னருளி னோக்கித்
தகவான் மொழிந்தான் றனித்து. (அகூ)

ஓந்தென் றிமையோர்க ளெண்டிசையோர் பாதலத்தோ
ரந்தவர்க ளாரு மசலமெய்தி—யிந்திரனைக்
கண்டார் தொழுதார் களித்தாசி மாமொழிவாய்
விண்டா ரமர்ந்தார் விழைந்து. (கூ0)

வரைவிண்ணீ ராசைதவ மாவுரக நாம
முறைமடவார் சுந்தரிபாங் குற்றா—ரமகளீர்
மஞ்சரிமா காதலிதாள் வந்தனைசெய் தந்தெய்வக்
குஞ்சரிமாட் டெய்தினர்நார் கூர்ந்து. (கூக)

தெய்வப் பிடிகேணீ செவ்வேண் மனைவியா
யெய்தியுல கிற்கிறைவி யாமெனத்தாழ்ந்—தைதினல
மன்னாட் கியல்பினுற்று மாற்றுமெழில் செய்யமின்னா
ருன்னாத் துணிந்தா ருகந்து. (கூஉ)

காசறையார் கூந்தலிலே கானாவி நெய்பூசி
யாசி னறுஞ்சாந் தணிந்துபனி—வாசநீர்
கொண்டாட்டிப் பூந்துகிலாற் கூர்குழலை யொற்றினர்சொற்
கண்டாட்டி மார்கள் களித்து. (கூ௩)

மஞ்சினமா தேவி மலர்க்குழலின் றன்மைபெறச்
செஞ்சுடரி னின்றுதவஞ் செய்தெழுந்தே—யஞ்சனமா
காரா ரளகஞ்செல் காட்சிபோற் காரகிலின்
சீரார் புகையுய்த்தார் தேர்ந்து. (கூச)

மன்பொனுத்தி மஞ்ஞை மகரம் வலம்புரியா
மின்பணியின் கூழையின்கண் மின்னவணிந்—தன்பினறுங்
கொங்குவெட்சிப் பூச்செரீஇக் கோதைதொடை சூட்டிவெழி
றோங்கு குழன்முடித்தார் சார்ந்து. (கூரு)

கறுப்போர் மதிதோய் கடுவொருங்கு சேர்ந்து
மறுப்போ னடுவமர்தன் மானு—முறுப்போர்
கணித்திலக மாதின் கவினுதலிற் சாந்து
மணித்திலக மிட்டொளிரு மாண்பு. (௯௬)

மங்குன் மறைந்து மதிகவர்வான் வாளரவு
துங்க மணிப்படந்தான் றூக்கியே—யங்கமுற
வெட்டியணி நோக்க வியையுநல்லார் மின்னுதலிற்
சுட்டியணி தோற்றந் துதைந்து. (௯௭)

செந்துவர்க்கா யொண்குலையுந் தேமலர்ப்பூம் பாளையும்பைங்
கந்தியொன்று பூத்துக் கவின்மதிமேல்—வந்தமர்த
னேர வெழின்முகத்தா ணோர்களத்தி லார்பவள
வார வடம்புனைந்தா ராங்கு. (௯௮)

இடையிலையோ வுண்டோ வெனவையங் கொள்ள
வுடைபுனைந்தீர் வெற்பூ றுறுமே—தடையின்
மணியொட்டி யாண மருங்கணிந்தா ரல்குற்
பணியொட்டிச் சூழ்ந்தமைபோற் பாங்கு. (௯௯)

இந்தனமா வானனத்தாட் கோணிகள் பூட்டிவிரைச்
சந்தனமாக் கொங்கை தனிற்றிமிர்ந்து—சுந்தரமுத்
தார மிலைந்ததன்மே லாடைபுனைந் தார்மலர்த்தார்
போர மிலைந்தார் புரிந்து. (௧௦௦)

ஆடகமு மாமணியு மார்ந்தவத்தார் கிண்கிணியும்
பாடகமும் செய்ய பரிபுரமுஞ்—சூடகக்கைச்
சீதத் தணிந்தார் திருமுகத்தார் தெய்வவும்பல்
பாதத் தணிந்தார் பரிந்து. (௧௦௧)

சார்ந்தயனை நோக்கிமால் சாலமுற்றிற் றும்பரெலாஞ்
சேர்ந்தனர்வேற் சேய்க்குமணஞ் செய்காலை—தேர்ந்திடெனத்
தெவ்வெல்லை வேட்குச் சிறந்ததிம்மு கூர்த்தமே
யிவ்வெல்லை யென்று ளினிது. (௧௦௨)

இப்பகலே யேற்றதென்று லிப்போதே யான்பெற்றி
வொப்பி லணங்கை யுகந்தளிப்பான்—செப்பருஞ்சீர்ச்
சேந்தன் றனைக்கொணரச் செல்வதே நன்றென்ன
வேந்தன் புகன்றான் விழைந்து. (௧௦௩)

மாலயனு நன்றென்று மன்னோ டெழுந்தெவருஞ்
சாலமுனஞ் செல்லத் தனியடைந்து—வேலவன்பொற்
செய்யபதந் தாழ்ந்து திருவை மணம்புரிய
வையவர வேண்டுமென்று ராங்கு. (௧௦௪)

இவ்வா சகம்வினவி யீராறு தோளுடையா
னவ்வாறே யாகென் றருள்புரிந்து—வெவ்வாட
லேற்றனையி னின்றெழுந்தே யேர்மயின்மே லேறியும்பர்
போற்றவெள்ளல் போந்தான் புரிந்து. (க0ரு)

குடைகவரி யாலவட்டங் கொற்றவொற்றைக் கூர்வாட்
படையெடுத்தா ரிந்திரன்கால் பாய்நீ—ருடைமண
ளுழியன்வே தாவூர்தி யஞ்சப் பதாகையாங்
கோழிமிக வார்த்ததுவே கூர்ந்து. (க0சு)

வேதர் நனியார்த்தார் விண்ணோர் மிகவார்த்தார்
பூத ருறவார்த்தார் பொங்கரிபோ—றுதமுறத்
திண்டி முரசு திமிலைமுதற் பல்லியங்கைக்
கொண்டியம்பி னார்கணவர் கூர்ந்து. (க0எ)

மேனகையே யாதி விளம்பிடுநான் மங்கையரு
மானவிசை பாடிநட மாடினார்—மாநயங்கொள்
வீணை கரம்பற்றி விஞ்சையரான் றார்க்கிசையப்
பாணையுறப் பாடினார் பார்த்து. (க0அ)

திண்வீரர் பூதரொடு தேவருமற் றேவருமே
யெண்வீ தியினெருக்க மெய்ந்துவர—மண்வீற
மன்ன னுளுற்று மணத்தினெடுஞ் சாலையின்மு
னுன்னருவே ளுற்றா னுகந்து. (க0கூ)

மேயகுகன் மேற்கும்ப மேற்றருப்பை தோய்த்தநீர்
தூயறவோ ராசி சொலித்துதித்தா—ராயவட்ட
மங்கலங்க ளேந்தியும்பர் மங்கையர்கள் போற்றினு
ரெங்க ளிறைவற் கெதிர். (கக0)

பஞ்சிநறு நெய்பளிதம் பன்னுவி மன்சுடர்மின்
விஞ்சமணித் தட்டேந்தி மேவநல்லார்—மஞ்சுமறை
ஞாயிறொளி விட்டிறல்போ னன்றுமயி னின்றிழிந்து
கோயிலின்முன் போயினனெங் கோன். (ககக)

ஆயபோ தாயமோ டைராணி போய்த்தொழுது
தூயநறும் பால்கொண்டு செங்கதிர்வேற்—சேயடியிற்
றொன்முறையி னூட்டிமலர் தூய்ச்செய் வனசெய்து
தன்மனத் திரஞ்சென்று டான். (ககஉ)

அன்னாள் பணிவுக் கனக னருள்புரிந்து
பொன்னார் மணச்சாலை புக்கயன்மான்—முன்னோர் சுரா
பாக்குறவே போந்துமண்ட பத்துமணிப் பீடத்தே
ரோங்குறவே வீற்றிருந்தா னுற்று. (ககந)

சீதான்முற் றேவர்கள் சேயே வலின்மைகக்
கோதி லிறைமைமுசு குந்தனே—யாதியன்னர்
வந்துவந்து தாழ்ந்து வழுத்த வவர்க்கெல்லாங்
கந்தனருள் செய்தான் களித்து. (௧௧௪)

ஆனபோ தங்கணத்தோ டம்மையப்ப னந்தரத்தின்
மானமேற் றோன்ற மகிழ்கொண்டு—ஞானவேள்
விம்மிதமுற் றேயெழுந்தான் விண்டுமுதற் றேவரொல்லை
யிம்மென் றெழுந்தா ரினிது. (௧௧௫)

நித்தனுயர் மானத்தி னின்றிழிந்து தானையுடன்
சுத்தமணிச் சாலைபுக்கான் றோகையொடு—மத்த
னெதிர்கொண் டிருவ ரிணைத்தா ளிறைஞ்சி
முதிரன்பி னின்றான் முனம். (௧௧௬)

கந்தன் றனையனையார் கையினெடுத் துச்சிமோந்
தந்தமுறப் புல்லினா ரார்வமொடு—நந்தரிமன்
வேதன் மகவான் விபுதரெலா மீன்றவர்பொற்
யாதம் பணிந்தார் பரிந்து. (௧௧௭)

அன்னர் துதித்தா ரடியேமுய் தந்தனமென்
றுன்னருமா தேவை யுமையுடனே—பொன்னிற்
புனைபுதுமன் றன்மனையிற் பொற்பிற் கொடுசேர்
வினைகழல்வேள் சார்ந்தான் மகிழ்ந்து. (௧௧௮)

சார்ந்தபோ தாணைமுறை தன்னால்விண் ணின்றுவந்தே
யார்ந்த மணித்தவிசொன் றண்ணவதிற்—கூர்ந்தகற்பிற்
றன்னமர்வா ளோடமர்ந்து சம்பு மகற்றழீஇ
நன்னருள் செய்தார் நயந்து. (௧௧௯)

முன்னயன்றாழ்ந் தோர்குகனை முன்னவுணர் மாயவுய்த்தா
யன்ன பரிசே யவர்த்தடிந்து—நென்னலும்பர்
மல்கு சிறைவிடுத்தான் மன்மகிழ்ந்து தன்மகளை
நல்கவவர்க் கெண்ணினா னன்கு. (௧௨௦)

பொற்றொடியு நீயும் புரிந்திங்கண் வந்தமையாற்
சிற்றடியேஞ் செய்கை சிறந்ததெனை—வுற்றனக
ணேவனமா தோடு மிதுகாண்பான் யாம்வந்தோ
மாவனசெய் கென்றா னதற்கு. (௧௨௧)

அத்தனிவை கூற வகமகிழ்ந்து மாலயனுஞ்
சித்தமக வாற்பாராச் சேய்மணப்ப—வுத்தமநின்
கோதைதனை யன்பிற் கொணர்தியெனப் போயருள்கூர்
மாதைவரு கென்றழைத்தான் மன். (௧௨௨)

மகவான் விளிப்ப மகிழ்வொடுபைப் பையத்
தகவா னடிபெயர்த்துச் சார்தந்—துகவான்மின்
பொன்குண் டிகையாண்முற் பூவைமா ரேத்தெடுப்ப
முன்குஞ்சரி வந்தாண் முன். (௧௨௩)

அன்னநடை யானையரி யாற்றுமணைச் சாலையுய்ப்ப
மன்னமரர் மாமுனிவர் வாழியென்றே—பொன்னடியாம்
போதுகந்து போற்றவுமை புங்கவற்றா ழாவானை
மாதுகண்டு வெள்கினாண் மற்று. (௧௨௪)

நுண்ணிடையா டாழவர னோக்கியருள் செய்திடலு
மண்ணல் புறநீவி யத்தனையும்—பெண்ணரசி
யைத்தா ரணங்கையும்பொன் னாதனத்தின் மீதிருத்தி
வைத்தாள் வரைபயந்த மாது. (௧௨௫)

மன்னிருவர் விம்பமே மான வரன்வதுவு
மின்னுமணிப் பீடிகைமேல் வீற்றிருப்பத்—துன்னிமையோ
ரேவருந்தாழ்ந் தேத்தினா ரின்றோ ரருள்புரிந்தார்
மேவருமின் பெய்தினான் வேந்து. (௧௨௬)

வேந்துரையாற் றேவி விரைமஞ் சனமாதி
யேந்திவந்தே யாங்குவைப்ப வேர்மகவான்—சேந்தன்மு
னுற்றா ரணங்குபுன லுய்ப்பமுறை யேயனக
னற்றாள் விளக்கினா னன்கு. (௧௨௭)

மல்கு விதிமுறையின் மன்பூ சனைமுற்றி
வெல்குமர னோர்கரத்தின் மேவணங்கை—நல்கி
யடியணிவ னேர்ந்தனனென் றார்வமொடு கன்னற்
கடியறனீ ருய்த்தான் களித்து. (௧௨௮)

அங்கலரோ னாற்றியுளத் தங்கைதர வாண்டகைகொண்
மங்கலநா ணார்த்து மணிக்களத்தி—னங்கைமுடிக்
கார மணிந்தா னருங்கனிதேன் பால்குகனைக்
கூடா நுகர்வித்தனன்விண் கோ. (௧௨௯)

ஆர்த்தனபற் பல்லியங்க ளாரக் கணநாதர்
தீர்த்தன் றனைத்துதித்தார் செங்கமலன்—கார்த்தநிற
வண்டுளவோன் வேந்திமையோர் மன்னிருவர் தங்கோலங்
கண்டு சிறந்தவென்றார் கண். (௧௩௦)

ஆயபோ தம்புயத்தோ னார்கனறந் தொண்கலப்பை
மேயமண வேள்விமுற்று வித்தனன்பி—னேய
வலைவிலா வொண்ணுதலோ டோங்கனல்சூழ் வுற்றுச்
சிலையிலன்ன டாடந்தான் றேர்ந்து. (௧௩௧)

மாலினிமா சாளிமா வாணிபர விச்சூழச்
சாலினியு மங்கலையுந் தான்கண்டான்—வாலிதினன்
மன்ற லியற்றியபின் மாதொடுவே ளம்மையப்ப
னன்றலர்பூந் தாள்பணிந்தா னங்கு. (கஙஉ)

பணிமக் களையிருவர் பாங்க ரிருத்தி
யெணியெந் தலைமைதந்தோ மென்ன—மணிவண்ண
னாதி யமர ரருந்தவத்தோ ராரணங்கின்
கோதில் குலந்தாழ்ந்தார் கூர்ந்து. (கஙங)

கந்தனையுங் கன்னியையுங் கண்டு கவினவையார்
வந்தனைமுன் செய்திடலு மன்னருள்செய்—தந்தமிலா
னாரி யொடுமறைந்தா னண்ணெவரும் விம்மிதரா
யாரின் றுதிநவின்றா ரார்த்து. (கஙச)

இருவ ரிருந்த விருந்தவிசி னும்பர்
மருவு குமரன் வனிதை—திருவுருவங்
கண்டார் களித்தார் கமலத்தா ளேத்தினார்
விண்டார் விழும வினை. (கஙரு)

சீயவணை நின்றிழிந்து தேவர் தொழுதுவர
வாயதிரு மங்கலமா வார்ப்பொடுபோய்க்—கோயி
லிடைதந் தனையவளோ டேய்தந் தெவர்க்கும்
விடைதந் தருள்புரிந்தான் வேள். (கஙசா)

இன்னபரி செய்த வெமையீன் றெடுத்தருள்செ
யன்னையுட னத்த னணியறையு—டுன்னிமணி
மின்னுறுபொன் மஞ்சவணை மேன்முயங்கி வைகினான்
மன்னுயிர்க ளுய்ய மகிழ்ந்து. (கஙஎ)

மங்கலநாண் பூட்டி வரப்பாகன் கூடமுந்தி
யங்குசங்கைக் கொண்டளவி லார்வமுற்றுத்—துங்கமுறு
தெய்வதநல் வேழஞ் சிறநகைசெய் துட்கொடுநாண்
பெய்வதனங் கோட்டிற்று பின். (கஙஅ)

மைந்தனுநன் மாது மணந்தாங் கிருந்தவெல்லை
நந்தமரர் தந்தமனை நண்ணினா—ரிந்திரன்முன்
வந்தமுசு குந்தன்முன் மன்னவர்க்கொள் ளாடைகலன்
றந்துவிடை தந்தான் றக. (கஙகூ)

முசுகுந்த னாதி முறையரையர் தத்தம்
வசிநகரம் போதலுமே மாமைச்—சசியினொடு
வன்புற் றிருந்தானை வந்தனைசெய் மன்சிலநா
ளின்புற் றிருந்தா னினிது. (கச0)

தெய்வயானையம்மைதிருமணப்படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா. கருஅ.

# விண்குடி யேற்றுபடலம்.

---

ஆனசில வைகல்சென் றத்த னணங்கினொடும்
வானுறையு ணீங்கிமக வான்களிப்பத்—தானமா
மீதிவர்ந்து முன்கடைவாய் மேவவய வோர்பூத
ராதியர்தாழ்ந் தார்த்தா ரடுத்து. (௧)

அனிகவொலி கேட்டயன்மா லண்டரொல்லை யிற்போந்
தினியகுகன் போந்தனனென் றேத்தி—னனிதொழுதார்
மற்றேந் தலைநோக்கி மன்பரியூர்ந் தேகினனே வ
ணற்றோர் கொடுசென்றா னன்கு. (௨)

ஆசுகனூர் தேர்மே லணங்கினொடு குன்றெறிந்தோ
னீசனுடன் சத்தியெனை யெய்தினான்—மாசார்கள்
பூமழைபெய் தார்வீரர் பூதரற வோர்பணிசெய்
தாமருகிற் சூழ்ந்தா ரடுத்து (௩)

அண்டர் வணங்க வவரவர்தஞ் சேகரத்தின்
முண்டகத்தாள் சூட்டி முருகவேள்—விண்டயன்மு
னெல்லும்பர்க் கண்ணூறீஇ யும்பரியூர்ந் தெம்மொடுநீர்
செல்லுமின்விண் ணென்றான் றிகழ்ந்து. (௪)

கஞ்ச னனத்திற் கரியமால் புள்ளரசின்
மஞ்சமர்மெய் வானவர்கோன் வாரணத்தில்—விஞ்சமரர்
மற்றுநின்றோர் தத்த மருவூர் தியிலிவர்ந்து
சுற்றியுடன் சென்றார் துதித்து. (௫)

புங்கவர்கள் போற்றவுயர் பூதர் புடைசூழப்
பொங்கியங்க ளார்ப்பப் பொருவயில்வே—லங்குயரன்
சந்திரனூர் குன்றூர் தனிலிருந்து மாதுலனு
மிந்திரனூர் மேவினா னேய்ந்து. (௬)

பொன்னகர்முன் சூர்மகனாற் பொன்றினமை யோடிறைவன்
றன்னகங்கொள் வேட்கையுமே சண்முகன்கண்—டின்னருஞ்சி
ரெய்திமையோர் தச்சனைப்பார்த் தென்னகரத் தொன்னகர்போற்
செய்தியெனத் தாழ்ந்துசென்றான் றேர்ந்து (௭)

நூறேர் புனைவ னொடிப்பின் மதில்சிகரி
வீறேர் மறுகு வியன்கோவி—லாறேயுஞ்
செய்வரையார் பொய்கையிடஞ் சீர்மண் டபம்பாழி
செய்வனவை யாதிகண்டான் றேர்ந்து. (௮)

இந்திரற்குக் கோயில்செய்க் கேய்கோட்ட மாலயற்கு
மந்திரங்கண் மற்றவர்க்கு வாழிருக்கை—சுந்தரமா
வன்ஞேர் நகரி னதிக வனப்புளதா
யுன்ஞெ வுதவினஞா லோர்ந்து. (௯)

அன்ன வனப்பனைத்து மார்க்குஞ் சொலவரிதா
மன்னனது காணு மனங்களிப்புற்—றுன்னும்
புனைவன் றனைத்தழீஇப் புல்லினனன் ஞன்வேள்
வினைகழற்று டாழ்ந்தான் மகிழ்ந்து. (௧௦)

வேந்த னிருக்கைசசி மேவவய ஞதியும்பர்
தாந்தமதொள் ளூர்தி தணந்துவரக்—காந்தளங்கை
மன்மன்ற னங்கையொடு மாமணித்தேர் நின்றெரீஇ
மின்மன்ற மேயினன்செவ் வேள். (௧௧

மன்றத் தரியணையில் வைகிக் குமரவேள்
குன்றத் திறகரிந்த கோமாற்கு—மின்றத்து
பொன்மவுலி யின்னே புனைதிரென்றான் மாலயன்முற்
பன்மலர்த்தார்ப் பண்ணவரைப் பார்த்து. (௧௨

என்றிளவல் கூற விமையோ ரிமைப்பிலதற்
சொன்றுபொருள் யாவுமொருங் குய்த்துநல—மன்றனீர்
மன்மகவாற் காட்டி வினைங்தேற் றணையேற்றி
நன்மவுலி சூட்டினர் நன்கு. (௧௩)

தனிவான் முடிபுனைந்த தார்வேந்தன் றுளிற்
கனிவாற் பணிந்தார் ககன—மணிவாழ்வா
ராசிசொன்ஞர் மாமுனிவ ராரம்பை மார்நடித்தார்
பேசினிசை செய்தார் பிறர். (௧௪)

இந்திரனக் காலே யெழிற்குமரன் முன்னேகி
வந்தனைசெய் தேத்திவள மன்றுறக்க—முந்துளமா
மன்னரசுஞ் சீரு மகிழ வளித்தியெந்தா
யுன்னிதன்மே லுண்டோவே றென்று. (௧௫)

என்றலுமே யின்னருள்செய் திந்நகர்போற் றென்றரசை
நன்றிங் கிருத்தியென நன்குவைத்து—நின்றுள்ளா
தன்றுணையன் பார்சுரரைச் சூழிருக்கைக் கேவியையன்
றன்றுணையோ டேற்றான் றளி. (௧௬)

அறைகணவர் வீர ரணிவாயில் போற்ற
வுறையு ளிருக்கைநண்ணி யும்பர்க்—கிறைமகளோ
டென்னரும்பல் வேறுட லோகையொடு செய்திருந்தா
னென்னரும்பன் சேந்த னினிது. (௧௭)

அயன்முதலோர் தத்த மகமமர்ந்தார் வேந்தன்
றயரில் சசியொடின்பந் துய்த்தங்—கியல்புரிந்தா
னூறயர்ந்து துன்புற்ற வும்பரின்புற் றேர்சகரிற்
சாறயர்ந்து வைகினார் தாம். (கஅ)

விண்குடியேற்றுபடலம் முற்றிற்று.

ஆ. திருவெண்பா கஙசு.

---

# கந்த வெற்புறுபடலம்.

---

இப்படியின் றுளேக வேய்தளியி னின்றுருக
வொப்பருஞ்சீர்க் கந்தவெற்பி லுற்றுறைவான்—மைப்புரைய
மோதியுடன் செல்லவஃ தோர்ந்து செழுமலரோ
னாதியர்கள் போந்தா ரருகு. (க)

கந்தவே ளவ்வேளைக் கார்வணன்முன் னேவருமே
தந்தமிடஞ் செல்லவிடை தந்துவிண்ணு—டிந்திரனை
யாளா கிறுத்தி யணங்கொடுதன் றேரின்மேல்
வாளரிபோற் புக்கான் மகிழ்ந்து. (உ)

மன்மணித்தேர் புக்கவையன் வாகைமொய்ம்பன் பாகாய்ப்பார்
பன்மணிமுட் கோல்பணியாற் பற்றியுய்ப்ப—வன்மணித்தோண்
மன்வரையில்வீரர் விறற்பூதர் சுற்றவெள்ளிப்
பொன்வரையிற் போந்தான் புரிந்து. (ங)

போனதோர் போதையன் பொற்றே ரிழிந்துசம்பு
வானவனையாயோ டடிபணிந்து—சோனைமுகில்
பைந்தளியி னுடுவிடை பெற்றெழில்கூர் கந்தவெற்பி
லந்தளியிற் புக்கா னணைந்து. (ச)

புக்கோர் புனிதவேள் பூதகணம் போற்றவெய்யர்
தொக்கோர் பணியினிற்பச் சூழ்ந்தேத்த—மிக்கோர்க
ளோதனத்தி னுன்னடையா ளோடணைந்தே றோங்குமணி
யாதனத்தில் வீற்றிருந்தா னாங்கு (ரு)

தொன்மறையி னுலுந் துதித்தற் கரியசெவ்வேள்
பொன்மலர்த்தாள் வாழ்கவிரு புள்வாழ்க—பன்மனுமம்
போழ்கதிர்வேல் வாழ்கவன்றன் பொய்யிலடி யார்வாழ்க
வாழ்கவுல கெல்லா மகிழ்ந்து. (சு)

கந்த வெற்புறுபடலம் முற்றிற்று.

ஆ. திருவெண்பா கஅஉ.

# இந்திரபுரிப் படலம்.

---

சூர்தனைவெ றுய்ய சுடரயில்வேல் வேளருளாற்
சீர்தருவிண் ணாடரசு செய்வேந்த—னோர்பகற்றெம்
மன்னினர் செய்தீமை மற்றேவ லுற்றவெலா
முன்னினா னோர்ந்தோர்ந் துளத்து. (௧)

மறுத்தான் சசியோடு வைகுமின்ப வாழ்க்கை
வெறுத்தான் வெறுக்கையிறை மேன்மை—செறுத்தான்வேந்
தாற்றுதவத் தான்வீ டடைவனென்றா னஃதுணர்ந்து
மாற்றுதவத் தானினைந்தான் மன். (௨)

உன்னியவேந் தும்பர்வேந் தோருழைவந் தாற்றுவைகித்
துன்னியசீர் சூழ்குலிசத் தோன்றலை—யின்னனகே
ளொன்றிழிபொய் வாய்மைநன்மை யெய்துமென்றார் வான்பதந்தா
னின்றிடவோர் சூழ்ச்சிசொல்வா னோர்ந்து. (௩)

அன்பி லவுணர்க் கரசனா லாயபெருந்
துன்பமதை யுன்னித் துயரடைந்தே—முன்புலனோர்
தன்றுநோற் றெய்தின் பரசும் வெறுத்தனைநீ
யின்றுநோற் றெய்துவதி யாது. (௪)

அகத்திற் றுயருழந்தா ரல்லரோ வாக்க
மிகத்திற் பெருவாழ்க்கை யெய்வார்—சகத்தின்கண்
மன்னவனே வாழிகேண் மன்னுயிர்க்கெ லாமியற்கை
நின்னளவன் றென்று நினை. (௫)

ஏழவரினன் மாதவரின் முன்பா தலர்சாற்
றேவரின்மற் றேவர்தாந் தேன்மொழிதோண்—மேவு
கரும்போ கமுகோவென் காரிகையார் கொங்கை
யிரும்போகம் விட்டிருந்தோ ரின்று. (௬)

போயதுயர்க் கஞ்சிப் புகுந்த திருத்துறந்தே
மேயதவ மாற்றின் மிகத்துன்பே—காயநொந்து
மோகமன்றி யோகுசெய்வோர் முன்னிப் பெறுவதூஉம்
போகமன்றி யுண்டோ புதிது. (௭)

மன்னு புலனொடுங்கும் வாய்ந்த காரணமில்லை
துன்னுசெயல் சொன்மெய் தொலையுமாண்—டுன்னரும்பே
ரின்பமுண் டென்பரதை யாரறிந்தார் கண்டதுமெ
யென்ப ருலகுளோ ரீண்டு.

பொய்யார்ந்த கானலதைப் பூம்புனலென் றேவிழைந்து
கையா ரயிர்தைக் கமருகுத்தாங்—கையா
சிலருளதென் னின்பந் திளைப்பவுன்னி யிம்மை
நலனிழத்தி நின்னெண்ண நன்று. (௯)

மின்னனையார் நல்கின்ப மேயின்ப மன்னரொடு
மன்னுறவாழ் வாழ்க்கையே வாழ்க்கையா—மன்னவரை
மேவுசெல்வ மேசெல்வ மேவித் தனம்பெறு
மாவறுமை யேவறுமை மற்று. (௧௦)

நறியகுழன் மாதர் நலமார் புணர்ப்பைச்
சிறியவின்ப மென்பர் சிறப்பை—யறிவரே
லன்னதுவே பேரின்ப மாமிறைவ கேட்டியேன்
மன்னவது சொல்வனென்றான் மன். (௧௧)

குரவனிவை கூறக் குரிசி லனையா
வுரவுளந்தி முன்னிழுதை யொத்தே—விரகமுற்று
மாதர் சிறப்புமின்பு மற்றெற் கிதுகாறு
மோதிலையென் கொல்லென்று ணேர்ந்து. (௧௨)

வேந்தனுரை கேளா வியாழனெனப் பேர்வாய்ந்தோ
னேந்தன் மயங்கினு னென்னவெழிற்—காந்தையர்சீர்
மன்மதனால் கூறுமது வாஞ்சையில்லார்க் கோதுகிலார்
நன்மனமே கென்றுசொல்வா னன்கு. (௧௩)

ஈறில் லனவென் றியம்பின ரோர்பத்தே
நூறுடனே ரெட்டென்று நூலுமே கூறினர்
வேறு மிசைத்தார் விளங்கு சமயந்தா
னுறெனவே யோதினு ராய்ந்து. (௧௪)

நுதலவற்று ளிம்மையிலே நொய்தினின்ப முத்தி
யுதவுவது காம ருலோகா—யதமதமா
மந்நெறிநின் றேவீ டடைந்துமைந்த ரின்புறுவார்
மன்னதையீ வோர்மடவார் வாய்ந்து. (௧௫)

அந்தமட வாரியலு மன்னவரைச் சேர்திறனுஞ்
சிந்தையுற மேவுந் திறலுடைய—மைந்தர்தஞ்
செய்கையுமற் றுள்ளனவுஞ் சித்தசவே ளாகமத்தின்
மெய்ம்மையதாய்ச் சொல்லும் விதந்து. (௧௬)

சாதி யியற்கை தனித்தத் துவமாந்த
ரோதுகுணந் தேச முறுமவத்தை—போது
கருத்திவை யாதியசீர்க் காமருவேள் வேத
மருத்தியுறக் கூறு மமன்று. (௧௭)

பன்மா னினிவடவை வாய்பே ரிசையினிகூர்
நன்மாமை யத்தினியெ ஞரியர்க்கா—முன்மா
வசைவறுதொன் மாமரபே யாடவர்கள் பார்க்குஞ்
சசனிட பன்னசுவன் ஞம். (௧அ)

மூன்ன நவின்றிடுமோ மும்மை மரபுக்குட்
சன்னியரோ டாடவர்தங் கள்குறிக்கு—முன்னரிய
மாற்பமோ வாழுநெடு மையின் னனவென்ன
வேற்ப தியற்கையே யீங்கு. (௧௯)

அண்ட ரருந்தவத்தோ ரந்நாகர் கந்தருவர்
திண்டிறல்கொள் பூதர் திணியரக்கர்—மண்டியக்கர்
சத்துவமி லாவலகை தந்திறனே யாவதுதான்
றத்துவமே யாகுந் தக. (௨0)

தத்துவமா யாற்றினின்ற தையலரை வந்துபித்தென்
னுத்தமமா முக்குணங்க ளுற்றனர்மற்—றத்தகைய
வுண்மை படைத்திடவே யுண்குணன்று ளுகுமால்
வண்மையுடை வேந்தே மதி. (௨௧)

உருவும் வணமு முயர்ந்த செயற்கையு
மரிவையர்த நாளு மனைத்துந்—தெரியவே
யுண்மா வுளநாடி யோர்வார் மரபுமுத
லெண்மாக் குணத்தீறு மே. (௨௨)

துன்னருமாத் தேசந் தொறுமீண் டியமடவா
ருன்னருமா நீதி யுளஞ்செயற்கை—யென்னவரும்
பேசிடவெவ் வேறாகும் பெற்றியதாய் நிற்பதுவே
தேசவியற்கை யெனத் தேர்.

வாலை தருணியொடு மன்பிரவு டைவிருத்தை
யேனும் வியன்பருவத் தேயுரைத்த—காலமொடு
பேசுளத்தின் வேட்கை பிரித்தறியப் பெற்றதுவே
யாசி லவத்தையே யாம். (௨௪)

மூக்குணத்தர் முப்பாலர் மொய்நால்வ ரெண்மாந்
தக்க மடவார்க ளாம்பற்று—மிக்குறலே
யேதமிலா வாடவர்க ளெய்துதற்கே யேற்றபல
போதுதெரி சிற்பதுவே போது. (௨௫)

மக்களூறு காமம் வடிவினிலே வைகலுந்தான்
பக்கந் தொறுமிழிந்து பண்பினொடு—மிக்கவுயர்
பான்மையாற் புக்கவிடம் பார்த்திழைப்ப தூஉமதே
மேன்மையுள வேந்தே விதி.

பற்றுளரை யஃதிலரைப் பண்புற் றுளரிலரை
மற்றுளரை வாஞ்சையுறு மாந்தர்க—டெற்றெனவே
தேற்றுமா றுற்றநற் செய்கையுளங் கொள்கருத்த
தேற்றமிகு மேந்தலே யெண். (௨௭)

இங்கிவைநன் மைந்த ரியல்புமெழில் கூர்ந்துறுமா
மங்கையர்தம் மாண்பும் வகுத்ததே—யங்கனையார்
பொங்கிதமாச் சேரும் புணர்ச்சிதனக் கேற்பதோ
ரங்கிதமேல் கூறநின்ற வாய்ந்து. (௨௮)

புல்லல் சுவைத்தல் புணர்மா நகக்குறிகள்
பல்லுறுதன் மத்தனம்பன் னூடனந்தா—னெல்லு
மொலிகரண மோடு முவப்பா தியவே
புலவியைந்த வென்ப புரிந்து. (௨௯)

விரைதல் சமந்தூக்கென் வேகமுச்ச நீசம்
புரையில் சமமென் பொருண்மை—விரவப்
பரவைவகை யீரைம் பகுதிபிற வாற்சேர்
தருபுணர்ப்பா மொன்றுவரி சார்ந்து. (௩௦)

உறுத்த னெருக்கலு ரோசலுறு தன்மூன்
விறற்றருசூழ் வல்லிமர மேற்கோண்—மறுத்தீர்
செறித்த திலவரிபா நீம்புனலார் காட்சிப்
புறத்தொருறுப் பொற்றல் புணர்ப்பு. (௩௧)

வைத்தறுடிப் பொற்றுமா பொப்பு விலங்குசுற்றே
யுத்தாம னக்கன்மு னேதவற்றூற்—பத்துடனே
யொன்றுமற்றப் பற்பல் லுறுப்புணர்ந்து முத்திறத்த
துன்றமிர்துண் டல்சொல் சுவைப்பு. (௩௨)

சுரிதகமென் னூட்டிங்க மேண்.டலமே
யுருமின் மயின்மூயலி னெண்கால்—விரைநெய்தற்
காரிதழ்வேங் கைநகவி ரேகைமெய்யே ழங்கமுற்றுங்
கூருகிர்தீட் டல்லக் குறி. (௩௩)

துவர்தருமா மாலை சுனகமா கேணக்
கவாடிகான் கண்டப் பிரத—மிவையல்ல
மற்றவும்போ லின்னமுதுண் வைப்பி லெயிறழுத்த
லற்றமிலாப் பற்குறிய தாம். (௩௪)

உரமுதலோ ரைந்திலம்பா லோர்தொழிலா லேற்ப
வரும்புணர்ச்சி வேலைபுடைப் பஃதா—முரிய
கரிகரமுன் னாய கனங்குழையார் வேட்கை
தரநவிற்ற லேமத் தனம். (௩௫)

மயிலனஞ்செம் போத்தனிசே வல்புறவு காடை
குயிலெனுமோ ரெட்டின் குரலைப்—பயின் றமைந்தர்
கூறுமின்னார் பாங்கெய்திக் கூடும்போ தின்னசெயு
மாறுதிகழ் சிற்கார மாம். (௩௬)

பாரியல்கி ராமியம் பௌத்திகங்கூர் மல்லனிதஞ்
சாரிதமண் கேமம்பீ தஞ்சூல—பாரிசங்கூர்ப்
பன்னஞ் சமூர்த்தம் பரிவத் தகஞ்சமவே
தன்னமத்த பத்மா சனம். (௩௭)

கொன்விக் கிரமமுதற் கோயூ தகமீரு
வன்வகைநாற் பானெட் டௌதிறத்தான்—மன்பிறவாற்
சீர்மகளி ருண்மகிழச் சிட்டர் புணர்பான்மை
யார்சித் திரக்கரண மாம். (௩௮)

திணைநிலைநல் லார்தந் திறமுஞ்சேர் மாண்பு
முணர்வொளி னுங்குழுவு ஞற்ற—கணிகைப்
பரத்தைகா மக்கொடியார் பாலொழிந்தோர்ச் சேர்தல்
காத்தலினால் வல்லோர் கடன். (௩௯)

முன்னுறவே னூலின் முறையனைத்து மேதொகையிற்
பன்னிவகை சொற்றகலம் பார்த்தறைந்து—பொன்ன
னிருப்பமக வானவற்றை யெண்ணிமட வார்ச்சேர்
விருப்பமக முற்றான் மிக. (௪௰)

கொற்ற வலாரி குரவற் றொழுதெந்தாய்
சொற்றதன்மை யெல்லாந் துணிவெனக்கொண்—டுற்றன
மற்றொன்றும் வெஃகேன் வரம்பிலா வின்புதனைப்
பெற்றனன்போன் றேனென்றான் பேர்ந்து. (௪௧)

பொன்னனூல் போதித்துப் போதமகிழ்ந் தேகுதலு
மன்ன னரசை மகற்களித்து—மின்னனைய
சுந்தரியைக் கூடியே சொல்லருமா போகமுற்று
நந்தரிபோல் வைகினு னன்கு. (௪௨)

திரண்டவரால் சேல்களிறு சேதாம்பல் கஞ்ச
மரண்டங்கு பாசிவளை யார—விரண்டு
காகமுறப் பற்றிக் கடிதடத்தின் மேவி
விரக விடாத்தணித்தான் வேந்து. (௪௩)

மகவான் சசிபான் மதநூற் றுணிவி
னுகவாப் பசியி னுழந்து—மிகவாடி
யெய்த்திருந்தா னூனுண்டாங் கெய்தருமாப் போகவின்பா
துய்த்திருந்தான் பன்னு டொடர்ந்து. (௪௪)

அன்னபொழு தோர்நாள்வேந் தானை தனைப்போற்றிப்
பொன்னகர்செங் கோலோச்சிப் போற்றிளவ—றன்னயலிற்
றன்று வமர்முனிவர் சூழமரர் தம்மொடுமுன்
மன்னுசாற் பார்த்துரைப்பான் மற்று. (சரு)

எந்தைகேள் வேத னிமையோர் முதலெவரும்
வெந்தறுகட் சூரான் மிகவுமுள—நொந்தயர்ந்து
சீரணவு மேன்மைபோய்ச் செல்லலுற்றுத் தாழ்வந்த
காரணமென் னென்றான் கனிந்து. (சசு)

தின்றிமையோர் சூழ்முனிவர் துன்னெவருஞ் சூர்தன்னு
லொன்றியமா நிமையெலா மோர்பானை—யன்றி
யகத்தினந்தை கொண்டுதக்க னுற்றுமகம் புக்க
வகத்தின் விளைந்ததென்று னுங்கு. (சஎ)

என்றலுஞ்சேய் கேளா விதுகா ரணமேலப்
புன்றொழிலார் தக்கன் புராரிதனை—யன்றியே
செய்தருமா வேள்வித் திறனனைத்து மொன்றுவிடா
துய்தருவான் சொல்லென்று னுற்று. (சஅ)

சீயந்தனுரை மாற்றந் தனையுணரா வாற்றல்
வயந்தனையுற் றேவாழி மைந்த—நயந்திதுகே
ளென்று வகந்தையுள மேய்ந்ததக்க னுர்ந்தகதை
மன்னுசான் சொல்வான் மகிழ்ந்து. (சகு)

இந்திரபுரிப்படல முற்றிற்று.

———:o:———

ஐந்தாவது தேவகாண்ட முற்றிற்று.

ஆ திருவெண்பா உநகக.

உ

திருச்சிற்றம்பலம்

ஆறுவது

தக்ஷகாண்டம்.

---

# உபதேசப்படலம்.

மண்ணுதி யிற்பிறந்து மாழ்கவைப்பை யோபுரிதோ
மெண்ணு தெனைக்கதியி லேற்றவையோ—விண்ணு
ளொழுகுமரக் கோட்டத்த வோங்கெயில்சூ ழும்பர்
தொழுகுமரக் கோட்டத்த சொல். (க)

அண்டரிடர் தீர வானுதற்க ணின்றுவந்து
துண்டமுற வத்தியரி சூர்மாக்கொன்—றெண்டகைய
வானோர் சிறைமீட்டு வான்பிடிகான் மான்வேட்டுத்
தானோர் கிரியமர்ந்தான் சார்பு. (உ)

உன்னுலகுண் மேலா யொளிர்சத் தியவுலகின்
மன்னுமொளி வீசு மணிக்கோயி—றன்னில்
வியன்றவத்தோர் விண்ணோர் விழைபுதல்வர் போற்ற
வயன்றவிசில் வீற்றிருந்தா னங்கு. (ங)

இருந்திடுபோ தைய னெவையுமளிப் பானீன்
றிருந்து பதின்மராஞ் செல்வர்—பொருந்தவரு
டக்கனென்போன் முன்செய் தவநெறியா லீதொன்று
மிக்கயனைக் கேட்பான் விழைந்து. (ச)

தேவர் முதல்வராய்ச் சிற்குணத்த ராயெண்ணு
மூவர் தமிலுயர்ந்த மூர்த்தியரா—யோவிலுயிர்
தோறுமுயி ரென்னவுறை தூயர் தமைநன்று
தேறவெந்தாய் சொற்றியென்றான் றேர்ந்து. (ரு)

நன்றிதுசொல் வேன்கேட்டி நாரணனு நானுமா
வன்றமர்செய் காலை யழலெனவே—யொன்ற
வெழுந்தும் பரிற்செல் லிறைசிவனே யாருந்
தொழுந்தெய்வ மென்றே துணி (சு)

இருசெயல்செய் நீவிர்தா மேதிலர்போ னிற்ப
வொருசெயல்செ யீச னுமக்கேன்—மருவு
மிறையாய் வருசெயலு னென்ன மயக்கோ
வறையா யெனாவின்று னங்கு. (எ)

தீக்க ளிஃதுரைப்பத் தந்தைநன் று நன்றென்றா
னக்கிறுதி நாளினமை நாகரொடு—தொக்கவே
தன்னுயிர்க டம்மைத் தொலைப்பா னவனென்னின்
முன்னளித்தா னாகு முன். (௮)

அந்நா ளொருவனா யாய வுயிர்த்தொகையைத்
தொன்னாண் முறையொடுக்கித் தொன்மைபோற்—பின்னாக்குந்
தென்றிசைக்கட் கூற்றுதைத்தோன் செய்கைமுற்று மித்தன்மைத்
தென்றிசைக்கற் பாற்றோ வெடுத்து. (௯)

திருமா றனையென்னைத் திண்டிறலி னல்கி
யிருமா நிலங்காப்பு மீப்பும்—வருமாயா
யும்மா டிருத்துமென்றெம் முன்னுயிர்நின் றாற்றுகின்றா
னெம்மான் முடிவ திலை (௧௦)

எள்ளாரெண் ணெய்யு மெறிமா மணியொளியுங்
கள்ளார் மலர்மாக் கடியும்போல்—விள்ளா
துலக மனைத்துமே யுட்புறம்பாய் மேவு
மிலகு பரஞ்சோதி யேய்ந்து. (௧௧)

வேதமுத லாய வியன்கலையெ லாந்தோன்றா
னோதினா னெங்கட் குணர்த்தினா—னீதுநீ
யோதுவற்றிற் காண்யாரு மொன்றெனவே கொண்டனைகொல்
பேதையோ வென்றான் பெரிது. (௧௨)

ஈசனருள் வேத மெவரும் பிரமமென்றே
பேசுவதென் னென்னப் பிரமனன்றா—னேசமுறச்
சொன்ன மறையின் றுணிபுமுக மன்னெவர்க்கு
மன்னவனுக் காதலுண்மை யாம். (௧௩)

ஆதலா லீசனல்லா லார்க்கு முகமனும்
யாதுபொரு ளாரிறைஞ்சி னேய்ந்ததுபோய்ச்—சீத
மதிபுனைந்த வேணியனை மன்னுமே யெல்லா
நதியுங் கடல்செலல்போ னன்கு. (௧௪)

கேளினிய மைந்த கிளர்வேதச் சாகைநவில்
சூளுரையின் பாகன் றொழில்செய்வித்—தாளுபவ
னாறிதழித் தார்மிலைந்த நாயகனே யாதிநடு
வீறு மிலாதா னெனும். (௧௫)

அருவு முருவுமா மத்தனொரு வன்சீர்
தருமுலகு மீன்றுநல்கு தாதை—பொருவிலான்
பெண்ணுடனே யாணலியாம் பெற்றியனுள் வோரெணிய
வெண்ணியவாங் கீவோ னெனும். (௧௬)

விதிமுதலாக் கூறும் வியனுயிர்கட் கெல்லாம்
பதியென் பசுபதியன் ஞர்க்கு—மதிகளு
மன்பரெலாந் தேறவாங் கன்னவர்தாந் துஞ்சவெந்த
வென்பு புனைவா னெனனும். (௧௭)

ஊனன் புகுமெல் லோரையுந்தன் ஞெண்குணத்தி னேடொடுக்கி
வான்புகலாய் நின்றமற் றோர் மன்குணத்திற்—றன்புகலி
லீச னியலை யினையதென வேயெடுத்துப்
பேச லரிதெனுமே பேர்ந்து. (௧௮)

அன்றியுங்கே ளம்புயத்தோ னாதியரை நீக்கியா
னென்றுள்ள வோர்முதல்வ னீயுமுத்தி—நன்றெனவே
தேர்ந்தஃ துரைக்குமென்னிற் றேவரா வார்யாவ
ரோர்ந்தறிதி மைந்த வுளத்து. (௧௯)

இன்னமுமுண் டன்னூர்க் கியம்பி யறையவொரு
தன்னி யுரைக்கி னுகம்பலவாம்—பன்னிடினு
முற்றுதென் பானீ முனமுணர்ந்து மோகமே
யுற்றாய்கொ லையா வுளத்து. (௨௦)

மாயன் றனையென்னை மற்றவரைப் போற்றுமறை
தூய வரனைத் துதித்ததுபோ—லேயமறை
யெம்மை யிமயவரை யேனையரைப் பாதிசொலு
மம்ம வுணர்தினீ யாய்ந்து. (௨௧)

நிம்மைப் பரமென்பார் நண்ணிரயம் வீழ்வரொப்பென்
றெம்மைப் புகல்வோ ரிடரினுய்ப்போ—மெம்மையரற்
கன்பரெனத் தாழ்வார்க் கருள்புரிவோ மல்லாரை
வன்பரெனக் கொள்வம்யா மற்று. (௨௨)

பதியான்பா சத்திற் படுபசுவா மென்றே
விதிமறைகள் கூறுமெய்மை வேண்டி—னிதுவெனவே
யேல நவில்வே னிவர்செய்தாற் பூசித்த
வாலயங்கள் காண்டியாங் காங்கு. (௨௩)

அவனருளான் முத்தியெய்து மஃதன்றி யெய்தா
தவனருளால் யாவுமே யாகுஞ்—சிவனே
னன்னலாற் றெய்வமிலை யாதலான் மைந்த
வவனை யடைதியென்று ஞங்கு. (௨௩)

உபதேசப்படலம் முற்றிற்று.

# தக்கன்றவஞ்செய்படலம்.

---

திந்தையுரை கேட்டுணர்மா தக்கனுயர் முத்திபெறச்
சிந்தைசெயான் மான்முதலார் தேவரினு—மூந்துதவஞ்
செய்துபலன் கொள்வமெனுத் தேர்ந்தயற்றூழ்ந் தோர்பரனை
யெய்துவனு னென்று ளினிது. (க)

பல்கு தவம்புரியப் பாங்கோ ரிடம்பணித்து
நல்குவிடை யென்னவய னன்மனத்தின்—மல்கியெழு
வாவியக மேகெனவம் மானதத்தி ேனார்புடைபோய்
மேவு தவம்பயின்றான் வேட்டு. (உ)

காலைநே ரோட்டிக் கனற்றீ யினைமூட்டிப்
பால மருவுபயன் பாற்றிமெய்யி—லேலுமன்பின்
மஞ்சனநீ ராட்டி வரற்கொழுக்கத் தார்சூட்டி
நெஞ்சமதிற் பூசித்தா னோர்ந்து. (௩)

சித்தமன்ற னுள்ளந் தொடர்வா யொருமையுற
வித்திறத்திற் பூசை யிறைக்கியற்றிச்—சித்தனற்சீர்
நாமம் விதியி னவின்றுபத்து நூறாண்டு
தாமன்பிற் செய்தான் றவம் (ச)

அன்ன முயர்த்தவன்சே யன்னதவஞ் செய்சாலை
முன்னமுமை யோடிறைவன் மூரிவிடை—தன்னில்
வரவும் விரைந்தெழுந்து மாமகிழ்வுற் றையற்
பரவுவல்யா னென்றெதிர்ந்தான் பாங்கு (ரு)

சென்றரன்று டாழ்ந்து சிறப்பித்தோ ராயிரமா
மொன்று துதிக ளுகந்துரையா—நின்றிடலு
நின்றன் செயன்மகிழ்ந்தா நீவேண் டுவதின்ன
தென்றறைதி யென்று னிறை. (சு)

தாலம்வான் மாலயனூர் தம்மிலெனு தானைசெல
வேலநினைத் தாழ்வோ ரெனைத்தாழச்—சாலெவரு
மேயசெய்கை செய்யமக்க ளென்றுமல்கத் தாய்மகளா
நீயவளை வேட்கவரு ணோர்ந்து. (எ)

ஈசன் வினவுவா மீந்தே கலுமவன்சீர்
நேசமுறப் போற்றி நிகரிறக்கன்—பேசற்
கருமகிழ்ச்சி யெய்தி யயனையெண்ண வன்னுன்
காமமற்று மோர்ந்தான் கருத்து. (அ)

மழுவாளி வாய்மைசொற்று மைந்த னதனைத்
தழுவாதிவ் வண்ணமுற்றான் சால—வழுவாத
வல்லா வகமுமுற்று ஞர்தான்விதியைவெல்ல
வல்லா ருலகில் வலிந்து. (கூ)

செய்வதினி யாதென்னச் சிந்தை தளர்ந்தலரோ
னுய்வகையின் மைந்தனைத்தா னுற்றுவல்லே—மெய்வகையி
னுசிவின் றங்கணுக வவ்வெய்ய னிவ்வயினோர்
மாசினகர் செய்தியென்றான் வாய்ந்து. (௧0)

என்னமைந்தன் கூற விமைப்பி லமைப்பனென
மன்னம் புயத்தோன் மலர்க்கரத்தாற்—றன்னகர்போ
லொன்றுதக்க மாபுரியென் றோத வமைத்தனன்வான்
றன்றுநக ருட்கத் துதைந்து. (௧௧)

அந்த நகரத் தரியதவத் தக்கன்சென்
றுந்துவள நோக்கி யுவகையுற்றுத்—தந்தைபா
லன்புசெய்து கோயில்புக் காதனத்தில் வீற்றிருந்தா
னின்ப முறவே யினிது. (௧௨)

அரியணைமேன் மேவுதக்க னத்தன்பாற் பெற்ற
வரமுணர்ந்து போய்க்குருமன் வானோர்க்—குரைதரலு
மன்னோர் துணுக்கமெய்தி யாரனரின் மூழ்கியே
துன்னு வடைந்தார் தொடர்ந்து. (௧௩)

வானவர்கள் போந்ததன்மை மன்புகரோன் றோர்ந்துபோ
யான தயித்தியர்கோ வையணுகிப்—போனதுவே
யுன்னவல மஞ்சறக்க னும்பர்க்கு மேலாகு
னன்னவனைச் சார்தியென்று னங்கு. (௧௪)

சேருதியென் மாற்றஞ் செவிப்புலத்திற் சேர்தலுமே
யாரமிர்துண் டான்போ லகமுவந்த—மேருவினோர்
சார்வைகு மன்னன் றபனனிந்து கோணனோ
ரேர்தியிசை வான்சென்று ருற்று. (௧௫)

புங்கவர்கண் மாதிரத்தோர் போற்றவய னுதியர்க
டங்கடொழில் செய்தேத்தத் தக்கனென்போன்—றிங்கள்
பொருந்துகுடை செங்கோல் புவனமுற்றுஞ் செல்ல
விருந்தரசு செய்தா னினிது. (௧௬)

தக்கன்றவஞ்செய் படலம் முற்றிற்று.

ஆகூ திருவெண்பா. ௪0.

# தக்கன் மகப்பெறு படலம்.

---

ஆங்கவன்றன் றேவி யருந்ததிக்கற் பின்மிக்கா
ளோங்குமறை வல்லியென்பே ருத்தமியாம்—பூங்கொடியோ
டுந்துதிறற் றக்கன்சேர்ந் தோரா யிரமாய
மைந்தர் தமையீன்றான் வாய்ந்து. (௧)

அம்மகர்க்கு முப்புரிநூ லாய்விதியி னாலாற்றி
யம்மறைக ளீந்துமன வாவியுற்றே—யம்மகீ
ரெல்லிருநோற் றெவ்வுயிரு மீவரம்பெற் றீசன்பாற்
செல்லிரிவ ணென்றான் றிகழ்ந்து. (௨)

அன்னார் பணிந்துபோ யார்மான தப்பொய்கை
துன்னு வரனையுன்னித் தொன்முறையே—பன்னு
டவஞ்செய்வார் முன்னா தன்னணிசீர் நோற்ப
தெவனென்று கேட்டா னினிது. (௩)

முனிவகே ணல்கிடுவான் முக்கணன்பொற் றாளை
யுனியெந்தை யானையா லோங்கு—மினியதவ
மாற்றுதும்யா மென்ன வதிசயித்துக் கைபுடையாச்
சாற்றுவான் பின்னுந் தவன். (௪)

ஈசன் றனைவழிபட் டேத்தித் தவமாற்றிப்
பாச மகற்றீர் படைப்பினுக்கே—யாசையுற்றீ
ரேற்றமுறு வீட்டி னியலுரைப்பங் கேட்டிரா
றோற்றமிறப் பாக்குந் துயர். (௫)

ஆக்கு தொழில்செ யயன்றலையு ளோர்தலையை
நீக்கு தகைமை நினைக்கிலிரோ—வாக்குவதாற்
பெற்றிடுபே றென்கொல் பெருமையன்றி மாதவத்தி
ருற்றிடுபே றில்லைமற் றொன்று. (௬)

எத்துணைய வின்பு மெணிவேட் டோர்க்கெல்லா
மத்துணைய துன்புவந் தாங்கடையு—மெய்த்தவர்கா
ளல்லற் கடல்சார்தி ரன்றி யரனைமறந்
தொல்லுணர்வுந் தீர்வீ ருலைந்து. (௭)

நற்றவஞ்செய் துன்னுகதி நண்ணினா ரெண்ணிலார்
சுற்றமழு வாளிதன் சீர்த் தொண்டரலான்—மற்றில்லை
யாதலினல் லாறெய்தி யண்ணருமா வீடெய்திர்
தாளைதபணி தீர்திரென்றான் றான். (௮)

தந்தைசொலிற் றக்கதெனத் தாழ்தலுமே நாதன்றன்
மைந்தர் தமைத்தழீஇ மாநிலையு—மந்திரமுஞ்
செய்கையுமற் றவனவுஞ் செப்பிமுத்தி சேறிரென
வுய்கையுறு வான்சென்றா னுற்று. (௯)

அன்னர் தவஞ்செய் தருங்கதிப்பே றெய்திரென்
றின்னமைந்தர் பெற்றிதெரிந் தில்லனென—முன்னமதி
லோரா வனைத்துமறிந் துன்னுதக்கன் பின்னுமகா
ரோரா யிரர்த்தந்தா னுற்று. (௧௦)

பெற்ற மகார்த்தழீஇப் பீடார் மறைபயிற்றி
நெற்றிவிழி யானை நினைந்துநீர்—நற்றவஞ்செய்
தீங்கனைதி ரென்னவே யேர்மா நதமெய்தி
யாங்கணைந்து நோற்றா ரவர். (௧௧)

அங்கனவர் நோற்ப வஃதுணர்ந்தி யாழ்முனிவந்
திங்கனீர் நோற்பதென்னை யெண்ணியென—வெங்கடந்தை
தக்கனிவ ணேவினான் சாருயிரெ லாம்படைப்பான்
மிக்கதவ மாற்றவென்றார் வேட்டு. (௧௨)

அன்னதுதேர்ந் தேழிசையோ னார்தவஞ்செய் வீர்வரன்றா
னன்னிநற்பே றெய்தா துளுற்றுதொழின்—முன்னியது
தெள்ளறன்மன் வாவிபுக்குத் தேகசுத்தி செய்யொருத்த
னள்ளறன்மெய் பூசியதே யாம். (௧௩)

போக்கும் வரவும் பொருமலொடு நன்குமிலா
மாக்கதியை முன்னுகிலீர் மாய்வுசன்ம—நீக்கரிதா
லுங்கட் கருடக்க னேங்குவளம் பெற்றுமா
னங்கழலில் வைத்திலா னன்பு. (௧௪)

ஆங்கவன்றன் மையலுற்றோ ருதலா லன்னவனீ
ணீங்களுமன் னரோயா நேயகுரு—நீங்கனைத்துஞ்
சேதிப்பான் றீக்கைவகை செய்துகதி சேருநெறி
போதிப்பா னல்லனோ போந்து. (௧௫)

மூன்னு யிரவருமே முன்பரிப்பொய் கைக்கணையன்
றன்னார் பணியின் றருதொழிலை—மூன்னோர்
வந்தவர்க ளோற்றார் மயலறவே தேற்றியுய
ரந்தமிலா வீடருளி னும். (௧௬)

என்னலும்யாழ் வல்லோ னிணைத்தாள் பணிந்துய்வா
னன்னெறியிஃ தென்ன நவிறியென—மன்னரன்றா
ளன்பின் வழிபடுவா ரார்பாத நான்கனையார்
நன்பயனுச் சார்பதமு நான்கு. (௧௭)

அன்னதனு ளோதியா ரார்வ துயர்கதியே
யுன்னு மிருவினையி னொப்புற்றோர்—மன்னியதி
லின்னலகன் றென்று மியம்பற் கரியதோர்
நன்னலத்தோ டின்புறுவர் நன்கு. (கஅ)

ஆதலினீ ரந்நெறியோ கார்ந்துகதி யெய்திரெனுச்
சோதிநா லோதித் துறக்கமுற்று—ஞேதிசையோ
னன்ன சிறுவரோ ராயிரருஞ் சிந்தையொன்றி
யுன்னு தவத்துநின்ற ருற்று. (கசு)

மன்னுதவ மாற்றி மயலொழித்தெம் மானருளா
லுன்னுகதி யாயிரரு மொல்லையுற்றார்—துன்னுநிரு
ரெங்கையுற்று ரின்னும்வந் தெய்திலரென் னென்றுதக்கன்
சங்கையுற்று னுள்ளந் தனில். (உ0)

போதத் துணர்வாற் புதல்வர் புணர்ப்புணர்ந்து
மாதக்க ஞாதன்றன் மாயமெனத்—தீதொக்க
சீற்றமுற்றே யன்னன் றிரிந்துழல வென்றுமென்றே
சாற்றலுறு சாபமிட்டா னுங்கு. (உக)

இனிமைந் தரைநல்கே னென்றிருபான் மூன்று
தனிமடவார் தம்மைநல்கித் தன்மன்—கனியும்
பிருகுமுத லொன்பதின்மர் பெட்புறவே யீந்தான்
றிருகுமனத் தக்கன் றெரிந்து. (உஉ)

துன்சுபுத்தி புத்தி சுரசை திருதிதுட்டை
தென்கிரியை கீர்த்தி சிரத்தைலச்சை—பன்மேதா
மன்கத்தி சாந்தை வபுவைதன்மன் வேட்டுமூ
வொன்பதும கார்த்தந்தா னுற்று. (உங)

பிருகுகி யாதிதனைப் பெட்புறவே புல்லித்
தருகவின்வி தாதாத்தா தாவென்—றிருமகரைக்
காதலுட னீன்று கமலையையு மூன்றந்து
மாதவற்கீந் தேநோற்றான் வாய்ந்து. (உச)

தாலம் புகழ்மரீசி சம்பூதி யைவேட்டு
நாலணங்கு நல்கினு னண்ணுமிவர்—பாலுதித்தோர்
பல்லர் புலத்தியன்சீர் பன்னரி சன்னதிவேட்
டொல்லவளித் தான்பலரை யோர்ந்து. (உரு)

அங்கிரா வென்பா னவிர்மிருதி மாதைமணந்
தங்கிதீ ரன்பரத னுமகர்ப்பெற்—றங்கியலார்
நாற்புயலைம் பாலரையு நன்களித்தா னன்னவர்தம்
பாற்பிறந்தார் பல்லோர் பரிந்து. (உசு)

பின்புலகன் வேட்டுப் பிருதியைத்தத் தாத்திரியா
மன்மகனை நல்கவன்ஞன் மார்ண்மரபி—லுன்கும்ப
ஞற்ருன் வசிட்டனென்போ னூற்சை தனைமணந்து
பெற்ருஞேர் மின்னேழ்சேய் பெட்டு. (உஎ)

அத்திரியா மேலோ னனசூயை யேவேட்டுச்
சத்திவிழி யன்றிங்கள் சார்ந்தசனி—மைத்தசங்க
தானணிவர்த்தி தந்தான் றனித்தீச் சுவாவைமணந்
தானமும்மை யோர்ப்பயந்தா ஞங்கு. (உஅ)

கிரது கமையைமணக் கேண்மையின் மூன்று
தரமகர்ப்பெற் ருன்பித ராசிர்—வருசுவதை
மாதைமணந் தேர்மேனை மன்றரணி மங்கையரைக்
காதலொடு தந்தான் களித்து. (உகூ)

சீர்தருமா மேனைதனைத் திண்ணிமவான் ருன்மணந்தான்
சார்தரணி யைமேருத் தான்வேட்டே—யோர்தருமா
மந்தரமா வெற்பைநல்க மற்றதுநோற் றீசன்ற
னந்திலுறப் பெற்றதென்று மாங்கு. (௩௦)

விண்ணுயர்மா மேருப்பின் வேலையின்னை நல்கிமுந்நீர்த்
தண்ணிறைக்கு கல்கச் சரவணியாம்—பெண்ணையன்ஞன்
பெற்றுப் பிராசினனென் பேர்வாற்கே யீயவவன்
மற்றையிரு சேய்பெற்ருன் வாய்ந்து. (௩௧)

ஆகு திருவெண்பா எக.

தக்கன் மகப்பெறுபடலம் முற்றிற்று.

---

# சந்திரசாபப்படலம்.

---

இன்ன பலவிளைக ளேய்ந்துமல்கத் தக்கன்பின்
முன்னருநாண் மீனத்துண் மூவொன்பான்—கன்னியரை
யீந்துமதிக் கீந்தெவர்க்கு மின்பமுற வோர்பெற்றித்
தாந்தரம்வா ழென்னவுய்த்தா ஞங்கு. (௧)

ஏகுதிங்கண் மானத் திவர்ந்துவிண்போந் தோர்முறையிற்
ருேகையர்பா லொவ்வொருநா டோய்ந்தின்பப்—போகமுறப்
பின்னவரு ளாரலொடு பின்னவஞ் மேர்கூர
வன்னவர்மே லார்வமுற்று ஞங்கு. (௨)

மற்றவர்பாற் சேரான் மறுத்தான் மதியென்பா
னுற்றதன்மை யோர்ந்துசினந் தொண்டொடியார்—பெற்றவன்பாற்
போந்தியம்ப வன்னான் புகைந்தவன்றன் பூங்கலைக
டேய்ந்திடவென் றேசபித்தான் றேர்ந்து. (௩)

சாற்றுதக்கன் சாபத்தாற் றண்கதிரோ னொண்கலைக
ளாற்றவைகற் கொவ்வொர்கலை யாக்குறையப்—போற்றுகலை
மூவைந் தழிதலுமே முன்னித் தியங்கியும்பர்
கோவை யடைந்தான் குலைந்து. (௪)

தக்கனிடு சாபத்தாற் றண்கலைகள் யாவும்போ
யிக்கலையொன் றேநின்ற தீதொழியின்—மிக்க
வெனதியல்புங் குன்றுமினி யென்செய்வே னென்னை
மனமயரே லென்றறைவான் மால். (௫)

அந்திவணன் கைலைதனி லத்திமுகன் பண்ணியமார்
தொந்திதனை நோக்கிநக்காய் தூயனந்நாள்—முந்தெவரு
நின்னைக்கா ணாகி நிந்தைசெய நீநீச
ரென்னத் திகழ்தியென்று னேய்ந்து. (௬)

என்றவந்தச் சாபத்தால் யாரு மிகவெள்ளி
யன்றுமுத னோக்கா ரகலநீ—சென்றிலவி
ஞற்ற வொடுங்கினு யஃதுணர்ந்தார் கைலைபோய்ப்
போற்றினர்முன் னோன்றாள் புரிந்து. (௭)

எண்டகுநின் மேன்மை யெஞ்ஞனிகழ்ந்து மாசுநனி
கொண்டனனிந் தஃதாற் குறைவுற்றான்—விண்டலக்குஞ்
சாற்றவன்றான் வேண்டுமெந்தை சாபமதாண்டோர்வைகல்
போற்றவரு ளென்றார் புகழ்ந்து. (௮)

ஐங்கரத்த னன்னதுகேட் டவ்வா றருளவெய்யோன்
றிங்களின்முற் பாலிற் செலுநாலாம்—பொங்குவைகன்
மன்னுலக நோக்க மாயினுற்றாய் மேலோர்சீ
ரன்னவற்குப் பூசைசெய வாண்டு. (௯)

இந்தப் பழிநிற்க வின்றலவ தக்கனு
னந்தக் குறையுமுற்றாய் நற்றிருவுஞ்—சிந்தினைபோய்ப்
போதகத்த னோடறைதி புத்திரனை வேண்டியே
யீதகற்று மென்று னிறை. (௧௦)

இந்திரன்சொற் கேளா விவைநன் றெனவயனூர்
சந்திரன்போய் வேதன்று டாழ்ந்துதக்க—னுந்துசினத்
தீய மொழியுணர்த்திச் சேயைத் தெருட்டியென்பான்
நோயவிடர் தீரென்றான் வேட்டு. (௧௧)

அன்னதறை திங்கட் கயனவில்வான் றக்கனென்பான்
றன்னுளவா றேயன்றிச் சார்கிலா—னென்னுரைதா
னென்னளவு மெண்ணா னெவர்க்குமுத லாகிநின்றா
னுள்ளவன்பாற் செல்லே னுகந்து. (௧௨.)

தொன்னானன் கூறவான் றாயதன்மை தேர்ந்தனையான்
பன்னா ளுழந்துதவப் பான்மையா—லிந்நாளி
லித்திருவில் லலுகி யிறுமாந் திறையுமெண்ணான்
மைத்திருளார் கண்டனையே வாய்ந்து. (௧௩)

நக்கனெதிர் கூறி நலிகுறைவு வேண்டலாந்
தக்கன்முன் சாற்றத் தகுங்கொலோ—மிக்க
திருவிடையாழ் தந்து செருக்கிநல்லா ரோரா
னொருவரையு முன்னா னுளத்து. (௧௪)

சீற்ற மிகுமனத்தான் றேக்கருளில் லானனத்தான்
றேற்ற வுணர்விலான் நீங்குளா—னாற்றுநீ
ராண்டுவர வேணி யணிந்தபிரா னன்னவன்றன்
வேண்டுவர மீந்தான் விரைந்து. (௧௫)

அன்னவனை வேண்டினவ னாற்றவெகுண் டென்னுவா
னின்னுடைய சாபமுமே நீக்கலா—னுன்னருஞ்சீ
ராதி யரனையடைந் தார்மா சகற்றிலா
யோதி யிலாமதியே யோர்ந்து. (௧௬)

நித்தன்முன் சென்றிசைக்க நீக்குமே நின்கவலை
நத்தன் முதலோர் நயந்தேத்து—மத்தன்
றெருளுருவாந் தன்னடியார் தீவகற்றற் கன்றோ
வருளுருவாய்க் கைலையுற்றா னாண்டு. (௧௭)

இடுக்க ணொருவர்பா லெய்தினெந்தை பொற்றா
ளடுக்கினது தீர்ந்தின்பத் தாழ்வார்—கடுக்குநமன்
வாதைகெட வந்தனைசெய் மைந்தன்முன் வந்தருள்செய்
காதை மறந்தனையோ காண். (௧௮)

நஞ்சமுறு காலத்து நாமுறு காலத்துந்
தஞ்சமென நாமன்றாள் சாரவவ—னஞ்சலென
வந்தருள்செய் மாண்பு மறத்திகொலோ பல்லமய
நந்தருள்செய் தாண்டா னமை. (௧௯)

ஆதலினான் கைலையண்மி யத்தன் சரணடைந்து
வேதமொழி யென்னமதி யேய்ந்தயற்றாழ்ந்—தோதருஞ்சீர்
மின்பிறங்க லூற்றுநந்தி மேவிவிட வீசன்றா
னன்பின்வணங்கினா னாங்கு. (௨௰)

பின்மறையாற் போற்றவிந்து வந்ததென்கொல் சொற்றியென
மின்மவுலிப் பெம்மான் வினவவெந்தாய்—வன்மைபெறு
தக்கன்றன் சாபத்தாற் றண்கலையெல் லாந்தொலைந்த
விக்கலையொன் றேயிருந்த தேய்ந்து. (உக)

இல்லுகலை யொன்றிருக்க வோவுகலை யாவுமே
மல்க வளித்தியென மாதேவ—னல்குமதி
யங்கலையை யங்கையிற்கொண் டஞ்சடைமே லாரவைத்தான்
பொங்கலையி லுந்துகலம் போல். (உஉ)

திங்கண் மருவுகலை தேசார் முடியிலங்க
வங்கணன்மன் னிந்துவைப்பார்த் தையுறனீ—யிங்கணம
ரோர்கலையின் வந்துற் றொளிதருமா றோன்றுமா
லார்கலைக ளெல்லா மமர்ந்து. (உங)

பன்னுகலை யைம்முப் பகலி னிரம்பியே
பின்னுமுறை தேய்ந்துவந்து பேராதோர்—மன்னுகலை
யின்னதன்மை யேங்கழு மெந்நாளு மேயென்றான்
முன்ன மருப்பணிந்தோன் முன். (உச)

ஐயனருள் செய்ய வடித்தா மரைவணங்கி
மெய்யன்பி னிந்து விடைகொடுசென்—றெய்யெனத்தன்
மன்னுலகுற் றூர்தொன் மரபின் வினைபுரிந்தான்
றுன்னு கலைவளர்ந்த சூழ்ந்து. (உரு)

மாயன் முதலோர் மதியின் றிறநாடி
மேயதக்க னாலிவன்றன் மின்கலைகள்—போயொளித்தான்
மங்கி வளர வருத்த வரன்செயலா
றிங்கறிவா ரென்று றிசைந்து. (உசு)

செக்கர் விசும்பிற் றிகழ்தந் தெழுதிங்கண்
மிக்கசெய லோர்ந்து வெகுண்டுவெய்ய—தக்க
னடுக்கமுறு மென்சாப நக்கனே கொல்லாந்
தடுக்கவல்லா னென்னநக்கான் றான். (உஎ)

எந்தைதன் றந்தை யெவருமரு கற்குமுன்னோன்
றந்தவுரை நீக்கிலார் தாம்விலக்க—வந்துமிலார்
தந்தையா யில்லாத் தனியொருவ னேதடுப்பான்
விந்தையா மேய விதம். (உஅ)

நின்றுநன்றி யாம்பரமா நான்முகன்மால் வானோர்க
ளன்றுயி ரெலாமழித்து மைந்தொழிலு—நின்றுநாம்
விந்தையிற்செய் தெங்கணுமே மேவுகின்றோ மென்னமனத்
தந்தையுற்றான் கொல்லோ வரன். (உகு)

விருவதொன் றுண்டுதக்கன் மண்ணிறனை நேர்வான்
பொருவி றவத்தினென்னற் போதித்—திருவந்
திகழ்ந்துதவி னேனுமென்றோ செப்பியவென் றனை
யிகழ்ந்தித் திறமிழைத்தா னிங்கு. (௩௦)

எய்துபரம் பொருள்யா மென்பதனைத் தேர்ந்துமிக்கா
னெய்தினெல்லாச் செல்வமுற்றுநோன் சரண்டாழ்—செய்கையிலா
னென்றுகொளேலா வென்சொல் லிகழ்ந்தான் சிவனென்னத்
துன்றுசினங் கொண்டான் றுணிந்து. (௩௧)

திகவன்பில் புன்னெறிய தக்கனுரை தேர்ந்து
புகலும் புலகன் புரிந்து—நிகர்பிறவி
நீக்கமிலாத் தேவையெள்ளே னின்னையிகழ் வாரெவரு
மாக்கமுமே யெஞ்சுமென்றா னங்கு. (௩௨)

என்றவனை நோக்கிவெய்யோ னெய்துதவத் தாலெங்க
ணின்றவிந்த மாத்திருவ நீங்குமோ—துன்றிமையோ
ரொன்றென் பணியினின்றா ரு்றென் குவதுண்டோ
நன்று நன்று னோர்வென்றா னக்கு. (௩௩)

மூறுவலிக்குந் தக்கன் முகநோக்கித் தூயோ
னுறுசெல்வ நீங்கா துறினு—முறையிற்
புகலுநினக் கின்னருள்செய் புண்ணியனைப் போற்றா
திகழ்தறகு மோவென்றா னிங்கு. (௩௪)

புலகனுரை கேளாப் பொறையிறக்கன் மூன்னோற்
றலகிறிருப் பெற்றே னவைதான்—புலனுகரு
மூன்மாற்று வானல்லன் மொய்ம்பினொன்றுஞ் செய்கலன்கோ
னென்மாட்டென் செய்வதென்றா னிங்கு. (௩௫)

ஒண்புலக னன்ன துறுதியே யாநூலு
மெண்குணனை யெள்ளினோ ரிங்குய்யா—ருண்மையா
மன்மறைகள் சொற்றதே மற்றவனை யெள்ளலினி
நன்மனங்கொண் டேத்துதி நீ நன்கு. (௩௬

தின்னடைந்தார் வெந்துயரந் தன்னை யகற்றியவ
ரென்னபொருள் வேண்டினுமஃ தீவதியல்—பன்னற்
கினையுமதி தேர்ந்தடைய வீசனின் சாபந்
தனையொழித்தான் மன்னெறியாற் றான். (௩௭

உற்றகலை மல்கியபின் னுன்னிமுன்னீ சிற்றமுற்றே
சொற்ற வண்மூன்று சுருங்கவைத்தான்—மற்றினியேன்
செற்றமதி நின்முருகன் சிற்யானு மம்முறையாம்
[illegible]றிதனைப் பெற்றிடுவான் பின். (௩௮)

எனமுனிவர் கோமா னினிதறைந்து தேற்றச்
சினமகன்று வேதன்முற் றேவர்—மனமுவந்து
போற்றிடவே பன்னாள் புகலனையான் மன்னரசின்
வீற்றிருந்தா னுள்ளம் விழைந்து. (கக)

சந்திரசாபப்படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா ககO.

——:o:——

# உமைகயிலை நீங்கு படலம்.

அங்கயிலை வெற்பி லரனோ டமருமெல்லை
யங்கயிலை வென்றவிழி யம்மையெழீஇப்—பங்கயத்தாள்
கைதொழுஉப் போற்றிக் கருதருநின் மெய்ம்மைதனை
யுய்தருவான் சாற்றென்று ளுற்று. (க)

உருவுகுணஞ் செய்கையின்றி யொண்சிவனா மாண்பு
மருவுயிர்கள் பந்தமகல் வான்மன்—னொருசத்தி
தன்னினுன்ன லுற்றதுவுஞ் சத்திகளோ ரைவிரையு
மன்ன வளித்ததுமா மற்று. (உ)

அருவுருவந் தாங்கியே யவ்வழியர்ச் சித்தே
வருமுயச்ச தாசிவமா மன்னேன்—றுருவுற்ற
பண்புமிரு பானைந்து பண்பே வலவுருவாய்
நண்புறைந்த பெற்றியுமா நன்கு. (௩)

பின்குடிலை யின்விளைத்து மேவுருள்பின் செய்மூர்த்த
மன்வகைய பேதமுமுன் மாயையாம்—பன்வரம்பி
றத்துவமா ருறுமுன் றந்ததுவு மைந்தொழில்கள்
சித்தவன்பிற் செய்ததுமாந் தேர். (ச)

விதித்திடுமுத் தன்மையுயிர் மேவுதத்து வங்கள்
கதித்திடுமெங் குள்ளார் கருதும்—விதிப்பி
னுதித்திடுமெவ் வாறே யொடுங்கச்செய் தேதான்
மதித்தொருவா நிற்பதுமா மற்று. (ரு)

ஆனதன் றன்மை யரனு கமமறையின்
மேனிகழ்மும் மாண்பின் விளம்பவே—ரானனையா
ளெந்தை நினக்குருவி லென்றுபின்னைந் தோடுபல
வந்தவுரு வென்னென்றாள் வாய்ந்து.

உருவி னமக்கென்ன வொன்றுநம்பான் மேவு
மருளுருவம் யாவுமென வன்ன—தொருபொருளென்
றுன்னியுமை யோகையெய்தி யுன்னருள்யா னென்பதுண்மை
யென்னுருவாம் யாவுமென்று ளிங்கு. (எ)

நியந்தாங் குனதுபுகழ் நாடிநம்மு னங்காய்
வியந்தா யுனையெனவே மேவன்—மயந்தான
னவிதொறு நின்றுதெரு ளாக்கியவை தீர்துமேன்
மேவுசட மாய்விடுமே வீந்து. (அ)

உன்னிடத்தும் யாமுறுத லோவுழிநின் னுவியுமே
மன்னுமுணர் வின்றி மயங்குமா—லன்னதுகாண்
கென்றயனை யாதியம னெவ்வுயிரு மாற்றுவணர்
தன்றிறலி னீங்கினன் சம்பு. (கூ)

தேவர் முதல்வன் றிருச்செயலில் லாமையயா
லாவிகளெல் லாஞ்சடம தாகியே—யேவுலகு
மாட்டுவிப்பா னட்டாக்கா லப்பாவை வீழ்வதுபோ
னட்டுயிர்கண் மாய்ந்த நலிந்து. (க0)

இந்தப் படியுயிர்கள் யாவுமே யொல்லையி
னந்திச் சடமதாய் நண்ணுமெல்லே—சுந்தரித்தாய்
சிந்தைதெரு மந்தஞ்சிச் சிற்பரன்ற டாழ்ந்திறைஞ்சி
யந்தையகல் வான்புகல்வா னாங்கு. (கக)

அறிகிலனெந் தாய்நீ யுனைத்துயிர்மாண் பாற்றி
யுறுவதையெற் காக வொருவி—யிறுதிசெய்தா
யோரிறைநிற் காவிக் குகம்பலவென் றேம்பொறுத்தே
யாருயிர்நல் கென்றே வணங்கு. (கஉ)

பன்முறைதான் போற்றப் பரைக்கருளி யாருயிர்க
டொன்மை வினைப்பயனைத் துய்க்கவெண்ணு—நின்மலன்று
முன்னு முருத்திரர்க்கு முன்னுணர்வு செய்யவவர்
மன்னிறையை யுன்னினர் வாய்ந்து. (கங)

போதனரி காணப் புனிதன் செயலிதென
வோதியிற்றேர்ந் தாவியெழுந் தோங்கவிறை—பாத
மருச்சனைசெய் வானுன்னி யாரிருளின் மண்ண
ளருச்சனவட் டத்தடைந்தா ராங்கு. (கச)

எங்குமிருள் கங்குலொத்த திக்காலை யிற்பூசை
பொங்காற்குச் செய்துமெனப் புந்திகொடு—புங்கவர்கள்
சிற்பரன்கோ ளெங்கோலத் தேவருமும் மாண்பியலு
னற்புவடி வாக்கினா ராங்கு. (கரு)

எண்ணிரண்டு மாண்பி னியன்றபொருள் யாவுமுய்த்துக்
கண்ணனயன் பூசையன்பிற் சங்குலின்கட்—பண்ணமுயன்
றெண்ணிரண்டோ டைந்தெழுத்தையேய்ந்தோதி யெண்ணினர்மற்
றண்ணுவிதி யிற்புரிந்தா ராய்ந்து. (௧௬)

தண்வில் லுவமுளரி சாதி வலம்புரிப்பூ
வெண்மனுவிற் சாத்தினான் றியாமத்தும்—வண்பயறு
பாலெண்ணெ லோதனமுன் பல்வகையூ ணயகன்முன்
சாலநிவே தித்தனரே தாழ்ந்து. (௧௭)

பின்ன ரியற்றிடுமா பெற்றுமெலா முன்விதியி
லுன்னி யுஞற்ற வுருத்திரர்முன்—றுன்னியா
னன்னவர்க்கு வேண்டியவா றீங்கருள்வான் றொன்மைபோன்
மன்னுயிர்செய் வானினைந்தான் வாய்ந்து. (௧௮)

எழுந்தனர்மால் வேத னிமையவர்கோன் வானோ
ரெழுந்தனர்நன் மாமுனிவர் யாரு—மெழுந்தபல
வாவியிரு ணீங்கிற்று லல்லுறங்கி னார்துஞ்ச
லோவியெழு மாபோ லுணர்ந்து. (௧௯)

அன்னதொர்மாண் பெல்லா மமலன்ற னாணையாற்
றொன்னிலைமை யாய தொடர்புணர்ந்தே—யிந்நிலை
யாவுமரன் செய்கைவே றில்லையென்றார் மாமலர்மேன்
மேவயன்முற் றேவர் வியந்து. (௨௦)

மற்றதுதேர்ந் தீசன் வரவங் கெதிர்சென்று
பொற்றிருப்பூந்தாளிறைஞ்சிப் போற்றலுமா—னுற்றகா
னீண்டெமையர்ச் சிக்க வெழுப்பினோ மெவ்வுயிரும்
வேண்டியவை கேண்மினென்றான் வேட்டு. (௨௧)

நீற்றலுமே யல்லிலெம்போ னின்று னெவரேனும்
பற்றுடனர்ச் சித்தோர்க்குப் பன்மாக—நற்றிங்க
ளொன்னு கதிரிரண்டு மொன்றுபகன் முன்கங்குன்
மன்னுசிறப் பீகென்றார் வாய்ந்து. (௨௨)

நீவிர்செய் பூசை நெடிது மகிழ்ந்தமையா
லாவிகளெல் லாமுய்ந்த வார்வினைபோய்—மேவுமைப்போ
லிம்பரிலர்ச் சித்தோ ரெவர்க்குமுத்தி யீதுமெனு
நம்பனருள் செய்தகன்று னன்கு. (௨௩)

ஒன்றுமெங்கோ னேக வுருத்திரர்தந் தேமடைந்தார்
தன்றயன்முற் றேவர் கயிலைசென்று—மன்றனைத்தாழ்ந்
தோர்வின்றி வாளா வுறுபவமுற் றேமதற்கோர்
தீர்வொன்று சொல்கென்றார் தேர்ந்து. (௨௪)

ஓரின் றுணர்வுசிந்தி யோத்துமுறை செய்கலா
நீரினுங்கள் பால்வருவ னேருமம்பா—லாருமென்றே
யிங்கியற்று நுங்கடன்க ளென்னவயன் மாலிமையோ
ரங்கணற்றாழ்ந் தேகினா ராங்கு. (உரு)

போதன் முதற்றேவர் போற்றினராங் கேகவுமை
மாதன்பி னுதன் மலரடிதாழ்ந்—தோது
மிரும்பல் லுயிரினுக்கு மெய்துவினை யென்பால்
வரும்பரிசென் கொல்லென்றாள் வாய்ந்து. (உசு)

முன்புநீ யென்றனையெம் முன்வியந்தா யாமுனிந்தே
யுன்பொருட்டா லாவிக் குணர்வகற்றிப்—பின்பளித்தோ
மன்னதா லவ்வுயிர்க ளாரு மகமனைத்து
நின்னதாய் நிற்கு நெடிது. (உஎ)

முறையதா மப்பாவ முன்னுமுயிர் முற்றும்
பெறுவதா நிற்கலது பேர்ந்தவ்—வுறவி
பொறைபுரிதற் கெண்மையவோ போற்றுநீ யென்றான்
சிறுவிதிக்கு நன்கருள்வான் றேர்ந்து (உஅ)

ஓதானவ் வாறுரைப்ப வுள்ள நடுநடுங்கிப்
பேதையேன் செய்யும் பிழைபொறுத்தே—னேதமெலா
மாற்றும் பரிசுணர்த்து வாயென்ன வானோர்கள்
போற்றுகழ றாழ்ந்தான் புரிந்து. (உகூ)

ஆல நிறமு மமிழ்தின் சுவையுமுற்று
ஞாலமன்கா ளிந்தி நதிசென்று—சீலமா
மூலவெழுத் தன்ன முதிய வலம்புரியின்
கோலமாய் நோற்றிருத்தி கூர்ந்து. (ஙo)

அந்நதிக்கு ணீநெடுநா ளார்ந்துழிமா தக்கனென்போ
னுன்னையவண் சென்றெடுக்க வோர்குழவி—தன்னுருவாய்
மன்னியவன் பன்னி மருங்கிற் சிறுமியாய்த்
துன்னி வளர்தி துதைந்து. (ஙக)

ஐந்தியாண் டெல்லை யகலநினக் கெம்மையுன்னிப்
புந்தியா ரன்பிற் புரிதிதவம்—வந்தியா
மன்னதுகண் டுன்னைமணந் தாரணத்தி னிவ்வரையிற்
பின்னளித்து மென்றான் பிரான். (ஙஉ)

இறைவனுரை கேளா விறைஞ்சிவிடை பெற்றுத்
துறையிலண்மிக் காளிந்தி சார்ந்து—மறைமூல
கோர்பணில மாகி நிமலியரற் சிந்தனைசெய்
கோர்பதும மேலிருந்தா ளாற்று. (ஙங)

[illegible]க்குபடலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா கசஉ.

# காளிந்திப்படலம்.

---

உலகளந்த நீல வுருமால் கிடப்ப
விலகுமவன் செங்கைவளை யேய்க்கு—நிலவி
யலம்புரியா மார்யமுனை யாற்றம் புயமேல்
வலம்புரியா மாதுமையார் மாண்பு. (க)

உறும்பூ தரத்துற் றொளிதீருநீர் மைசான்
றெறும்பூ ரொழுக்கமே யேய்க்கு—மிரும்பூதாய்ச்
சீர்த்துவரு முத்துந் திரைமாக் கரைமோதி
யார்த்துவருங் காளிந்தி யாறு. (உ)

நீலன்ன வாய்ந்த நிறமுடைய தேனுந்தீம்
பாலன்ன வின்சுவையே பாலித்து—மேலன்றி
யுள்ளன் புடைய வுயர்சாக் கியரெனலா
மெள்ளலிலாச் சீர்யமுனை யாறு. (ந.)

நானிலமன் வேந்தர்க ணல்குபொருள் கைக்கொண்டு
நீனிலவு கஞ்சுகன்முந் நீரிறைபால்—வானற்
றிறைகொண்டு செல்வதுபோற் சீர்கொள் யமுனை
யறைகொண்டு செல்லுமே யாங்கு. (ச)

நீல நிறங்கொண்டு நீளிருகை வால்வளைபெய்
தால மெனவார்த் தரியூர்தந்—தேல
வருகையாற் காளிதனை மானும் யமுனை
பொருகையார் தூய புனல். (ரு)

கருமையினன் கேகிக் கவின்மணிவான் சங்க
மருமலரார் தாரு மருங்குற்—றொருமையி
னும்பர்கொண் டாட வொழுகலாற் காளிந்தி
யம்புனல்விண் கோவையொக்கு மாம். (சு)

இன்னதன்மை யாம்யமுனை யாற்றின்கண் ணாகமதி
பின்னுமக நீராட வேண்டியே—யந்நிலத்தா
ரங்குறவம் தோர்ந்துதக்க ஞர்வேத வல்லிதனை
மங்கையரோ டெய்த்தனன்முன் வாய்ந்து. (எ)

1மின்னவிர்பொற் கோயினின் று வேதனற வோராசி
பன்ன விமையோர் பரசநதி—முன்னுறப்போ
யாடிவரும் போதுதக்க ஞர்கமலத் தோர்பணில
மாடீவரக் கண்டான் மகிழ்ந்து. (அ)

செய்தவத்தாற் றக்கனுறு செங்கமலச் சங்கமது
கைதனையுய்த் தேயெடுக்குங் காற்பெண்மை—யெய்தொரு
மின்குழவி யாதலுமே விம்மிதமுற் றீசனருண்
மண்கவுரி யென்றுணர்ந்தான் மற்று.

வானவரை நீங்கிப்போய் மன்னதியின் பான்முனங்கன்
மானனையா ரோடெய்த்த மாமதிசே—ரானனத்தன்
பன்னிகரத் தீந்தான் பரையாங் குழவிதனைத்
தன்னிகரற் றோங்குதக்கன் சார்ந்து. (௧௦)

ஏந்து குழவி யினைத்தழீஇக் கொண்டுமகிழ்ந்
தாந்தண் குயத்திழிபா லார்த்திநங்கை—காந்தளங்கைச்
சூர்மகளிர் போற்றிசைப்பத் தொல்லிருக்கை சென்றனன்போய்க்
கூர்மணியல் செய்திருந்தான் கோன். (௧௧)

காளிந்திப்படலம் முற்றிற்று.

ஆ. திருவெண்பா ௯௱௪.

---

# உமைதவம்புரி படலம்.

---

வேதவல்லி கொண்டுதன்னோர் வீட்டிற் குறுகியிரு
காத லொடுவளர்க்கக் கௌரிதான்—சீதமதி
வண்குழவி போற்றவழ்ந்து மண்முத்திற் பற்றோன்ற
வெண்குலவைந் தாண்டுற்றா ளேய்ந்து. (௧)

ஆறான வாண்டெய்த வம்மை யீரற்குறியா
மாறாம னேற்பவென மன்னுளுன்னிப்—பேறாகப்
பெற்றவரை நோக்கிவாற் பேணித் தவம்புரிவா
னுற்றமனை செய்தியென்றா ளோர்ந்து. (௨)

நன்றென் றவர்மகிழ்ந்து நன்னகர்க்கோர் சார்மாடந்
துன்றவமைத் தங்கட் டுடியிடையை—யொன்றிருவர்
போற்றியுச்சி மோந்துயிர்த்துப் பொன்னனையார் மேவநின்றேன்
பாற்றுகவென் றேகுவித்தா ராண்டு. (௩)

அன்னையவர் பால்விடைபெற் றங்கேக வேதவல்லி
மன்னனனி நோக்கியரன் மாட்டுணர்பண்—பென்னையென
வீதனைய ணீர்மையென யாவு மெடுத்துரைத்தா
ளேதனையு ளோகையுற்றா ளோர்ந்து. (௪)

இருகுரவ ரேவலினு லேர்மகளிர் சூழ்த
மருநுறவே மாடத் தமைத்தோ—ளொருகவுரி
போந்துசிவ னுமமுன்னிப் போத நியமமுற்றன்
பாந்தவஞ்செய் கின்றா ளமர்ந்து. (௫)

அந்தவஞ்செய் காலையுமைக் காண்டா நிரண்டுசென்ற
வெந்தையது கண்டான வேந்திழையைச்—சிந்தைசெயா
மன்மலையி னின்று மறையொழுக்கம் பூண்டமூண்ட
நன்மறையோன் போல்வந்தா னன்கு. (௬)

செக்கர் நிறச்சடையான் சீர்த்தக்க மாபுரத்திற்
புக்கமலை நோற்கும் புரையுற்று—மைக்குழலார்
முன்னிவருங் காப்படைய முந்தனையார் தாழவம்மைக்
கென்னிலைசொல் லென்றுநின்றா னேய்ந்து. (௭)

நிற்கக் கடைகாப்போர் நேரிழைபாற் சில்லோர்போய்ப்
பொற்கமலந் தாழ்ந்தீண்டோர் பூசுரனு—நற்றவத்தோ
னுன்பா லுறவிடுத்தா னுற்றதிலை தென்னவனாங்
ன்பா லழைமினென்றா ளாங்கு. (௮)

அன்னார்தாழ்ந் தேபோ யடிகளெம்மோய் நின்னைவரச்
சொன்னா ரெனமறையோன் சூழ்ந்துசெல—முன்னாகி
யாசையுடை யார்பானன் காசையுடை யாரெனத்தாழ்ந்
தீசையவற் பூசித்தா ளேய்ந்து. (௯)

நேயமோ டர்ச்சித்து நின்றவனைப் பொற்றொடியான்
மேயினதா மொன்றை விழைந்தருள்வை—யாயினது
சொற்றுமென வெற்கிசைந்த சொல்லுதியே னிற்கதுவா
முற்றுமாத்தி யென்றா ளுகந்து. (௧௦)

உன்னை மணத்தினெய்த வுற்றே னதுபுரிதி
பின்னையொன்றும் பேசலெனப் பெம்மான்கா—தன்னைபொத்தி
சீற்றமுற்றிவ் வாறுரைத்த தென்சிவனை வேட்டிடுவா
னேற்றனனா னென்றா ளுனித்து. (௧௧)

இன்னதன்மை யானென் றெவருமென் றுமெண்ணரியா
னின்னை வதுவையா னேர்பரிது—கன்னி
வருந்தலென வாரானேன் மன்றவமே யாற்றித்
திருந்துயிரை நீப்பலென்றா டேர்ந்து. (௧௨)

போதிநீ யென்னப் புகன்று சிலகடிய
டீதொருபாலேக வானவண்முன்—காதலுட
னேதெவருங் காணா தொருதன் கவினுரு
மாதியுநக் காட்டினா னங்கு. (௧௩)

ஆதியுருக் காட்ட வமலை நடுநடுங்கி
யேதிலரென் றெண்ணியிகழ்ந் தேதனென்னச்—சோதியடி
யோதுளங்க ளிற்றிறைஞ்ச வுன்னியற்கை நன்றுநன்று
நீதுளங்க லென்றா னினைந்து. (௧௪)

நாதன் றனையிறைஞ்சி நங்கை மருங்கினின்ற
மாதர் தமைநோக்கான் மற்றுமெண்ணு—ளாதிகழல்
போற்றிநிற்ப வந்தணன்மால் பூட்டினனே யென்னவைய
மேற்றினைவ ரென்கொலிஃ தென்று. (௧௫)

சிலதியர்க்குட் சில்லசொல்லை சென்றுதக்கன் றேமுற்
றிலகுன் மகணிலைமை யீதென்—றுலவினைத்துஞ்
சாற்றவவ னுள்ளுணர்ந்து சம்புவெனத் தேர்ந்துமண
மாற்றியவற் கீவனென்றா னங்கு. (௧௬)

உமைதவம்புரிபடலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா ௩௯௦.

---

# திருமணப்படலம்.

---

தொன்மையிற்கல் யாணத் தொழினடத்த வாய்வழிநா
ளன்மைதரு மோரையுமந் நாளினன்ன—வென்மகளை
யண்ணலுக்கின் றீவனென வாசொற் றரைவிடுத்தான்
விண்ணவர்கள் செல்ல விரைந்து. (௧)

தன்னகர்பொற் பாரச் சமைப்பித்தொண் கோயிற்றனைப்
பொன்னகர்நாண் கொள்ளப் புனைவித்து—மன்னகரி
னீங்கியவண் மாதவஞ்செய் நேரிழைபான் மேவடிக
ளோங்கியதாள் போற்றினா னுற்று. (௨)

அண்ணனீ மற்றிங் கணைந்துமண வேட்கையாற்
பெண்ணரசி நோற்றனளென் பேர்நகரி—னண்ணுதி
யென்னவினை நன்றென் றெழுந்துசென்றோர் நங்கையொடு
மன்னன் மனையுற்றான் வாய்ந்து. (௩)

அங்கணையு முன்ன ரணங்கனையா ரெவ்வகைய
[illegible]ங்கலங்க[illegible]ந்திகின்றார் மற்றவைகண்—டெங்களத்தன்
[illegible]ற்றிரு[illegible]ழ்போய்ப் பொன்மணிசெய் பீடிகைமேல்
[illegible]ற்றிருந்தா னாவலக. (௪)

அப்போது வேதவல்லி யாரணங்கைக் கண்டுபுல்லி
யொப்போவி றன்மனைதந் தொண்டொடியின்—மைப்போன்ற
வோதியவிர் பின்னலைநீத் தொண்ணறுநெய் பூசிநபக்
கோதிலற லாட்டினாள் கூர்ந்து. (௫)

சூட்டினாள் பூந்தொடையல் சூழ்ந்தரையிற் பொற்கலைகள்
பூட்டினாள் பலகலன்கள் பூவையமன்—சூட்டினான்
முன்னருய்ப்ப வன்னையின்போய் மொய்வரன்பான் மேவுமெல்லைப்
பன்னியங்க ளார்த்த பல. (௬)

தூதருரை கேட்டுணர்ந்து துன்னெனப்போய் மான்முதலோர்
நாதனடி தாழ்ந்தார் நனியாழிற்—கீதங்கள்
கின்னரர்கள் பாடினார் கேழ்கிளர்பூ மாவடிதூய்
மன்னரமின் னார்புகன்றார் வாழ்த்து. (௭)

தக்கனாண் டொல்லைமறை சாற்றிவல்லி நீர்வாக்கப்
புக்கவரன் றாள்விளக்கிப் பூசித்து—மைக்கனத்தோன்
பொற்கரமா தங்கைநல்கப் போற்றுதியிம் மானையெனா
நற்கடனீ ரோடளித்தா னன்கு. (௮)

ஆர்த்த மதின்முதல்வன் மொய்குழலாள் சீரணிகண்
டார்த்தனர்கள் யாரு மயன்வேள்வி—சீர்த்திடுமா
றாற்றுஞ் சடங்குமுற்ற வண்டரெலாம் போற்றவன்பார்
சாற்று முருவொளித்தான் சம்பு. (௯)

மறைந்தா னிருத்தலுமே மாமகிணைற் காணா
துறந்தா ளுவகை துயர்ந்தே—யறந்தான்
வளர்க்குமன்னை மாமுதலோர் மன்சூழன் மேவித்
துளக்கமுற்று விம்மினாள் சோர்ந்து. (௧௦)

புரந்தரன்மா லாதி புலவரமர் வேள்வி
யிருந்தனன்மா மாலையிற்றுண் ணென்னக்—கரந்தனனே
யெய்தியெற்கொ ளேந்தலையா னேய்கைதவ னென்கைநவை
செய்தவமே யோரிற் சிறிது. (௧௧)

என்றுபல பன்னி யிரங்குமைசெய் கைநோக்கிப்
பொன்றனைநேர் வேதவல்லி புல்லிமனங்—கன்றலுன்ற
னாயகனை மேவுநெறி நற்றவமஃ தாற்றுகென
நேயமட வார்நவில்வார் நேர்ந்து. (௧௨)

அன்னையிது கேளீ ணகிலமுற்று நின்னுருவா
நின்னையென்று நீங்காத நின்கணவன்—றன்னை
மறைக்குமறை யுண்டோது மன்னாட்டா ரோர்வார்
கறைக்கடுவேற் கண்ணாய் கழறு. (௧௩)

மனம்வாக்குக் கெட்டா மகிணைன் றனைநின்
றனைநோக்க முற்றோமார் தஞ்ச—மெனநவின்று
போக்கலுற்றோந் தீமை புரைதீர்ந்தோம் போதமுளந்
தேக்கலுற்றோ முய்ந்தோம்யாந் தேர்ந்து. (௧௪)

என்றியம்பி வாழ்த்த விறைவியவர்க் கண்டருள்செய்
தொன்று மவரை யொருவியே—மன்றவமே
செய்வான் றிருமாடஞ் சென்றா ளரிமுதலோ
ருய்வா னதுகண்டா ருற்று. (௧௫)

எங்கு மறைந்தனளோ வேந்தலென விம்மிதமுற்
றங்குளார் மாழ்கி யழுங்கினார்—பொங்குதக்கன்
சீற்ற மொடுமுறுவல் செய்தியாஞ் செய்வதுவை
யாற்ற வழகிதென்றா னோர்த்து. (௧௬)

புனையுங் கடிவினையைப் புன்மையே யாக்கி
யெனையும் பழியி லிருத்தித்—தனையொளித்தா
னத்தனனை யாருமிலா னோர்பொதுவீ டாநடிக்கும்
பித்தனியல் போமோ பிழைத்து. (௧௭)

தீய தவனியற்கை தேர்ந்தனளோ வென்றுளைந்தார்த்
தேயவரி யாதியரை யேகவிட்டுத்—தூயன்செய்
மாயமதை யுன்னியுன்னி வைகினான் மாமனோ
மேயதக்க னென்போன் வெகுண்டு. (௧௮)

சீரார் கவுரிமுன்னைச் சேண்மா ளிகையிற்போந்
தோராய மோடமர்ந்தங் கேநோற்க—நாராய
வீசனறு நீறுமணி யேய்ந்தசின்னம் பூண்டுபின்னர்
நேசவுருக் காட்டிவந்தா னோர். (௧௯)

அந்தரிகண் ணுற்றெறங்கைதக் கன்பரிவ ரென்னவுன்னிப்
புந்தி மகிழ்ந்திறைஞ்சிப் போற்றுமெல்லை—நந்திமிசைப்
பெண்டா னிடமிலதோர் பீடுருவி னித்தனுற்றான்
கண்டாள் கவுரி களித்து. (௨௦)

பன்முறைவீழ்ந் தேத்திப் பரைபுன்மை நீக்கவந்தாய்
சின்மயனே யென்னவெதிர் சென்றுரைப்ப—மின்மருங்கு
லன்னையைக்கூ யங்கையெடா வார்விடைமேல் வைத்தமருந்
தன்னவரைக் கேகினான் சம்பு. (௨௧)

[illegible]ரிருந்த மாதர்போய்த் தக்கனவை முன்னாகி
[illegible]ருந்த வே[illegible]யா னீத்தோன்போ—லிருந்த
[illegible]மொழி [illegible]க்கை கைதவமோ ராமகளைக்
[illegible]செல்வா னீ[illegible]கோ. (௨௨)

அன்னார் மொழிகேட் டழலினெய்பெய் தென்னவெகுண்
டுன்னா விருக்கவும்ப ருற்றிறைஞ்சிப்—பன்னா
மருங்குறவே தக்கன் வரனொழுக்கம் யாவு
மொருங்குறவே சொன்னா னுணர்ந்து. (௨௩)

இங்கிதுசெய் கிற்பாரா ரென்னாணை யுங்கடந்தான்
சங்கரனே லீதுசெய்யத் தக்கதோ—வெங்கு
மிரந்தான் சிவனென்னு மேதகிற்க லிங்கன்
கரந்தானென் சொல்விழுக்கே காண். (௨௪)

பண்டொருபெண் வேட்டவரிப் பான்மைசெய்தோ ரேவரையுங்
கண்டிலனா னென்னக் கரைந்துபல—வண்டரைத்த
மூர்சென் றிடவேவி யுள்வெகுண்டெம் மீசனையே
யோர்கிலனென் ணீர்மைகொண்டா னாங்கு. (௨௫)

திருமணப்படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா ௧௬௫.

---

# தக்கன்கயிலைசெல் படலம்.

---

செம்மா தவத்தாற் றிருக்கொடக்கன் மாத்தருக்குற்
றெம்மானை யெண்ணா னிழப்பனுயிர்—நம்மாலிக்
கீறுவரும் போலுமவ னேவல் புரிகின்றோங்
கூறுவதெ னென்பரண்டர் கூர்ந்து. (௧)

இனித்தக் கனையெண் ணிலமாயிற் சீற்ற
மனித்தக்க வான்பதமு மாற்று—மெனத்தெளிந்து
தீயன் கயிலைசெலத் தேற்றி னரற்காணி
லாயநஞ்சீர் நிற்குமென்றா ராங்கு. (௨)

வேதன் முதலோர் விளம்புதக்கன் பான்மேவி
மாதையரா னோடு மறத்திகொலோ—யாதினியாங்
குற்றமெண்ணிற் சுற்ற மில்லை கூர்ந்துனிலை யேல்வசைதான்
மற்றுனையே சூழுமென்றார் வந்து. (௩)

அன்னா ருரைநாடி யங்கவரை மேவநல்கிப்
பொன்னார் கயிலைவரை போய்ச்சிகரி—முன்னாகச்
சாருகையிற் றக்கற் றடுத்தா ரவண்காவ
லாருமெறும்ப் பூத ரடுத்து.

வெல்கணங்க டம்மை வெகுண்டுதக்கன் யான்முன்னர்
நல்குகின்ற காதனங்கை நாயகனோ—டொல்கி
யடுக்கின்ற தன்மையிவ ளாய்ந்தறிய னீவிர்
தடுக்கின்றதென் கொலென்றான் சார்ந்து. (௫)

அன்னமொழி கேளா வழன்றே யவற்பாராப்
பொன்னவிரும் வாயினனி போற்றுவோர்—முன்னநீ
தெவ்வா மெனவிகழ்ந்தாய் சின்மயனைப் புன்மையனே
யெவ்வா றணைகின்றா யீண்டு. (௬)

திரிபுரத்தார் தீய செயினுமவ ரீசன்
பரிபுரத்தா ளன்புடையார் பன்னும்—புரிவிலாய்
தக்கசெல்வந் தந்த சயம்பு செயன்மறந்தாய்
தக்கநீ மாயையுற்றாய் தான். (௭)

ஈச னிணைத்தா ளிறைஞ்சாத நின்னோடு
பேசுதலு மாபாவம் பேதாய்நீ—நேசமொடு
பார்ப்பதிகேண் முன்போய்ப் பணிவையெனி னிற்றியன்றேற்
பார்ப்பதிமுன் போதியென்றார் பார்த்து. (௮)

எல்லார்பொன் வாயி லிகந்து சினந்துவட்கி
வல்லா னுறுகா வலர்கேண்மின்—சொல்லாரு
மீசன் றனையிறைஞ்சேன் யானனையா னென்மருகன்
பேசயன்மா லேவல்செய்வோர் பேர்ந்து. (௯)

நின்றா ரெவருமென்ற னோன்ப ராருலகம்
பின்றாது போற்றிறைநான் பேர்தக்க—னென்றாகி
மன்றாடு கின்றவுங்கள் வன்பித் தனைமேவி
யின்றா விறைஞ்சுகின்றேன் யான். (௧௦)

நில்லிங் கெனத்தடைசெய் நீர்மையும தோமருக
னெல்லுஞ் சிறுமி யுரைக்குமா—றல்லதென்கொ
லிங்கெற்குத் தொண்டர்நீ ரேலும் படியாற்ற
லுங்கட் குறுதியன்றோ வூங்கு. (௧௧)

தேற்றாதிவ் வாறுசெய்நுந் தேவையெவருமே
போற்றா திறைஞ்சிப் புகழ்ந்துசீர்—சாற்றா
திகழ்புரிபான் மைசமைப்பே னென்னு வினைதான்
மிகவுய்ப்பப் போயினான் மீண்டு.

தன்பதியை யெய்திச் சரோருகன்முற் றேவரைப்பார்த்
தென்மகளோ டீச னிவர்வாயில்—வன்புடையார்
தம்மா லெமைத்தடுத்தார் தாழ்வோடு நாணுமுற்றே
னம்மாமற் றேதினென்னு மாய்ந்து.

நின்றானன் றென்னையென் றுக்கனையு மாதையுநீ
யின்றுமுன் றுஞென் றுந்தாழ்ந் தேத்துதிலை—யன்றி
மதித்திரல்லி மன்னை மறுத்திரே நும்மைக்
கொதித்துரிமை கொள்வனென்றான் கூர்ந்து. (கச)

கறுத்தினைசொற் றானைக் கடவுளர்க ளோக்கி
வெறுத்தெமைச்சொற் றாய்போலு மேலு—மறுத்தனமோ
நின்னைவ லுன்பணியி னிற்றுஞ் செறுத்திடலென்
றன்னோர் நகர்சென்றா ருற்று. (கரு)

தக்கன் கயிலைசெல் படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா உகO.

---

# பிரமயாகப் படலம்.

---

இவ்வணம்பன் றூட்பணிசெய் தேவருமே யஞ்சிநிற்பச்
செவ்வணவீ மேலோன் சிவனருளா—லவ்வயினோர்
வேள்விசெய்து தக்கனென்னம் வீத்தவிமுன் மாய்வுறினு
மான்விமலர்க் கீவனென்றா ணண்டு. (க)

இனையபுகன் றேவ லினிது புரியுந்
தனையரைக்கூய் மான்முதலாய்ச் சாற்று—மனைவருமே
யிங்கவிப்பால் கொள்ளவழைத் திம்மெனநீர் தம்மினெனு
வங்கயிலைக் குற்றா னயன். (உ)

கயிலைசென்று கோயிலண்மிக் கண்ணுதலா டாழச்
செயலதென்கொல் செப்பென்னத் திதி—லயனடியேன்
வான்மகமொன் றாற்றுவனீ வந்தருள்செய் கென்னநந்தி
தான்வருவன் போதியென்றான் சம்பு. (ங)

தானுவின்றா டாழ்ந்தேகுந் தாதைதக்கன் சாரணியான்
மானுறவோர் வேள்வி மகிழ்ந்துசெய்வன்—சேணுளார்
நற்றவரோ டார்கவென நன்றாமுன்போய்ச் செய்தியென்றான்
மற்றவன்போய்ச் செய்தான் மகம் (ச)

அன்னதுதேர்ந் தக்கனத்தி லாழியன்வேந் தண்டரெலா
முன்னுதக்கன் முன்னுறலு முற்றவரோ—டென்னிறைக்கு
முந்தையவி கீப்பான் முயன்று மனோவதிபோய்த்
தந்தைபுரி வேள்வியுற்றான் றான். (ரு)

தக்கனும்ப ரோடுவரத் தாதையெழுந் தாதிசொலி
மிக்கவன்பி ஞேர்தவிசின் மேலிருத்திச்—சக்கிரிதாள்
கைதொழுதோர் மாண்டவிசின் கண்ணிருத்தி மற்றவர்க்குஞ்
செய்தவிசு தந்திருந்தான் றேர்ந்து. (சு)

அந்தமிலா னந்தியைப்பார்த் தம்புயத்தோன் வேள்வியிற்போய்
நந்தமவிர்ப் பாகமுற்று நண்ணுகென—வந்தனைசெய்
தன்னூறு கோடி யுறுகணங்கள் சூழ்தரப்போய்
மன்னூழி னங்கணுற்றான் வாய்ந்து. (எ)

வந்தடையு நந்திதனை வந்தனைசெய் தந்திவந்தோ
னந்தவிசு நல்கியுற்றோர்க் காசனமேர்—தந்தமக
மாற்ற வெகுண்டுதக்க னக்கிரிவாழ் நக்கனுக்கா
சாற்றிவன்கொ லென்றுநக்கான் றான். (அ)

நாரணன்முற் றேவருமா நங்கைமுதன் மங்கையருஞ்
சீரணவு மாதவருஞ் சேர்ந்தமர—வாரணன்செய்
வேள்வியின்பாற் காரியுண்டோன் மேவுகணத் தோடவன்ற
ஞள்வதித றக்கதென்று ஞங்கு. (கூ)

நந்தியொடு சார்ந்தவரை நண்ணவிங்குக் கூவினரைச்
சிந்தைதனிற் றேர்ந்தயனைச் சீறிமக—முந்துசெயல்
பேதையிடத் தார்க்குரைத்தாய் போர்நந்தி யைப்பணிந்தாய்
தாதையென்றே நின்னைவிட்டேன் சார்ந்து. (க0)

வெஞ்சுடலை யாடிபித்தன் வெவ்வெளன் பணிபவனு
நஞ்சுண்ட வற்கவிமு னல்கினு—யஞ்சனே
யின்றுமுத லில்லைமுன்மாற் கீதிபின்மற் றோர்க்குமறை
மன்றனைமே லென்னன் மறு. (கக)

இன்னதுனக் கேதுணிபா மென்ற றுணர்ந்துநந்தி
கன்னமறைத் தஞ்சக் கரநாம—முன்னியே
யின்றிவன்சொற் கேட்கவுய்த்தா யெம்பிரா னென்னையெனுத்
துன்றுதன்பின் மூழ்கினுன் சோர்ந்து. (கஉ)

நம்ப னருணீரா னந்திசின மெய்தநொந்தா
ரும்ப ரசைந்தவுயிர் யாவு—மம்மையைத்தன்
சீரிறையு மெண்கிலனைச் சேர்ந்துட்கி ஞேமென்றார்
நாரணன்முற் றேவர் நலிந்து. (கங)

[illegible] தமய[illegible] யெறுழ்த்தக் கனைநோக்கி
[illegible] தாய்துணிப்பே—ஞதனரு
[illegible] றன[illegible] யயவினி யென்னுரையே
[illegible] (கச)

இவையயன்சே யஞ்ச விசைத்து மகத்தி
லவியரற்கில் லென்று யதற்கேய்—பவன்ன்றே
லென்னருளர் மால்கொண்டா யீசனன்றி வேள்விசெய்வோர்
சென்னியற வென்றான் சினந்து. (௧௫)

இன்னதோர் சாபமியம்பியும்பின் றக்கனிற்கு
மன்னுசெல்வ மாய்க வரனையிகழ்—புன்னின்வா
யார்தலைபோய் வேறுதலை யாகநினைச் சார்ந்தவருஞ்
சூர்தன்னுன் மூழ்க துயர். (௧௬)

என்றினைய தோதி யிருகணங்கள் சூழ்தரப்போய்க்
குன்றிடைவாழ் வார்க்கிதனைக் கூறிநந்தி—சென்றமர்ந்தா
னன்னதோர் மன்றத் தமரமா ரிசைதென்கொ
லென்னமனஞ் சோர்ந்தா ரினைந்து. (௧௭)

நந்தி யடிக ணவின்றவுரை தேர்ந்தேங்கி
மைந்த னுரையு மறுக்கவஞ்சி—யுர்திவந்தோன்
வன்றுயரின் மூழ்கி மகஞ்செய் திலன்றக்க
னென்று முரைத்திலா னோர்ந்து. (௧௮)

சினங்கவற்சி யின்னல் சிறிதச்சந் தக்கன்
மனங்கொண் டமரொடு மன்னூர்—தனிலடைந்தா
னத்தன் மகங்குலைய வஞ்சியயர்ந் தோர்ந்திமையோர்
தத்தநகர் போயினார் தாம்.  (௧௯)

பிரமயாகப் படலம் முற்றிற்று.

ஆ_ திருவெண்பா உ௨௬.

---

# சாவஸசெய் படலம்.

———:0:———

அந்நான்முற் பன்னுளா வவ்வேள்வி யோம்புகிலர்
மன்னு முனிவரும்பர் மாமறையோர்—முன்னுமா
தக்கனோர் வைகறம்பாற் சார்சுரரை நோக்கிமகந்
தொக்கநா ளாற்றலையென் சூழ்ந்து. (௧)

வெய்யனுரை கேட்டிமையோர் வேதன்செய் வேள்வியின்க
ணையனவி கொள்ள வளியலென்றி—செய்யநந்தி
கூற்றும்வெஞ் சாபமிந்தக் கொள்கையுணர்ந் தேயாங்க
ளாற்று திருத்துமென்று ராங்கு.

அன்றுநந்தி யென்பா னறைகின்ற சாபத்தா
லின்றளவு மஞ்சிமக மேய்ந்தியற்று—தோன்றிநின்றீர்
முன்னாகச் செய்வனென்று மூழ்கிவிடு மேனிவீர்
பின்னாகச் செய்மினென்றான் பேர்ந்து.

முன்னோர் மகங் முடித்தநெறி யையவென
வன்னோரைப் போமினென வாங்கறைந்து—பின்னோர்
சிறுவிதிமு னூழின் பிறந்தொருநாள் வேள்வி
யுறுதியிற்செய் வானினைந்தா னுற்று. (௪)

தொட்டா மனுமயனைத் தொன்மகா முன்னுதவிக்
கட்டா மரையனைப்போற் கற்றவற்கூய்—முட்டாமன்
மேலை விதிப்படியோர் வேள்விசெய்வ னுருமுறச்
சாலை விதித்தியென்றான் சார்ந்து. (௫)

நின்றனவே தாழ்ந்துகங்கை நண்பாற் கனகலமென்
றொன்றுகவின் றன்றுவைப்பி லொண்புனைவ—னின்றிறத்தி
லாயிரமா யோசனையே யாம்பரப்பு நீளமுமாத்
தூயவொரு சாலைகண்டான் சூழ்ந்து. (௬)

நாற்றிசையுங் கோபுரங்க ணன்குதவிச் சூழ்மதிலி
லேற்றிடுமோ ஞாயி லியற்றியா—னுற்றியுள்ளே
யார வணங்கினா ராரிடஞ்செய் தாவிபொழில்
சீரமாச் செய்தான் றெரிந்து. (௭)

அப்பண் பமைத்தமா ராதியர்வந் தேவிழைந்த
துய்ப்பதற்காந் தீம்புழுக்க லென்னிடவோர்—வைப்பியற்றி
யந்தணர்முன் யாருமுற்றா ணூறவெண்ணில் சாலையெழி
லிந்திரனூர் போற்சமைத்தா னேய்ந்து. (௮)

மேவினர்கொள் வான்மணங்கூர் மென்பா ளிதநரந்தம்
வீவிரையார் மான்மதமொள் வெள்ளடைபா—காவனமன்
சாலையமைத் தாடையொண்பூண் சார்நிதியின் குப்பைவைப்புண்
மாலையுற வீந்தான் வகுத்து. (௯)

ஏர்கொ ணகர்நடுவி லேய்நூறி யோசனையார்
சீர்கொண் மகச்சாலை செய்துவன்னி—சேர்தருநூல்
கூறியலின் மூவகைய குண்டமொடு வேதிகைகள்
வேறுளவெ லாஞ்சமைத்தான் வேட்டு. (௧௦)

மேலொடுகீழ் சார்நிதியின் மேன்மணிக ளாற்குயிற்றிச்
சோலைகயம் புள்ளமரர் சூழுருச்செய்—தேலயன்மா
லாசையுளா ரந்தரத்தா ரையரொக்க றக்கனுறத்
தேசையிருக் கைதந்தான் றேர்ந்து. (௧௧)

தக்கன் றனைத்தாழ்ந்தன் சாலை முடிந்தனகீ
புக்கனைகாண் கென்னப் புனைவணறிந்—தக்கணமே
நீங்கின் முனிவரர்க்கூய்த் தீவேள்வி யாற்றமுறை
யாங்கன் வலித்துரைப்பா னாய்ந்து. (கஉ)

வண்மை யுறுதருவின் மன்சமிதை சாகையிடை
நண்பரிதி கண்மதலை நாண்பறப்பை—யெண்பலவா
மேவரணி நன்முதிரை மேவுவன வுய்த்திரா
வேவினன்சீர்த் தக்க னினிது. (கங)

ஆவை நிதியை யருமணியை யைந்தருவாங்
காவை யழைத்துமகங் காணியவே—மவைப்போர்
மாமறையோர் தாம்வருவார் வானுணவோ டேனையவு
மீமென் றுரைத்தா னிறை. (கச)

விடைகொடுபோ யான்முதலா மேவினவை வெவ்வே
றடையப் பொருள்க ளளித்த—மிடைகிளை
ராமுனிவ ரோர்முப்ப தாயிரரைச் சொன்றிமற்று
மீமினென்று ரொருமுண்ணா வேய்ந்து. (கரு)

மற்றவர்க்கு மேவிருசீர் மன்மா தலத்தோரை
யுற்றனர்தா மேவருமே யுண்டியன்றிச்—சொற்றவெலா
மீமெனவே யேவியய னீன்றமக னொருமுறத்
தூமகஞ்செய் வான்விடுப்பான் றாது. (கசு)

நக்கன் றனையலதோர் நாசரைய ராதியரைத்
திக்கொடுவான் பார்யாண்டுஞ் சென்றுகூ—யுய்க்குதிரென்
றுய்த்து முனம்வரித்தா ரோர்மகஞ்செய் வான்யாவு
முய்த்திரென்று னாழி னுகர்ந்து. (கஎ)

வரித்தாரிற் பல்லோர் மகச்சாலை தன்னுட்
டிருத்தியமா வேதியின்வாய்ச் சேர்த்து—நிரைத்தனர்பற்
பல்பண்ட மாங்கணித்தோர் பன்மதலை நாட்டிநிரை
மல்கிடையாத் தர்ச்சித்தார் வாய்ந்து (கஅ)

விடைகொடுபோந் தூதர் விரைவொடுவெவ் வேறு
நடைதந் தவனியுளார் நாக—மிடையமரர்
செங்கதிர்முற் கோணு திசைமுகன்மா லாதியர்க்கு
மங்கங் கடைந்தறைந்தா ராய்ந்து. (ககூ)

மாலம் புயன்மகவான் வானவர்கண் மாதவர்கண்
மேலமர்கோ ணவ்சித்தர் விஞ்சையரெண்—பாலகர்மு
னேவருங்க மாதரொடு மேய்ந்துவரக் கண்டிறைமு
னேவருங்கே ளோடுசென்று னேர்ந்து. (உ0)

எதிர்கொண் டெப்புற் றிருவரையுங் காணு
முதிரன்பிற் புல்லிமுறை முன்கோ—பதிமுதலோர்
தம்மையெலா நோக்கிமகச் சாலையின்கண் மேவினனை
யிம்மெனவே கொண்டுபுக்கா னேய்ந்து.

மாலயனை முன்னர் மணியா சனத்திருத்திக்
கோலமண்ணின் ஞோர்முதலாக் கூடுறைவர்க்கு—மேலவே
நற்றவிசு நல்கி நடுவிருந்தான் றக்கன்சீ
ருற்றமறை யார்ப்ப வுகந்து. (உஉ)

திருவும் புவிமகளுஞ் செங்கமல மேயோன
மருவு மகளிருமொள் வாக்மீ—னுருவினருஞ்
சுந்தரியுஞ் சூரினருஞ் சூழெழுவரும் வேதவல்லி
மந்திரம்போய் வீற்றிருந்தார் வாய்ந்து. (உங)

மாமலரோன் மைந்தன் மகாரடி யாருமுறாத்
தாமருந்தித் தக்கன்சபைசாரத்—தோமிலொற்றர்
போந்தவன்று டாழ்ந்துநிற்பப் போய்விளித்தோர் தம்மிலுறு
ராந்தகைய ராரென்று ருங்கு. (உச)

கும்பன் பராசரன்சீர் கொள்ளத் திரிவசிட்ட
னம்பிருகு நற்றதீசி யூர்சனகன்—பம்பினைய
ரோலுமகந் தன்னையிகழ்ந் நீண்டு வருகிலார்
போலுமென்றார் தூதர் புரிந்து. (உரு)

மற்றதுதான் கூற மலரோன் மகன்கேளா
விற்றிதுசெய் தார்யா ரிவர்தரமோ—நெற்றியிற்க
ணுற்றவர்க்கு நேய முடையரொரு யாருமுட்கச்
செற்றமொடு நக்கான் றெரிந்து. (உசு)

சாலைசெய்படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா உருரு.

---

# ததீசிப்படலம்.

---

அன்னவம யத்தரியோ டாண்டமர்செய் தாங்குவென்ற
பன்னருந்த தீசியென்பான் பார்ப்பதியா—மின்னிறைக்கா
வரிடர்க டம்முடனே யவ்வேள்விச் சாலையுறக்
கூரிடராழ் வான்கண்டான் கூர்ந்து. (க)

ஆகு மாற்குரிய னல்லன் மகங்காண்பா
னேகினனெனற் கஞ்சி யெனநினைந்து—ளோகையெய்தி
மீண்டுவரு கென்ன விருந்தவிசு நல்கவுற்றான்
மாண்டுறவோர் மேவ மருங்கு. (௨)

தக்கன் றனைநோக்கித் தாபதர்கோ னெம்மைநீ
யெக்கரும நாடி யிவண்விளித்த—தக்கருமம்
யாவுமறை யென்னநக்க னென்மகளை வேட்டொளித்தே
மேவுவரை யேகினான் மேல். (௩)

போயபின்றன் மாயை புரிந்தான் மகட்கவரை
யாயவவ னாற்றே னதுதேர்ந்து—மேயகணந்
தம்மைவிடுத் தென்னைத் தடுக்குதிரா லென்னவன்னார்
வெம்மைகொடு நிற்றியென்றார் வேர்த்து. (௪)

திங்கணகர் சார்ந்தகலத் தாழ்குழலும் வந்திலாண்
மங்கையென்ன செய்வளவன் மாயையாற்—றுங்கமுறு
மேன்மையகன் றேகினனவ் வேலைமக மாற்றவயன்
யான்மறுத்தேன் பாகமரற் கேய்ந்து. (௫)

அங்கணந்தி சாப மறைந்தகன்றான் வேள்வியெந்தை
துங்கமுற வாற்றிலனச் சூளொடகந்—தங்கிடுமோ
ரென்விரதந் தேர்ந்தே யிதுகாறு மஞ்சிநின்றார்
மன்மகஞ்செய் யெண்ணமிலார் மற்று. (௬)

ஆன செயலுணர்ந்தே யையமெடுப் பாற்கவிதா
னானகற்ற வேள்வி நடத்துகின்றே—னேனைப்
பயன்வெஃ கிலனெப் பரிசனரும் வந்தார்
நயனுமக்குஞ் சாற்றிவிட்டே னன்கு. (௭)

என்றதக்கன் மாற்ற மிருசெவியிற் கேட்டளவி
னன்றன் றகமெனவே நாடிநக்கான்—மன்றவெகுண்
டீசனன்பன் போலு மிளித்திகழ்ந்தா யென்னவன்னா
னாசினற்றதீசிசொல்வா னாய்ந்து. (௮)

அயன்முதலே யாக வளவிறந்த வெல்லா
வுயிரினையு நன்குதவி யோம்பு—மியலினா
யோத்துன் பொருளா யுயிர்க்குயிரே யாம்பரனை
நீத்துமக மாற்றநின்றாய் நீ. (௯)

புங்கவர்க ளார்க்குநல்கும் போற்றி னவிகொள்வா
னங்கிமுதல் வேள்விக் கதிபன்றான்—பங்கயன்மான்
முன்னெவர்க்கு மெண்ணிறிரு முன்னளித்தோன் கைலையுளான்
றன்னையன்றி யுப்பரிலார் சாற்று. (௧௦)

தேவர்தந் தேவன் சிறப்புடைய வீசனெங்கோன்
மூவர் முதல்வன் முடிவிலா—னாவியினு
ளாவியா யார்கின்றா னாதியென்றே யாரணங்க
ளேவர் தமையிசைத்த தீங்கு. (௧௧)

விதிமுதலா யுள்ளோர் வியனுயிராந் தானு
பதியவன்றன் வேலை பரித்தார்—மதியயர்ந்தா
யந்தணருக் கீசனை வர்க்குமற்றோர் தெய்வமென
முந்தைமறை கூறு முறை. (௧௨)

ஆதலினே வர்க்குமே லாமிறையை யெள்ளிநிற்றல்
பேதமையே யீதோர் பெருமிதமன்—றேதமுற
வாற்றவுமார் கோற்பா ரணையை மறையொழுக்க
நீத்திடுக மாற்றநின்றாய் நீ. (௧௩)

விலக்கினையோத் தின்வாய்மை வேள்விசெய்யி னாருங்
கலக்குமே லையானை காண்டி—யலக்கணுற்றே
யன்னவற்கஞ் சாவலத்த ராருண்டேன் மாய்வரெம்மு
னுன்னுமறை யேகனென்ற தோர்ந்து. (௧௪)

ஆதியந்த மில்லா வமலற் கவியைநல்கி
வேதமுறை வேள்விசெய மேவிலாய்—தீதுனெண்ண
மென்னவரன் பாகத்தை யோர்மாத வற்கீந்து
மன்னுமகஞ் செய்வனென்றான் வாய்ந்து. (௧௫)

அதுகொடியோன் கூற வருமுனிகேட் டெவ்வ
மிதுநவின்றாய் மேலா வெவருக்—துதிசெய்
செயலினரைத் தாழ்த்திச் சிறியரைமே லாக்க
லுயும்வகையன் றென்றா னுமக்கு. (௧௬)

உன்ற னுருத்திரனை யொப்பார் பதினொருவ
ரொன்றொகைய ருள்ளார்திக் கீசானர்—துன்றிறை
ரன்னவர்க்கு முன்ன மவிர்ப்பாக நல்கிமக
மன்ன முடிப்பனென்றான் வாய்ந்து. (௧௭)

முன்னு முருத்திர மூர்த்தியெலா மீறுசெய்து
தன்னி லொடுக்கிப்பின் றானல்கித்—துன்னவைகு
மன்னான் பரமவன்றா ளார்ந்துருப்போர் சார்ந்தவர்நேர்
மன்னா ரளப்பிலரா மற்று.

ஆதிதிருப் பேர்பெற்றோ ரன்னா னியலடையா
ரோதுருவு மற்றே யுலகிறையென்—றோதாத்திற்
போற்ற விருப்பளிக்கப் போதனுநன் கேத்தியல்பாற்
சாற்றுதலை மைசார்வர் தாம். (௧௯)

ஈசன் றனையிதயத் தெண்ணியெண்ணில் காலநோற்
ருசிலுருப் பெற்றவன்ப ரன்னரின்னர்—வாசவன்முன்
மன்னிமையோர் போல வாத்தகா ரெந்தைமுன்னன்
பின்னிலையர் போலுமென்று னிங்கு. (உ0)

என்றலுமே தக்கனன்றீ தென்னையன்மா னிற்கவீ
ரொன் றுதொழில் செய்யு முருத்திரன்முன்—னின்றதென்கொல்
பன்னுதிநீ யென்னவரன் பாத முனித்ததீசி
யென்னுமுனி சொல்ல· ·ெடுத்து. (உக)

ஆதியந்த மில்லா வனைற்குருவம் பேர்செய்கை
யாதுமிலை யிவ்வாற் றினையியம்பும்—வேதமெலா
மன்னபரா னுணையினு ராவிவினை நீக்குவா
னுன்னியருள் செய்வன்மே லோர்ந்து. (உஉ)

உருவுசெயல் பேரருளி னுற்றனைத்து முன்போ
றொரியாகிவி வேதன்முற் செப்புஞ்—சுரரையீங்
தேற்றபணி யிட்டளித்தி நீதலெமக் காமென்னச்
சாற்றினமை கேட்டிநீ சார்ந்து. (உங)

அந்தமுன்னில் லாவி யனைத்து மளிக்குமன்பார்
தந்தைதனக் கன்றியுமே தன்மைதான்—மைந்தரார்
தேவரின்முற் றுமையாற் சீர்த்தன் வயிற்கொண்டான்
வீவினையே செய்யியற்கை வேட்டு. (உச)

அன்றமரா ரீசனைத்தாழ்ந் தாரிப் பணிபுரிந்தா
யென்றிப் பரந்திரு மெந்தையென—வொன்றுமுமக்
காயுளளவுமே யாற்றுமின்மெய் நீறணிந்தைந்
தாயவெழுத் தன்னி ரகத்து. (உரு)

இங்கனிவை செய்வீரே லிந்தத் தொழிறரிக்கு
மங்கவலி யெய்துவீ ரன்றியுமே—நங்கலைக
னும்மருங்கு நின்றருளு நோன்றொல் துளகாட்டி
யம்மகன்மை கொள்விரென்று ளுங்கு. (உசு)

அன்னவர்க்கொண் டெவ்வகைய வாஞ்செய்கை நன்களித்துப்
பின்னுளதோர் செய்கைசெய்தெம் பெம்மான்முன்—பன்னுமறை
யன்னவனை யைந்தொழிற்கு மாமுதல்வ னென்னுமிது
வுன்னுதிநீ கேட்டியினு முற்று. (உஎ)

உருத்திரனென் போரற்கு மொப்பிலவன் மைந்தர்
கருத்திலவற் போற்றுங் கணங்க—டிருத்தகுசீ
ரன்னவன்றன் பேறுபெற்றோ ராரு மழற்கடவு
ளின்னவர்க்கு மாமா லினிது. (உஅ)

பாம விடர்க்கடலுட் பட்டவுரை மேலெடுப்போ
னேமன் பாழ லுருத்திரனே—னுமழுற்றே
னன்னுன் மகர்க்குமன்ப ரானவர்க்கு மேனையர்க்கும்
பின்னாக மேயதவன் பேர். (௨௯)

முன்னவுணர் தம்மை முனிந்திடுவா னும்பர்செல
மன்னி தியம் பெற்றழலோன் வாயவைத்—தொன்னலர்மேற்
சென்றுசமர் செய்துவரத் தீகல்கா தோடியழா
நின்றனைய பேர்பெற்றா னோர்ந்து. (௩௰)

ஓது மறையி லுருத்திரனென் பேர்காட்டி
யேதிலவரைச் சொற்ற திறைமேற்சார்ந்—தாதியரற்
சுட்டி யறைந்ததுவுஞ் சொல்பிறர்மாட் டேறுவிலை
துட்டெளிந்தோர் தேர்வா ருணர்ந்து. (௩௧)

உற்றமறை தன்னு ளுருத்திரனென் போற்றீ
மற்றவரைச் சொற்ற வகையுரைப்பல்—பெற்றமூ
ரீசற் கியம்பு மிடநாடி யாங்கவன்சீர்
பேசிறைமை காண்டி பெரிது. (௩௨)

முந்தையொர்நா டேவர் முனிவ ரிவரவர்தா
மந்தமிலா தோர்பரமென் றுங்கறைந்து—தந்தமிற்போய்
வாதுசெய்து தேர்வறிதான் மாமலரோன் பாலணுகி
யோதுபரம் யாரென்று ருற்று. (௩௩)

அன்ன மொழிகேட் டயன்றான் கருத்திலவை
மன்னமறை காட்டி வகுத்தமென—முன்னவனை
யுன்னியங்கை யோச்சி யுருத்திரனென் றேசாற்றித்
தன்னினின்றான் றேர்தருவான் சூழ்ந்து. (௩௪)

அங்கணயன் சூளா லவிராதி யம்பகவன்
சங்கரனென் றேகாட்டித் தானுருகிப்—பொங்கக்
கனிவினொடு மீமிசைசேர் காமருகை மீட்டு
முனிவர்க் கினையசெப்பு முன். (௩௫)

அண்டரோ டெம்மை யளித்தான் மறைதந்தான்
மண்டெவர்க்கும் வேலை வகுத்தனன்சீர்—கொண்ட
வருணீரி னைதொழிலு மாற்றுவன நாதி
பரனிமல னென்றும்மிலான் பற்று. (௩௬)

முற்றுமாய் நின்றான் முடிவிலான் பொன்மலர்த்தாள்
பற்றினார் நாடும் பழமையோன்—குற்றமிலா
னன்ன சிவன்பரமென் றானமொ லாமறையு
முன்னுபதி யீசனென்று மோதுது. (௩௭)

அருள்செய்து பின்பரனை யங்கைதொழு தந்நாண்
மருளகல்பூ மன்னிருந்தான் மற்றப்—பொருளியறேர்ந்
தொன்றறவோ ரெந்தையா யுற்றாய் குருவாகு
மென்றவன்று டாழ்ந்தா ரினிது. (௩௮)

தின்னடிதாழ்ந் தாரையின்று தொட்டமலன் மாவடிவ
முன்னுதிர்நற் பூசை யுகுற்றுதீர்—மன்னு
மிரும்பவந்தான் றீர்தீர்நீ ரென்னவிடை தந்தான்
னரும்பவந்தா னில்லா னமர்ந்து. (௩௯)

ஆதலினெம் மீசனே யாயும் பரம்பொருளா
மேதிலா ரெல்லா மிலகுயிரா—மோதுமிதை
யாதரத்தி னுரைத்தே னன்றுண்மை யேகாண்டி
வேதநூல் கூறும் விதந்து. (௪0)

அன்றயனிற் காரு மரனார் புகழினைத்து
நன்றுணர்த்த நீயதனை நாடியே—நின்றுதவஞ்
செய்திதுபெற் றாய்நினக்குத் தீதுறுநா னின்றவர்
தெய்தமறந் தாய்போலு மிங்கு. (௪௧)

தீக்கைமுதல் யாவருமே தாமுடிவு சார்தகவால்
வந்து னவையிருந்தார் மாயையாற்—பந்தமுற்று
ருய்ந்திடுவா னெண்ணினையே லோராற்கு நல்கியவி
ஙிர்தமகஞ் செய்தியென்று னிங்கு. (௪௨)

ததீசிப்படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா. ௨௯௭.

---

# ததீசியுத்தரப் படலம்.

---

இவ்வணந்த தீசி யியம்பநகை செய்துதக்கன்
வெவ்வெண்புஞ் சென்னிகளு மேலணிந்தே—யவ்வமரர்
வெந்தவெறுஞ் சாம்பர் விழைந்துமெய்யிற் பூசுமோ
பந்தமகன் மேலாய் பரம். (௧)

கழிதீ யுடலேந்திக் கானிவிழி கேச
மொழிகிரிப்பல் கூர்மத்தி னோடு—மிழிதாப்பூண்
டந்த முறவே யனைத்துயிரும் வீக்குமோ
வந்தமுத லில்லமல னங்கு. (௨)

புலியி னுரியுடுத்துப் போதகத்தோல் போர்த்துக்
கலியழன்மான் கூன்மழுக் கைக்கொண்—டலவியெங்கு
ஐயமு மேற்குமோ வாட்டுமே யாற்றுமோ
[illegible] னமர்ந்து. (௩)

வெஞ்சா ரதர்படையா மேவுத லாயுமோ
நஞ்சா ரவணிந்து நாறுதலை—யஞ்சார்க
மேற்றுருவிற் றிக்குடையேய்ந் தீசனக்க ளுகுமோ
வேற்றுருவுங் கொள்ளுமோ வேட்டு. (௪)

விடையிவரு மோவால மேவுமோ தேவன்
சுடலைதனி லாடுமோ தோகை—முடிசுமந்தோர்
மங்கைக் கிடந்தருமோ மைந்தர் தமைப்பெறுமோ
வெங்குணமுங் கொள்ளுமோ வேட்டு. (௫)

ஆதலனும் மீசனே ராய்குணமில் லானவனுக்
கீதலின்றெம் மாமகத்தி னின்னவியென்—றோதலுமே
பண்ணவனைக் கொல்லோ பழிக்குவனின் றெனநக்
கண்ணன் முனிவெகுண்டா னங்கு. (௬)

எந்தைநிலை தேறா திமையோர் சபைநடுவே
னிந்தையிற்சில் வார்த்தை நிகழ்த்தினா—யந்தரிதன்
மாகேள் வரற்கலைசார் வண்ணமுனை ராய்கயவ
நீகே ளெனநவில்வா னேர். (௭)

கூர்தன் னருளுருவங் கொண்டிடுமெங் கோன்றலைமைத்
தார்கொள் புலவருமுன் [illegible]—மாரவீ
னளித்தருள்செய் வானுதவி யாருயிரெல் லாம்பூக்
தளித்தவன்க ணின்றளிப்பான் றான். (௮)

பொன்னிறன்க ணின்றவைதாம் போற்றியவைக் கூணருத்தி
முன்னை வினைதொலைச்சி முன்னரும்வீ—டன்னவைக்கு
நன்னரே நல்கி நவிலுயிரோ டெவ்வுலகும்
பின்னரே வீட்டும் பெரிது. (௯)

அன்ன பொழுதி லவையழித்த பின்னளிப்போ
னென்னின்று ளாயொடுக்கு மேய்ந்திதற்பின்—முன்னுளதோ
ரேகமதாய் நின்றுறையு மெம்மூர்த்தி யிப்பெற்றி
யாகவென் றுஞ் செய்யு மமர்ந்து. (௧0)

இயனுடி யிவ்வண்ண மெந்தையடுந் தோறு
மயனு மியவொன் பணியும்—வியனுரு
மன்னோர் சிரஞ்சாம வாகத்திற் சென்னிதனின்
மின்னோரப் பூண்டுறையு மேல். (௧௧)

அல்லதவர் தம்மை யயின்முத் தலையிலான்
மெல்லவெடுத் தேந்தும் விழியினாற்—றொல்லுலகா
ணீரூக் கியம்புனையு நித்தனவர் செய்தவத்தின்
பேறாய தோர்ந்து பெரிது. (கஉ)

ஆதலாற் றன்னை யமர்ந்து வியப்பதற்கண்
றோதுமவை பூண லுயிர்த்தொகைக—ளுதனிவ
னென்றுதன்பா னண்ணிமுத்தி யெய்தியுய்வா னன்புசெய
லொன்றுதிற மென்றறிநீ யோர்ந்து. (கங)

விண்ணவர்கட் கின்னல் விளைபொற் கணனொருநாண்
மண்ணகத்தை வெளவி வயிற்றுவைத்துத்—துண்ணெனவே
பாதலத்திற் புக்கான் பனிப்பவுயிர் கண்டரியாய்
மீதலத்தின் மேவினின்றான் விண்டு. (கச)

ஓரிமைக்கு முன்மா லுறுபா தலமுற்றுக்
கூரெயிற்றா லன்னவனைக் கொன்றுமுன்போற்—பாரதனைத்
கொண்டுபதித் தந்தைகொடு கோட்டாற் புவியிடந்து
மண்டு கடலுடைத்தான் மற்று. (கரு)

கண்டுமைகேண் மான்மருப்பைக் கையாற் பறிப்பவுணர்
விண்டுமற்றக் கோடும் விளிக்குமெனப்—பண்டுபோ
னின்றிறைஞ்சப் போனா னிமலனதைச் சின்னமா
வொன்றியலிற் பூண்டா னுரத்து. (கசு)

அந்தரர்தம் மோடவுண ராழி கடையுமெல்லை
மந்தரமா மத்தமிழ மாலதைவெந்—தந்துநீஇ
யாமையாய்த் தாங்கமதி யாரமிர்தை நம்மதென
வாமைய லாய்மலைந்தா ராங்கு. (கஎ

மன்போ ரினைநீக்கான் மாயனீந்த் வெற்பைநிறீஇ
வன்போ டுலையா வகைகாத்து—மென்போக்கி
லந்தையெய்தி யாசைவரை யாரலைபோ மாறுழக்க
வெந்தையது தேர்ந்தா னினிது. (கஅ)

அங்காளெங் கோன்போ யரியாமை யைக்கடிய
முன்னா வுருக்கொடுமான் முன்னேத்த—பன்னாதன்
வல்லவுணர்ப் போக்கி மருந்தமரர்க் கீகென்று
செல்லவவர்ச் சாய்த்தனன்மால் செய்து. (ககூ)

மாய்த்தமரர்க் கீந்தமுது மால்புவிகாத் தானென்பர்
மீத்தயங்கு மாமை மிளிர்ரோட்டைப்—பூத்தடங்கை
வாங்கி விமலன் வராக மருப்பினொரு
பாங்கிமைக்கச் சாத்தினான் பண்டு. (உ0)

முன்பொருநா டாருகத்தான் மொய்முனிவர் யாருமகத்
கன்பிலராய் வேள்விசெய்தங் கார்தாமே—பின்பமுத்தி
யெய்துவா ரேற்றிருந்தா ரீதுணர்ந்தே யீசன்மா
லெதிரு வன்னிரு ளங்கு. (உக)

அன்ன துணர்ந்துமா லங்கயிலை யுற்றநந்தி
முன்னருய்ப்பத் தாழ்ந்தான்முன் முன்னிற்பத்—தன்னினைப்
தானுணர்த்தி மாயன் றடக்கைபற்றி யாண்டெழுந்தே [பைத்
தானவெற்பு நீங்கினான் சம்பு. (உஉ)

கண்ணன் றனைநோக்கிக் கண்ணுதலோன் ளுளியல்கொள்
பெண்ணன் குருக்கோடி பெட்பினென—வண்ணமதர்
மாலவுரு மாலினியா மாலுமத்தன் மாதயாக்
கோலவுருக் கொண்டனனெங் கோன். (உங)

அத்தனுரு நோக்கிமா லயரியு மாலானு
னத்தனல்கு தோனீத்து நக்கனுய்ச்—சித்தனெனிர்
சூலம் பலிக்கலன்கை துன்னவிண்டு பாற்செல
ஞாலமுனக் கான்புக்கா னங்கு. (உ௪)

புக்கனன்மா யோற்பாராப் போர்துநமை யெண்ணாது
தொக்க முனிவர்வாழ் சூழலுற்று—மிக்கமால்
பூட்டி யவர்விரதம் போக்கியே நீக்கந
மாட்டிலுற வென்றுசென்றான் வாய்த்து. (உரு)

விடுத்தலுமே மால்சென்று வேள்விதவந் தாமே
கொடுத்திமோ முத்தியெனுங் கொள்கை—பிடித்த
முனிவரவைக் கண்ணெய்தி முன்வேள் பலரெய்
தனியம்பி ரேக்கி நின்றான் றான். (உசு)

கண்டார் முனிவர் கதுமெனவே காமகசை
கொண்டார் விரதம்போய்க் கூர்மகச்சீர்—விண்டார்
மிகமதனீர் பாய மெலிந்தா ருணர்ச்சி
யகலவுரு காநின்றா ராங்கு. (உஎ)

ஆலமரு மத்த னருளா லரிகொண்ட
கோலவுரு நோக்கிக் குலமுனிவர்—சில
மனைத்துறந்த் தொண்சுடர்மு ளும்விட்டி லென்ன
நினைத்துவந்து சூழ்ந்தார் நெடிது. (உஅ)

பார்கொலோ வான்கொலோ பங்கயன்மா லங்கசன்வா
ழூர்கொலோ நம்முறையு ளும்பர்க்காக்—கார்மெய்ச்
செடிகொ ளவுணர்ச் செகுத்திருமை யாரென்
றடியர்க் கருளுமென்று ராங்கு. (உகூ)

என்றுபல பன்னி யிடருற் றெரியிடைவீழ்
மென்றளிர்போன் றன்னார் விரகத்தீத்—துன்றநின்றார்
நாடிமுனி வோரிருக்கை நண்ணி யிசைமறைகள்
பாடியையங் கொள்வான் பரன். (௩௦)

பாட்டிசையங் கார்முனிவர் பன்னியர்கேட் டாசவரை
வேட்டனகண் சேறும் விரைவினோ—வீட்டமொடு
சென்றிறைவற் கண்டனர்வே டக்கணைமெய் தைத்தாசை
யொன்றுததி மூழ்கினா ருற்று. (௩௧)

மெய்யிலணி காஞ்சனம் வீழ்ந்தினிசை கேட்டலுமே
வெய்யவிர கத்தழலில் வீழ்ந்தனமா—லையர்தா
மையமது கேட்கவந்த தன்றறிவை மாரைமையல்
செய்யவந்த தென்பார் சிலர். (௩௨)

நன்றுநன் றிம் மாதவற்கு நற்றாசு நல்கியுணா
வின்றுநல்கு வோமென் றிரங்குநல்லார்—மன்ற
வுருவிலொளிர் பொற்றுகிலோ டொண்கலன்போய் நாணித்
தெருவினடு நின்றார் சிலர். (௩௩)

பாசமது நீத்தன்பர் பாலருள்செய் யையர்தங்
கோசமது நோக்கியே கும்பிடுவோர்—நேசமுற
வங்கைவளை யுண்கலத்தி லாதரத்தி னன்னமுடன்
செங்கைவளை யீவார் சிலர். (௩௪)

சூலமுறு கையுஞ் சுடர்விழிகொள் பாலமொடு
கோல முறுசடை யுங் கொண்டவிவர்—நீலகண்டர்
மாசொழித்தா ளீசர்நம் வால்வளைபூ ணாடைகற்புத்
தேசொழித்தா ரென்பார் சிலர். (௩௫)

ஐயமது கொண்டுடைதா னங்கழலிற் றட்பப்பைப்
பையவே சென்று பலிக்குவந்த—வையருருத்
தாமொழியா துன்னலின்முன் சார்தோற் றுருவெளியிற்
றேமொழியார் பெய்தார் சிலர். (௩௬)

இன்னார் பலர்சூழா வீண்டுபூந் தானைவளை
துன்னுகல னாண்டுறப்பச் சோர்ந்துகற்பு—முன்னுமுளந்
தாமறுகி மாலாய்த் தனைத்தொடர வெம்பெருமான்
மாமறுகிற் போனான் மகிழ்ந்து. (௩௭)

சில்லிடையாழ் வாசிக்குஞ் சில்பான் மறைபாடு
சில்லிடையோர் கொள்சிவநூல் செப்புமால்—சில்லிடைத்தன்
மெய்காட்டுஞ் சில்லிடைப்போய் மேவையங் கேட்குஞ்செங்
கைகாட்டுஞ் சூலத்தான் காண். (௩௮)

திருவனைய மாதர் சிவன்கழன்மே விட்ட
மருவலரும் பூணும் வளையுந்—தெருவிலிர்ந்த
துய்கையார் மால்வரன்மெ யுன்னிநீ தளரினன்றன்
செய்கையார் செப்புவார் தேர்ந்து. (௩௯)

பைந்தொடியார் கற்பாம் பரவை மதிக்குமெண்ணின்
மந்தரமே போன்றான் மடவார்மைக்—கந்தரன்மேன்
மேயவிழை வாற்கருப்ப மேவிமகார் நாற்பானெண்
ணாயிரரைப் பெற்றா ரமர்ந்து. (௪0)

மைந்தர்க ளத்தன் மலர்த்தா ளிறைஞ்சிபின்பார்
புந்தியினின் றேகத் தனிதனி—யந்தவமிங்
காற்றுதிரென் றேக வரனைநினைந் தம்முனிவர்
தோற்றங் கிருந்தார் துனித்து. (௪௧)

நித்தனுரு நீத்தானை நண்ண வாமுனிவர்
தத்த மடவார் தமைநோக்கி—யெய்த்திவரு
மானகலை நாண்டுறந்தா ரந்தோ வெனவிரங்கி
மானாகனி கொணடினைந்தார் மற்று. (௪௨)

உன்னு மெழில்கொ ளொருத்தியெம்பான் மேவியே
மன்னுந் தவஞ்சிதைத்து மால்செய்தான்—பின்னொருவன்
பன்னியர்முன் வந்துகற்பைப் பாற்றினனென் மாயமென
வுன்னினர்சேர் வுற்றா ரொருங்கு. (௪௩)

என்னுதலெய் மாமுனிவ ரெய்த்தமனந் தேறியுயர்
கண்ணுதலை [illegible] தேதான்—பண்ணுதலே
மன்மா தவந்தொலைப்பான் மானயனி யாகிவந்தோ
னன்மா தவன்போலு நன்கு. (௪௪)

நம்மா தவஞ்சிந்தி நந்தினுநன் றாவின்னும்
வெம்மா தவஞ்செய்து மேலுறவோ—மம்மா
செழிகயற்கண் ணார்கற்புச் சிந்தும் வகைச்சொற்
கொழிவுமுண்டோ வாருமெங்குமுற்று. (௪௫)

நாரொருமா வேடந் தரித்தரியை விட்டிவகை
யானமெய்யல் செய்தோ னரனெனவே—மானமுற்றுத்
தேமொழியார்க்கையார்பின் செல்கின்றீர் கற்பிகந்தீர்
சாமினன்றேற் போமினென்றார் சார்பு. (௪௬

இத்திறங்கேண் மாத ரிவர்க்கண்டோர் முத்தரே
பித்தர் முனிவரெனப் பேர்ந்துருவுள்—வைத்தனையார்
தம்மிருக்கை [illegible] னைருவுங் கொண்டுவோ
[illegible]வண்டர் காணவந்தா [illegible].

கடவுளரங் குற்றளவிற் காய்ந்திறையோன் றன்னை
மடமுனிவர் னோக்கியங்கண் மன்னக்—கொடியதோர்
மாமகத்தை யாற்றி மடித்து மிவனையெனத்
தீமகத்தைச் செய்தார் செறிந்து. (சஅ)

அந்த மகத்தி னனலி னிடைமிடல்கொள்
வெந்தரக்கொன் றண்டம் வெடிபடத்தாய்—வந்ததனை
யீசன்மே லுய்ப்ப வெதிர்போ யுரித்ததன்றோ
லாசி னரனுடுத்தான் சூழ்ந்து. (சகூ)

இங்கிதுசெல் பின்னீ றிபற்று கனிச்சியொன்று
செங்கனலின் பாற்றோன்றித்தீயருய்ப்பச்—சங்கரன்றன்
சார்படையா மேவவதைச் சம்புகையி லேந்திகம
தார்படையா யாதியென்று ணங்கு. (ரு0)

பின்னொருமா னங்கட் பிறந்த ததைமுனிவர்
பன்னொருவன் பால்விடுப்பப் பாய்ந்தெங்—மன்ன
தடக்கைலே யாளியதை யஞ்செவிநேர் கூவென்
றிடக்கையி லேந்திநின்று னேய்ந்து. (ருக)

ஏந்தியபின் வேள்வி யெரியிலெண்ணில் பாம்பெழுந்தே
யார்ந்தவர்தா மேவ வவைசினந்து—போர்தனவா
லன்னவைகண் மேவ வரன்கரத்தி னெலடுத்து
முன்னரவ மோடணிந்தான் முன். (ருஉ)

பின்னர் மகத்தீயிற் பேரிடியின் மாமுழக்க
மென்னவெண்ணில் பூத மெழுதலுநீர்—மன்னரனேண்
மாற்றுதிரென் றுய்ப்பவரன் மற்றவர்ப்பார்த் தெம்படையாய்ப்
பாற்றகவிற் சார்திரென்றான் பண்டு. (ருங)

வந்த கணம்படையா மன்னவன்னூர் சிறிமகத்
துந்தழலில் வெண்டலைதா னென்றெழலு—நந்திமிசை
மன்னதனை யேவ மலர்க்கரத்தி னெலடுத்துச்
சென்னிதன்மேல் வைத்தான் சிரித்து. (ருச)

அந்த முனிவ ரமலனைப்பல் காலோச்சி
மந்தணங்க ளேவி மடித்திரென—வெந்துடியாய்
வெம்முருவி னார்த்துவா மீயுலகம் வீயுமென
வம்மகரத் தேந்திநின்று னங்கு. (ருரு)

இத்திறம்யா ரேபுரிவா ரென்று முனிவரெலா
மொய்த்தழலி னின்றார் முயலகனை—மெய்த்தழலை
நந்தமியல் போக்கரனை நண்ணி முடித்திரென
வுந்தவிரைந் தாங்கணைந்த வுற்று. (ருசு)

மன்னனலந் தேவுமுட்க வந்திமோத் தீயைமந்தா
முன்னவன்மை யேந்தி முயலகனைத்—தன்னடியா
லாற்றவிழத் தள்ளியத்தா னன்னவன் மே லூன்றியும்பர்
போற்றநின்றா னீசன் புரிந்து. (௫௭)

நிற்றலும்வெந் தீயோர் நெருப்பெழப்பார்த் தின்னுமா
னூற்றனனந் தோவுனூற்றி யுய்த்தவெலா—மிற்றனவோ
வென்றிரங்கிச் சாப மியம்பினா ராங்கவற்று
னொன்றும் பயனிலவே யுற்று. (௫௮)

சாபமுமே மேவாத் தகையுணர்ந்து மாதவர்கொள்
கோபமும்போய் வன்மைசெயல் குன்றிடான்—சோப
மிழிபாக வுண்ணடுக்க மேய்ந்துதொலை வில்லாப்
பழிபாவம் பூண்டார் பரிந்து. (௫௯)

ஏற்றமிலா வத்தவத்தோ ரேழைமையை யென்னென்று
சாற்றுதுமீ றில்பரனைத் தாமுடிப்பா—னாற்றமகஞ்
செய்துபல வுய்த்தறைந்தார் தீச்சாப மற்றாற்றீர்த்
தெய்தவற்றோ வன்புமற்றா ரேற்று. (௬0)

நித்தன் முயலகன்மே னின்றுநடஞ் செய்திறத்தை
நத்தனயன் கண்டிறைஞ்சி நன்கேத்தச்—சித்தனைந்து
காம்பணிவாழ் வேந்துங் ககனத் தவருமே
தாம்பணிவர் போல்வீழ்ந்தார் சாய்ந்து. (௬௧)

அருளினட மாடு மரன்புவனம் யாவும்
வெருவிவிழ லேங்கி வீழ்ந்தும்—திருநடனந்
தீர்ந்துநிற்பச் செம்மலொடு தேவ ரெழுந்தன்பு
கூர்ந்து தொழுதார் குறித்து. (௬௨)

மாதங்கன் றன்னை மதியா முனிவர்க்குப்
போதநல்க லோடும் பொலிந்தெழுந்த—யேதமிழை
யெம்பிழைகள் யாவு மிறைவ பொறுத்தியெனச்
செம்பதமுன் வீழ்ந்தார் செறிந்து. (௬௩)

முனிவர் திறநோக்கி முன்னெறியா றுற்றே
யினியதவஞ் செய்திரென வீசன்—றனிவரையிற்
சென்றயன்மா லாதியர்தந் தேமுறச்செய் தேருமைபா
லொன்றவவண் வீற்றிருந்தா னுற்று. (௬௪)

திங்கக் கரியுருவிற் றொல்லுலகெ லாந்தொலைக்கும்
வெங்கட் கயாசுரன்மா மேருவிற்போய்ப்—பங்கயனைப்
போற்றி யரிய பொருவீ றவம்பயில
னாற்றலைமன் றோன்றினன்மு னன்கு. (௬௫)

வேண்டுவதென் சொல்லென்ன வேதனவனடிதேண்
மாண்டிடா வாயுள் வயம்வலிமை—யீண்டருடி
யென்ன நகைத்தளித்தோ மீசன்பாற் சேறியே
லின்னசிந்து மென்றகன்றா னேய்ந்து. (சுரு)

சொற்றவயன் சொன்னோக்கிச் சோதிமேற் போகல
மற்றவர்பாற் றன்ன மனத்துன்னி—யுற்றவுண
னண்டர் பதந்தோறு மண்ணியமர் செய்தவனூர்
மண்டனலுக் கிட்டான் வளைந்து. (சுஎ)

பொன்னகரஞ் சென்றுபொருதுமக வாற்றாந்தே
யொன்னலன்மன் மாவையலைத் தூரழித்துப்—பின்னர்த்
திசைக்கா வலர்ச்செருத்துத் தீர்த்தவுணர்ச் சாய்த்தா
னிசைக்கா ரரக்கரையு மேற்று. (சுஅ)

மஞ்சுறழ்க யாசுரன்பார் வைகிமிக்க டம்மையட்டு
கஞ்சிற் றிரிதலுமே நற்றவர்க—ளஞ்சி
யணிகாசிக் கோடி யவனுனா ரோடு
மணிகன் னிலைபுகுந்தார் வாய்த்து. (சுகூ)

அங்கனரற் றாழ்ந்துதந்தி யாயவுணன் வந்துலகட்
டிங்கனமைக் கொல்வா னெணிவருவான்—றுங்கமா
ரையநின தாளரண மாவடைந்தே மேவடியே
முய்யவரு ளென்றா ருகந்து. (எ0)

அன்னதுணர்ந் தாரசுர னத்தளியில் வந்திறுத்து
மன்னுருமி னார்ப்ப வணங்குமன்ப—ருன்னமுலைந்
தொல்லு மாற்றழீஇ யுண்மயங்க வஃதோர்ந்துங்
கொல்லும் வகைசெறுத்தான் கூர்ந்து. (எக)

மற்றவன்செல் காலை மழுவவா னும்பருய்ப்ப
வத்திறங்கண் டுக்கிரமிக் கார்வடிவுற்—றுத்தமமா
வங்கம்விண் டோயநிமிர்ந் தாயிரமாங் கோடியினர்
மங்கொளியிற் றோன்றினன்சீர் வாய்ந்து. (எஉ)

உக்கிரமாப் பேர்வடிவ முற்றாரப்ப வத்தொனிதான்
மிக்க பலயுகங்கண் மேவிற்று—தொக்கயன்முற்
றேவர் வெருண்டார் சிவனிவனென் றோர்ந்துமத்தன்
மாவமர்செய் வான்சூண் டறந்து. (எங)

தானவன்றா னேர்தலுமே சம்புகடைத் தீயெழப்பார்த்
தான மலர்ப்பதங்கொண் டக்கொடியோ—னீனமுற்று
வீழ வுதைத்து வெரின்பிளந்தங் கையுகிரால்
வேழ முரித்தான் வெகுண்டு. (எச)

கார்த்ததுதிக் கைவுணர்க் காய்ந்து காத்திரு
வீர்த்ததோ வீர்த்துமெய் வெவ்வுயிருந்—தீர்த்தனமெய்
கொண்மா வொளியோகங் கொண்டிருந்தாற் பார்த்திட்ட
கண்ணாங் கிரிமுந்த காண். (௭௫)

போதகத்தின் புன்சருமம் பொற்புயமேற் போர்த்துமனி
யாதரத்திற் றன்சுடர்நீத் தாருயிர்கட்—கோதுவிழிக்
கெல்லாங் கதிர்நல்கி யேய்ந்தவச்சந் தீர்த்தளித்தா
னெல்லாருங் கண்டத் தரன். (௭௬)

அந்த வமயத் தமரர் துதிதரக்கேட்
டெந்தைமணி கன்னிகையி லேகமுந்து—தந்திகெய்த்தோர்
காலவிரு னென்பாதி கண்டுகொன்று னீசனெனு
மாலகன்றோர் தேர்ந்தார் மகிழ்ந்து. (௭௭)

காசிநகர் வாழ்பவருங் காமாதி விண்டவரு
நேச முறப்பணிந்து நித்தற்குப்—பூசை
புரிவித்துப் போயினார் போதகத்தோல் போர்த்த
தரிதிற் றெரிதியென்று ருங்கு. (௭௮)

முன்னமொரு வைகன் முராரியயன் மேருவின்கண்
மன்னுமிநற் றேவர் வரம்பிலாவந்—தன்னவர்த்தாழ்ந்
தோவி லுலகத் துயிர்க்குயிரா யுற்றுநின்றோ
ரேவரெங்கட் கோதிரென்று ரிங்கு. (௭௯)

என்னனுமே வேதா விறைமையை யான்யானப்
பன்னும் பிரமமாய்ப் பண்ணினிற்றிறர்—தன்னிரெனத்
தேனேய் திருத்துழாய்த் தேவுமற்றுய்ச் சேர்த்துனையீன்
யானே பிரமமென்று னேய்ந்து. (௮0)

இருவருமே யின்னாவின் றெண்ணிருட் சீறிப்
பொருவி றருக்கம் புரிய—மருவெவருஞ்
சென்றார் மறைநுடிலை சீருருக்கொண் டாதிசிவ
னென்றுய்ந் துரைத்த வெதிர்ந்து. (௮௧)

வேதங் குடிலை விளம்புமொழி கொண்டிலர்போர்
போத நவிலப் புராரிகண்டே—யோதவர்தற்
போத மொழியவுன்னிப் பொங்கொளியாய் நிற்பவா
லீதெனவே யோர்ந்திலர்மா லேய்ந்து. (௮௨)

இயல்துதேர்ந் தீசனதி லேருருவங் காட்ட
மயலகன்று மாலெழுந்து வாழ்த்த—வயன்சிறிது
மெண்ணு னரிபோ லிறைஞ்சான் சிவனையுமே
யொண்ணு றெனவிகழ்ந்தா னுற்று. (௮௩)

ஐந்தலைகொள் வேதனிகழ் வித்தன் செவியேற்று
முந்துசினங் கொள்ளிலா னன்பகவ—னந்தைதனை
மாற்ற வமரர் மதர்ப்பொழிய வைரவனைக்
கூற்றுதைத்தோ னன்புரிந்தான் கூர்ந்து. (௮௪)

நீல முறுமெய்யு நீள்சடையு முக்கண்ணு
சூல முதற்படையார் தோளுமா—வேலவே
மண்ணுக் கிரவடிவம் வாய்ந்ததிக்கு மாவடுகன்
றன்னைக்கண் ணுற்றுரைப்பான் சம்பு. (௮௫)

திகழ்தஞ் சிறுவனயன் சென்னிநமை யெள்ளிற்
றகழ்தந் ததையேந்தி யாவி—யுகந்தளித்துத்
தம்மைப் புகழ்வோர் தடியுடனெய்த் தோர்பெற்று
வெம்மைகந்தை மாற்றியடை மேல். (௮௬)

மூன்புடைத்தா மண்ட முகடார் பதமெய்தி
மன்பதைக்கு மாத்தோடு வானவரைத்—துன்பறவே
காத்தியென்று மென்று கருணைநல்கிச் சோதிப்பகோன்
நீத்திகழுஞ் செங்கைச் சிவன். (௮௭)

சோதி மறையத் தளவோன் றெரிந்தநீற்ற
வீதியல்பன் றென்றானை யேத்திநகர்—போதலொடுங்
காரியய னுச்சியிலார் கம்முகிராற் கொண்டேந்தச்
சோரியுற வீழ்ந்தான் றுடித்து. (௮௮)

சோரிநீர் வெள்ளமாய்த் தண்ணெனன் றலகுற்று
மேருவரை சூழ விழியனலாற்—றீரவே
செய்தந் தலரவற்குச் சேரவுயிர் நல்கவவ
னுய்தந் தெழுந்தா னுணர்ந்து. (௮௯)

மலரோ னெழுந்து விகற் பணியார்
நிலவணியும் வேணி யிமலற்—கலகிலவாங்
குற்றம்யான் செய்தமையாற் கூறிப் பழிபெற்றேன்
செற்றமினிக் கொள்ளாய் செறிந்து. (௯௦)

இமைப்பி னுலகமடு மெந்தா யருளி
னமைப்பி னுணர் வுற்றனன்றீ தாங்கஞ்—சமைப்பிலவெஞ்
சூலமென் றுங் கையிற் றுலங்கிடவே கோடிநீ
மால்கல்வான் காண்டொறும்யான் வாய்ந்து. (௯௧)

என்னவின்ன பன்னி யிறைஞ்ச வயற்பாரா
வன்னவண்ண மாகவென வாரருள்செய்—தன்னுமவன்
காலவே கன்கனன்மு கன்சோம கன்முதலாச்
சால்க்கனைங்கடந்தான் சார்ந்து. (௯௨)

எண்ணில் கணங்களோ டெந்தையந்தை யார்தவத்தோர்
கண்ணும் வனந்தோறு நாகருறை—விண்ணினிலை
தோறும்போய் மெய்யுகுநெய்த் தோருமைய மாக்கொடவர்
கூறுயிரும் பின்னளித்தான் கூர்ந்து. (௯௩)

காரியண்ட ரூர்கள் கடந்தரிவா ழூர்சென்றான்
சூரி நெடுங்கணங்கண் முன்செலவே—சீரியமுன்
வாயிற் றலைவன் மறிக்கக் கணநாதர்
மேயவனைக் கொன்றார் வெகுண்டு. (௯௪)

நந்தனகர் நண்ணலைய னற்ற னணைந்தாழ்ந்
தெந்தையிவன் வந்தமெதா னென்னையென—நந்தியருஞ்
சென்றேம் பலிக்குன்கஞ் செந்நீ ரளியென்ன
நன்றேற்ப நல்கினன்மா னன்கு. (௯௫)

ஒருவினெய்த் தோரைய னெண்கைச் சிரமாண்
டொருநூறு நூறவதி யுய்ப்ப—வொருமயக்கம்
வந்ததொண்கம் பாதி வரைநிறைந்த தில்லைமா
னந்தமனஞ் சோர்ந்தா னலிந்து. (௯௬)

மஞ்சுறழ்மால் சோரவிரு மாத ரிரங்கியையன்
செஞ்சரணை மேவத் தெரிவையரை—யஞ்சலென
நேர்ந்தருளி யச்சுதன்மா னீத்தெழுமா றற்றியத்த
னேர்ந்துறையு ணீங்கினா னுற்று. (௯௭)

தொடாரியை நீற்றியென்று சொல்லவவன் சூலத்
திடனுற் றவனையருள் கென்ன—வடுகன்கை
முத்தலைவேன் மேவவனை மொய்ம்பின் விடுத்தாவி
யத்தலைதந் தேயளித்தா னங்கு. (௯௮)

மாலுலக நீங்கியையன் மன்கணங்கள் சூழ்தரவே
மேலுள் புவனமேன் மேவியென்றும்—பாலனஞ்செய்
திற்றினா ரூணையினா லேயிமையோ ரங்கமுயிர்
மாற்றிநீ ரூக்கு மகிழ்ந்து. (௯௯)

பொறிமன் னுயிரும் புவனங்கள் யாவு
மிறுதிபடு நாளீமத் தெல்லை—மறைநுமலி
தன்னையுயர்த் தன்னான் றகமகிழ்வி னுலவு
மின்னருளி னென்ப விது. (௧௦௦)

மூந்தொருனான் றிந்திரன்றான் மொய்யமரர் தம்மொடும்போய்ச்
சந்தமுறு கைலையாற் றூழுவந்தா—னந்தையொடு
யன்னோன் மணிக்கோயி லார்தலுமோர் பூதமாய்
முன்னோன் கடைநின்றான் முன். (௧௦௧)

நின்றவனை நோக்கியைய நீயாரை யென்றகண்டேன்
மன்ற வரனை வணங்குவான்—சென்றனனென்
வேலைசெப்பு கென்னவத்தன் வெந்நோக் குறச்சினந்தான்
மேலைவரு பண்புணரா வேந்து. (௧0௨)

அந்தைதிறல் கொண்டனனென் றன்னவன்மேல் வச்சிரவே
லுந்துதலு நம்பன்மே லுற்றொடிந்து—நந்தியது
நித்தன் கணவுருவ நீங்கி யுருத்திரமா
நத்துருவ முற்றா னயந்து. (௧0௩)

செய்ய விதழ்துடிப்பச் செவ்வாய் முறுவலிப்பத்
துய்ய புருவநெற்றி தொட்டுலவ—வையரிகொ
ளொண்டிருக்கண் சேப்ப வுருத்திரமா வெய்யவுருக்
கொண்டுருத்து நின்றனனெங் கோ. (௧0௪)

நிற்கின்ற வெம்பெருமா னீள்சினத்தைப் பார்த்துநெஞ்சக்
கற்குன் றலையக் கழல்விழுந்தே—யெற்கு
னுழையுறுமா மாயை யுருத்தெரியு மோவென்
பிழைபொறுத்தி யென்றான் பெரிது. (௧0௫)

போற்றிப் பணியும் புரந்தரனை யஞ்சலென்று
சீற்றத்தீ மேல்கடலிற் செல்லவுய்த்தே—யாற்ற
விடையவற்குத் தந்தேவி வெள்ளிவரை மேன்மின்
னிடையோ டுறைந்தா னிறை. (௧0௬)

சிவன்மந் திரமேவச் சீற்றமொரு சேயா
வுவரியின்கட் டோன்றமன்ன னோர்ந்து—தவமகிழ்ந்து
தன்றிரைக்கை யாற்றழீஇத் தானவே சன்மகனே
யென்றுமே வாழியென்றா னேய்ந்து. (௧0௭)

செம்மல் சிறிதழலுஞ் சேண்பார் திசையாவு
மம்ம செவிடுபட்ட வஞ்சத்தன்—விம்மலுற்றோர்ந்
தாழியுற வஃதன்பி லாசனமிட் டாங்கிருத்தி
வாழியென்சேய் காண்டியென்றான் மற்று. (௧0௮)

கைநீட்ட வாங்கியையன் காமர் மடிசேர்ப்ப
வெய்துபுல்ல னந்தொடர்ந்தீர்த் தேதூங்க—வெய்துநெய்த்தோர்
துன்னவயன் கண்ணீர் துலங்கருவி யாயோட
வின்ன னனிசொண்டா னேய்ந்து. (௧0௯)

பதுமன் மயிர்த்தொகையைப் பாலன்கை நின்று
கதுமெனவே வாங்கிக் காத்தா—லுததிதன்னை
நீட்ட விறைஞ்சினந்து நீயிதுகே ளீங்கிவன்மன்
றாட்டன் முனிவுதித்தா னங்கு. (௧௧0)

கருதிடா னெந்தக் கடவுளையும் வேண்டா
னொருவாமு மீறிலா னுன்னு—மொருவன்றன்
சீற்றத் துதித்தமையாற் றேவருமற் றேவருமே
யாற்ற மெலிவா ரவற்கு. (கககூ)

ஏவனுநேர் நில்லா ரிமையோ ரிசோப
மேவுமவற் சாருமோ வெய்யவற்கே—யேவமுற்று
நாளுமஞ்சு வன்மா னமனுமஞ்சு வாருயர்ந்த
வாளுமஞ்சு மண்ணுமஞ்சு மற்று. (ககஉ)

பாசனங்கள் போற்றவெங்கோல் பார்செலுத்தி யாங்குளா
ராசிசெய மேவி யரசுசெய்வ—னீசனன்றி
யார்வெல்வ ரென்னவிவற் கேபெயர்சல் கென்னவயன்
பேர்சலந்த ரன்னென்றான் பெட்டு. (ககங)

பேரிட் டயனேகப் பெருந்தி பற்பகன்மா
சீரிற் பரிந்தளிப்பச் சேய்வளர்ந்து—பாரிற்சேர்ந்
தாரவுணர் சூழ்தரவென் றுசைகள்விண் ணோர்திருவஞ்
சோரவெம்மை செய்தான் றிரிந்து. (ககச)

பொன்னகலந் தன்னிலும்பர் போயுறைய வாளுடு
தன்னையொப்பான் றனவர்க்குத் தந்திமையோர்—மன்னகர
நச்ச வொருநகா நல்செனவன் ஞனசுரர்
தக்குன் சமைத்தான் றக. (கரு)

ஏந்த னகரி லிடையெழுந்கூர் காரவுணர்
வேந்தர் தொழுவாசின் மேயினு—னேந்தகைய
காலநே மித்தருவன் கன்னி விருந்தைதனை
யேலமணந் தின்பமுற்று னேய்ந்து. (ககசு)

பாரினெவ காள்வதிந்தான் பண்ணவர்க ளேவருமே
மேருவுற்று ரன்னவரை மேவியாம்—போரிழைப்போ
மென்றுநவின் றேகவிங்க னெய்தினனென் செய்வமெனுத்
துன்றரிகாண் டோலினெந்தார் சோர்ந்து. (ககஎ)

மான்றெவரு மாலையுன்ன மற்றவன்புள் ளேறிவந்தஞ்
ஞான்றவரூத் தீயோ னமர்க்கெழுவு—மேன்றிருபா
னுயிரமாண் டாற்றியும்போ ராகவத்தில் வெற்றியின்றிப்
போயினன் மாயோன் புகழ்ந்து. (ககஅ)

மரியன் கொடியனுடு மண்டமர்செய் காலையண்டர்
மேய வலாரிவெள்ளி வெற்படைந்தார்—சேயொன்றூர்
மன்னியசீர்த் தென்கயிலை மால்வரையுற் றுரென்ன
வுன்னியா ஞர்போந்தா னுற்று. (ககசு)

ஆண்டா ரனிகமோ டங்கயிலை யண்காலை
வேண்டாவேண் டாங்த்தன் மேற்பொருதான்—மாண்டாயே
யென்றுமனை கூறனன்றென் றெண்ணான்சலந்தரனுந்
துன்றுபெயர்ப் பண்பினன்றான் சூழ்ந்து. (௧௨௦)

சோனா முகில்போற் றுலங்குபடை மாரிபொழி
சேனாயூ கஞ்சூழச் சீர்மைந்தன்—போனான்மா
வெற்பொருசா ரஃதுணர்ந்து வேந்த னமரரொடு
விற்பொனவிர் கோயிலுற்றான் வேர்த்து. (௧௨௧)

நந்தியடி தாழ்ந்துரைப்ப நம்பனரு ளாடியே
யுந்திடவேந் தேகியா னெண்சரண்டாழ்ந்—தெந்தை
சலந்தரனென் னாமத் தகுவனெமை வாட்ட
நலந்தருமூர் விட்டிரிந்தே னான். (௧௨௨)

வெந்துயரின் மேருவின்கண் மேவி யொளித்திருந்தே
னந்தவனந் தேர்ந்தங் கவன்வந்தா—னந்தரியைப்
புந்திகொளப் போந்து பொருது புகழ்ந்துசென்றான்
வந்ததிங்குக் கேட்டான் வலிந்து. (௧௨௩)

ஈங்கும்வந் துற்றனனி யாது கருதியோ
வாங்கதுதேர் கில்லே னளியனின்ன—ரீங்குளா
னுடலகற் றென்னவரீ யல்லலொழி கென்றகற்றி
யாடலொன்று னோர்ந்தா னரன். (௧௨௪)

நான்றருண்டி கைய னரைதருயாக் கையன்கோ
லூன்றுகைய னோலையத்த னெண்டவர்போற்—றோன்றியா
னம்மலையின் பாங்க ரணுகு மவுணர்தஞ்
செம்மலைநேர் கொண்டணினான் தேர்ந்து. (௧௨௫)

எங்குளா யாரைநீ யெய்ந்தெவரை நேடியே
யிங்குறுகின் றாயுரையா யென்றியம்ப—வங்கணன்முன்
சாற்று சலந்தரனென் றானவன்போர் சம்புவுட
னாற்றவந்தே னீண்டென்றா னாங்கு.

அந்த வுரைவினவி யண்ணலெண்ண நன்றுநன்றென்
றெந்தை புகழ்ந்தாங் கிகழ்ந்துசொலி—நந்திதன்பா
லல்கொருவ னனவனோ டாற்றினமர் மாய்தியுய்யிற்
செல்கமீண் டென்றான் றெரிந்து. (௧௨௭)

ஐயனுரை கேட்டவுண னானலிற் சீறியே
மெய்யில் வியர்வெழவே வெய்துயிர்த்துத்—துய்ய
சிறிய னெனநினைந்தீர் செய்திறத்தை யெல்லா
மறிகுதிர்நீ ரென்றனனிங் கார்ந்து. (௧௨௮)

என்றினைய கூறவன்னான் யாமுனெறும் காணவந்தே
மென்றடியாற் கீறிமண்மே லேய்திகரி—நன்றிதனைச்
சென்னிமே லேற்றித் திறத்தாற் கொளவலையோ
வென்ன நவின்றா னிறை. (௧௨௯)

புங்கவரை வென்றேன் பொருகங்கை நீரடைத்தே
னங்கி யவித்தே னரியைவென்றே—னிங்கிதுதா
னெற்கரிதோ வென்றெடுத்தா னெணிறந்தோள் வைத்துயிர்த்தே
யற்கரிய சென்னிவைத்தா னாங்கு. (௧௩௦)

பரிதியாந் தேவப் பதகனுடல் போழ்ந்தே
யொருவன்கை யுற்ற துலவுங்—குருதிப்
பெருக்கதல மேகவுய்த்துப் பெம்மான்கட் டீயாற்
றிருக்கவுணர் சேனையட்டான் றேர்ந்து. (௧௩௧)

தொன்னலுருக் காட்டிநிற்பச் சோதி புரந்தரன்முற்
பன்னமரர் போற்றப் பரிந்தவர்க்கு—முன்னரசு
நல்கிவிடைதந்து நற்கயிலை மேவியங்கோர்
மல்குமையோ டுற்றிருந்தான் மற்று. (௧௩௨)

வீந்தவன்றன் றேவிதனை வேட்டு விரதியர்போற்
சேந்தவிழி மால்கரவிற் நீங்காவிற்—போந்திருந்தா
னங்கண் விருந்தை யவுள்கேள் செயனுணராள்
பொங்கவினை வுற்றாள் புலர்ந்து. (௧௩௩)

பரிதலுற்றாள் சோர்ந்தாள் பதைத்தாள்சொல் லாடா
ளிரிதலுற்றாள் செய்குவதோர் கில்லா—ளொருவிந்தை
மேவினனில் சூழ்காவில் விண்டுபதக் காவலர்தா
மாவரியாய்ச் சாரநொந்தாண் மாது. (௧௩௪)

மடந்தையிரிந் தோட மடங்கலுரு வானோர்
தொடர்ந்துவரச் சோர்ந்து துருமத்—திடந்தவனைச்
சாரவஞ்ச னீயென்றான் றாக்கவந்தோ ரோடவிவ
னாரியனன் றென்றுரைப்பா னன்கு. (௧௩௫)

எந்தைகே ளென்றலைவ னீசன்மேற் போர்க்கடைந்தான்
வந்திலா னின்னமுமே மாய்ந்தனனோ—வுய்ந்துளனோ
சோதியென மால்படைஞர் சூழ்குராங்கி னீருருவாய்
வீறவுணன் மெய்யுளுற்றார் வேட்டு. (௧௩௬)

அன்னவனீர் யாக்கையைக்கொண் டாரணங்கின் முன்னிடக்கண்
டின்னநடுக் குற்றுவீழ்ந் தோர்வகன்று—டுன்னி
வருந்தலையின் னீயென்னா மாயனெடுப்ப
விருந்தை தொழுதுரைப்பாள் வேட்டு. (௧௩௭)

நின்னோர் தவறில்லை நீயெனுயிர் காத்தியே
யென்னைய வீர்மெ யிசைத்தவயி—ரின்னே
நாருதிநீ யென்னைச் சமைத்துடல்லவை குற்றான்
கருதியல்கூர் மாயன் களித்து. (௧௩௮)

மன்குரங்கி னுற்றார் மறைந்தார் சலந்தரன்ற
னன்குடன்மா லுற்றெழலு நாரிகண் ணுற்—றென்கணவ
னுய்ந்தனனென் றுள்ளத்தி லுன்னித் துயரகன்று
வந்தனையற் புல்லினளா வாய்ந்து. (௧௩௯)

புல்லியவம் மின்னைப் புணர்ந்துமால் பற்பகல்வே
ணல்லியனா லாறே நலனுகர்ந்தான்—வல்லியத்த
னுணையின்மன் மாய மயர்த்துறங்க வஞ்சனெனு
வீணையின்சொன் மாதகன்றாள் வேர்த்து. (௧௪0)

அருந்ததிநேர் கற்பழிந்த வாற்றான்மாற் கோதும்
வருந்தி மடங்கலாய் வந்தோர்—பொருந்திடுநின்
மேவலராய் மேவநீ வேந்தனாய் மேதினியிற்
றுவுகுரங் கோடுதிரி சார்ந்து. (௧௪௧)

பொற்பார் கணவனைப்போற் போந்தணைந்தாய் தெவ்வருன்றன்
கற்பார் மனையைக் கவர்ந்தேக—வற்பார்
பழிசுமத்தி யாலெனத்தீப் பாய்ந்திறந்தாண் மூன்மா
லழியுடனீ ருடிநொந்தா னங்கு. (௧௪௨)

அத்துணையில் வானோ ரயன்கயிலை யேகியே
நித்தனைநன் கேத்திமா னீர்மைசொலச்—சத்திதேர்ந்
தோர்வித்தைத் தந்தரிமு னுற்றிடுதி ரென்னமைந்த
னோர்வத்தின் வாங்கினு னங்கு. (௧௪௩)

வேதனதைக் கொண்டு விருந்தைநீ மத்துவித்தி
யோத வமுதுபெய்ய வோங்கரிமுன்—மாதுளவா
மன்னியதுமாதாக மாலகலம் மாற்கமரர்
கன்னிதனைச் செய்தார் கடி. (௧௪௪)

கடியார் துளவமாங் கன்னிதனைக் கொண்டொண்
டொடியாரிற் பல்போகந் துய்த்து—முடியாகம்
வேய்ந்தவுணற் கொல்படையை வேட்டான்றாள் கண்மலர்தூய்
வாய்ந்தபடை பெற்றனனே மால். (௧௪௫)

மாலா யிரம்பூவை வண்காத்தாற் கொய்தர்ற்கிட்
டேலாழி யின்சிறுமை யின்னீங்கி—மேலாம்பா
லின்சுவைமா வாழி யிடைவளர்வோ னேமியா
னென்பெயரும் பெற்றா னினிது. (௧௪௬)

இந்நான் குகத்தெல்லை யீரா யிரமென்றோர்நாள்
பன்னு ளவைமுப் பதுமதியஃ—துன்னு
றிரண்டாண்டே நூறெய்தி னெண்கணன்சா மந்நாண்
முரண்டார்மாற் கோர்நாளா முன். (கசஎ)

ஆயதன்மை யாலரிக்கு மாயுமே மாயுமெண்ணின்
மேயவுயிர் தேயுமண்டம் வீயுமெங்குந்—தீயுலவும்
தோன்றகில மீமமாய்த் தூநலங்கொள் சூழலின்கட்
டான்றனிக்கூத் தாடுமே சம்பு (கசஅ)

தேயும் பிரளயத்திற் செப்பறத்தின் மறயவமஞ்சி
வீயுதுமேல் யாம்புரிதன் மேவியென்னென்—னையுற்றீ
றில்லான் றனையடையி னீறெய்தே னென்றெழில்கூர்
வல்லானே றாயதே மற்று. (கசகூ)

ஏற்றுருக்கொண் டீசனைச்சார்ந் தேத்தியான் பொன்றுதன்மை
மாற்றிவலி நல்கிநிற்கு வாகனமாம்—பேற்றையருள்
கென்னவிறப் பின்மைபரி யேற்றலெறு ழன்புணர்ச்சி
யின்னதந்தான் குண்டைக் கிறை. (கரு0)

சதுர்வகைத்த மாயுகத்திற் றன்மத்தின் றன்மை
யிதுவெனநான் மூன்றிரண்டொன் றேய்ந்த—பதமுறையே
யூன்றிமண்ணிற் சேறி யுனதிடத்தி லென்றுமுளோ
மேன்றமைமேற் கோடி யினிது. (கருக)

எண்ணுமன்பர் செய்பாவ மேய்புண் ணியமெண்ணார்
பண்ணு மறமெல்லாம் பாலமருந்—திண்ணமது
தொண்டர்செய் பாவமற்றோர் துன்னறமு மேதிரியா
வொண்டுமுனை நீங்கிலம்யா முற்று. (கருஉ)

உன்னிடையா முள்ளோரீ யூர்தியா மன்னலல்ல
தின்னு மொருவடிவுற் றெம்மைப்போற்—றன்னதுணர்
கென்ன வருளியா னேயறத்தே வைப்பரியா
மன்னவருள் செய்தான் மகிழ்ந்து. (கருங)

அந்தநா ளாதி யரனையுட்கொள் ளன்பர்மு
னந்தியா மூர்த்திமே னன்மைசெய்வான்—வந்தருளுஞ்
சாற்றுவிடைக் கேணளித்தல் சம்புணர்ந்தன் றோபுரத்தி
லேற்றுருவாய் மால்சுமந்தா னேய்ந்து. (கருச)

நிருத ருடனவுணர் நேரமரார் நேர்ந்து
திருகுநெஞ்சி னோர்பகல்போர் செய்ய—விருதிறத்தும்
வீய வமிதரமர் விட்டவர்பன் னூட்பொரலோர்க்
கெய்யன்றூட் டாழ்ந்துரைப்பா ரீது. (கருரு)

ஒல்கும் வயதை யுடையரோம் பற்பகல்செய்
மல்கிரும்போ ராற்றுவான் வாரிகடைந்—தல்கலிலா
வின்னமிர்தை வாங்கி யெமக்கடிகே ணல்குவா
யென்னவயன் சொல்வா னெடுத்து. (கருசு)

மாயற் கிதுகவில்வோ மற்றவனே வேலைமதித்
தாய வமுதளிக்கு மன்னதுண்டால்—வீயமெனுப்
போதனவ ரோடும் புணரிபுகுந் தாங்கேத்த
நாத னெழுந்தா னயர்ந்து. (கருஎ)

நீவி ரிவண்வந்த நீர்மையென்கொ லென்னமால்
பூவி லயனவுணர் புங்கவர்கண்—மேவரசர்
வேண்டு குறையை விளம்ப வதற்கியைந்தே
யீண்டளிக்கு மாலருளா லிங்கு. (கருஅ)

அருள்செய் தெழுமா லவிர்மந் தரத்தை
யுருண்மத் தெனநிறீஇ யுள்ள—பொருண்மதியை
மன்மதலை யாப்புரியா வாசுகியை நாணாக
வன்மையுற யாத்தான் மகிழ்ந்து. (கருகூ)

ஒருபா லமரா ரொருபா லவுண
ரிருபாலு மீர்ப்பநல்கி யேனோர்—தருபார
மத்தடியோ டேர்முடிதன் மன்மெய்ப் புறங்கீறத்து
னத்தன் பரித்தா னயர்த்து. (கசுo)

ஆழிவாய் விட்டதிர்ப்ப வம்மேரு வுஞ்சலிப்பப்
பாழிமத வேழம் பதைத்துயிர்ப்ப—வூழிற்
கடைந்து கடலைக் கலக்கக் கயிறு
யடைந்த பணியயர்ந்த தாங்கு. (கசுக)

சாலக் கனன்றரவந் தன்வாய் தொறுமாலங்
காலக் கடலுங் கடுவுமிழ்ந்த—தேலக்
கடைக்கோடி கார்நமன்றீக் காலின் விடநா
றுடைக்கோடி யிற்பரந்த தாங்கு. (கசுஉ)

ஓடுநெஞ்சஞ் சூழ வுலைந்தவுணர் வானவர்த
மோடு முனிவரு மோடலுற்றார்—நீடுலக
மாக்குமவ ரோடலுற்றா ரஃதுணர்ந்துங் காப்பமெனு
வீக்குவிட முன்னடுத்தான் விண்டு. (கசுங)

மூடுகிவரு மால முராரிமேற் றாக்கி
யடுகரியின் வண்ணமே யாக்கக்—கடுகியெதிர்
மான்முதலோர் கில்லார் மருண்டிரிந்தே யேவர்க்கு
மேன்முதல்வன் கைலையுற்றார் வேர்த்து. (கசுச)

நந்திகழல் போற்றி நவிவுரைப்ப மற்றவரை
யந்தினிறீஇ மாலயன்றிக் காள்பவரை—யுந்திமுன்பி
னீங்கிருத்தி ரென்றியம்பி யேத்திருவர் தம்மையரன்
பாங்கினிற்கொண் டுய்த்தான் பரிந்து (௧௬௫)

சாற்றிருவர் தாம்பரமன் றன்னைத் தரிசித்துப்
போற்றிநிற்ப மானின் புரமேனி—வேற்றுருவ
மேய்ந்ததென்கொ லென்ன விறைவனன்னான் மானமுளம்
வாய்ந்தனைத்துஞ் சொன்னான் வகுத்து. (௧௬௬)

உன்னல் லருள்பெறா தோதஞ்சேர் தந்தின்ன
வின்னலுற்றே நின்னெழிற்றா ளெய்தினோந்—துன்னவிட
மாயதனை மாற்றி யளியேங்க டங்களையே
நீயருள்செய் கென்றனன்மா னோர்ந்து. (௧௬௭)

மற்றவர்த மார்ப்பு வரன்வினவி யாங்கழைப்ப
வுற்றவர்தாம் போற்றி யுறுவிடத்தா—லற்றமுற்றோ
மன்னதனை ஈந்தி யடியர்க் கருள்புரிதி
யென்ன நவின்றா ரினைந்து (௧௬௮)

ஈதறிந்து மேலோ னிறைவியைப்பார்த் துன்னெண்ண
மாதறைதி யென்னநின்னை வந்தடைந்தா—ராதலினு
லன்னார் தமக்குவல்லை யன்பினருள் செய்தியென்றான்
மின்னு ரிடையாள் விழைந்து. (௧௬௯)

அந்தரியின் சொற்கேட் டரன்மகிழ்ந்து தொண்டுசெயுஞ்
சுந்தரனை நோக்கிச் சுடுவிடத்தை—நந்தமுன்னர்க்
கொண்டடைதி யென்னவதைக் கோலன் கொணர்ந்துய்ப்ப
துண்டிவலை யாக்கினா னெய்து. (௧௭0)

அத்தனெழி லத்தமல ரத்தத்தி லத்திவலை
வைத்திதனை யுண்கோ வருஞ்செய்மை—யுய்த்திடுகோ
வென்னவர நின்னையன்றி யார்தொலைப்பார் யாங்களுய்வா
னன்ன துண்டே யாள்கென்றா ராங்கு. (௧௭௧)

கொன்றைமிலை வேணிக் குழகனீ ரஞ்சலி
ரென்றுவிட முட்கொள்ள வேத்திமையோ—ரின்றெமுயிர்
காத்தற்குச் சான்றாக் களத்திலதை வைத்தருளென்
றுத்தற் றுதித்தா ரவண். (௧௭௨)

போற்றலுமெங் கோன்விடத்தைப் பொற்பிற் களநிறுவி
யாற்றவருள் செய்தவரை யங்கணுற்றுப்—பாற்றிரையார்
மாமினீன் வாரி மதிக்கினமிர் தண்டாகும்
போமினீ ரென்றான் புரிந்து. (௧௭௩)

போனவர்முன் போலப் புணரிகடை போதமிர்த
மேனவியன்பொருள்க ளேய்ந்துவந்த—வானவர்தாம்
பெற்று ரவையாலம் பெம்மா னயின்றதே
னற்று ருயிரளித்த தன்று. (௧எ௪)

கடவுளெங்கோன் பின்னழிக்குங் காலையெலா மோவு
மிடமதே யீமமதி லீச—னடநவிலு
மெல்லை தகைத்தஃதவ் வீமமின்னுந் தானுமுறு
மொல்லை யதுதவறே வுன். (௧எ௫)

ஐயனையோர் ஞான்றையை யங்கயிலைப் பொங்கரிற்செங்
கையிரண்டா லாடலுன்னிக் கண்புதைப்பச்—செய்யகதிர்த்
திங்க டினஞ்செய்வோன் றீயேனச் சேயொளியுங்
கங்கு னிறம்படைத்த காண். (௧எ௬)

தன்னே ரொருவரிலாத் தற்பரன்றன் கண்ணிரண்டு
மின்னேய்கை யாற்பொத்த மேவுகண—மன்னேரப்
பன்னுயிர்கட் கெல்லாம் பலவூழி யாகநொந்த
வன்னதன்மை யோர்ந்தா னரன். (௧எஎ)

சங்கரன்றன் பாலந் தனினடுவோர் காட்டநல்கி
யங்கதனு னேக்கியிரு ளாங்கொழித்துத்—திங்கண்மு
னேனவர்க்குஞ் சோதிதந்தா னெவ்வுயிரு மேசிறந்த
மேவற் குழல்பணித்தாள் வேர்த்து. (௧எ௮)

அங்கரன்கண் மூடுந்தன் னத்தந் திறக்குமெல்லை
யங்குலியீ ரைந்துமச்சத் தால்வியர்ப்ப—மங்கைகண்
டங்கை விரல்க ளவண்விதிர்ப்பப் போந்துசெழுங்
கங்கைபத்தாய் வாரியுற்ற காண். (௧எ௯)

கூறு பிரானூறு கோடி யணிமுகங்கொண்
டாறு வரவதுகண் டஞ்சியயன்—மாறுன
முற்று ரெவரு முறப்போற்றி யொண்கயிலை
முற்று வரற்பணிந்தார் முன். (௧௮௦)

அடிமலர்தாழ்ந் தெந்தா யறிகிலமோர் நீத்தங்
கடலென யாண்டுங் கறங்கி—முடிவுன்
பிரளயநீர் போன்றவிதைப் பெம்மான் பரித்தக்
காளமெனக் காத்தியென்றார் காய்ந்து. (௧௮௧)

நின்றோர் வியப்ப நினைந்ததைக்கூய்ச் சம்புசடை
யொன்றே ருரோமத்தி னும்பருய்ப்ப—மின்றோகை
யத்தமுற்றுன் கம்முறலா லன்னதிலெம் மூர்வைக
வத்ததன்ன நல்கென்று ராங்கு. (௧௮௨)

இறைவேணி யுள்புக் கிருந்தநீர் தன்னிற்
சிறிதெடுத்து மூவர்தஞ் செங்கை—செறியநல்க
மேவுமன்பிற் றாழ்ந்து விடை யேற்றுத் தத்தநகர்
தாமதனைக் கொண்டெய்த்தார் சார்ந்து. (கஅங)

அந்நதியோர் மூன்றி லயனூர் புகுந்தகங்கை
மன்னும் பகீரதன்றன் மாதவத்தாற்— பின்னருமே
மீளவிறை மாமுடியின் மேற்றாங்கி யிவ்வுலகி
னாளுமிறை செல்லவிட்டா னன்கு. (கஅச)

நானிலமே லுய்த்தகங்கை நற்சகர ரென்பிற்பாய்ந்
தானகதி சேரவவ ராழிபுக்க—தேனையவை
யங்கிருந்த நங்கையங்கை யம்மடக்க வேணியிசை
மங்கைகொண்டா னென்பர் வரன். (கஅரு)

தொல்லையோர் கஞ்சத்தன் றோன்றி யிருந்திடுநாட்
பல்லுயிர்கள் யாவும் படைப்பதுன்னி—வல்லை
சனகன்முன் னால்வர் தனயரைமுன் னல்க
வனசர்தவ ராகியுற்றா ராங்கு. (கஅசு)

அன்னதற்பின் போத னளிப்பதுமல் காதாக
வின்னலிலாழ்ந் தேயா தினிச்செய்வ—தென்னமுன்
முன்னுசிறா ரோடு முராரியிட மெய்தியவன்
றன்னடிதாழ்ந் தோதிநின்றான் றான். (கஅஎ)

மாலிதுமுற் றாதநம்மான் மன்னிறையோ னன்றியென்னு
வேலவரோ டொண்கயிலைக் கேகியான்—பாலிறைஞ்சி
கூறுங் குறைகேட்டுக் கோமா னவர்ப்பாரா
வீறுசெய்தா னொய்தனவே யேய்ந்து. (கஅஅ)

ஏகனே யாகிவைகு மெந்தையிடப் பாலான
வாகுதனை நோக்கவங்கு மைதோன்றப்—பாகத்
திருத்தி யவட்கலப்புற் றேய்ந்தரியெண் கண்ணன்
றிருத்தனயர்த் தந்தான் றெரிந்து (கஅக)

நீந்துழியெங் கோவைத் தனயரல ரோன்மால்
வந்தனைசெய் தேத்தவரி வத்திரம்பார்த்—தெந்தமரு
சீரணங்கி னோடினிது சேர்ந்தா மயன்செய்கை
யார்முற்றும் போதியென்றா னாங்கு. (ககO)

என்னலுமே யோகையெய்தி யாமினியுய்ந் தோமென்ன
வன்னையத்தன் றன்னைவல மார்ந்தேத்தி—பின்னருமே
தாழ்ந்து பெயர்ந்தார் சலசத்தோன் பின்புயிர்கள்
வீழ்ந்து விதித்தான் விரைந்து. (ககக)

வேதன் றொழின்முற்ற மேவருளை மின்னுக்கி
நாதன் கருணையினா னண்ணுவதா—மீதுணரா
யேனையர் போல விறையோன் றனைமதித்தாய்
ஞானமிலா யோத்தரியாய் நன்கு. (சகஉ)

ததீசி யுத்தரப்படலமுற்றிற்று.

ஆக திருவெண்பா. சஅசு.

## கயமுகனுற்பத்திப் படலம்.

இந்திரன்முன் னோர்நா ளிமையோர் படையொடும்போய்
வெந்தகுவர் வேந்தைவென்று வெற்றிகொடு—கந்தருவர்
போற்றநக ருற்றான் பொருதுவெட்கி வெய்யனினி
யாற்றுவதென் னென்றினைந்தா னங்கு. (க)

போரமர ரோடு பொருதுவெற்றி யெற்களிப்பார்
யாருளா ரெங்குலத்தி லென்றுரையா—வார
வெருவிடமே யன்னான் வியக்குந் தனாது
குருவிடமே போய்ப்பணிந்தான் கூர்ந்து. (உ)

மன்னளித்தேன் மாலை மகவானோ டேற்றமரில்
வென்னளித்தேன் வீரருமே வீந்தனர்மா—வின்னலுற்றேன்
வைதிறனுங் கொண்டேன் மருவவுணர் சாமெலைவந்
தெய்தியதோ கூறு யிவண். (ங)

தேர்வில் சிறுவர்தாஞ் சீரிற் பிழைப்பரே
லார்வி லுறுதிதெளித் தன்னவரை—யோர்விலுயர்
செய்வா னெறியாக்க றேசிகனார் தங்கடனு
மூய்வா னுரைத்தியென்று னோர்ந்து. (ச)

அன்னவுரை கேளா வரசனே யுன்னுளத்தி
லின்ன லுறேனீ யெனத்தேற்றிப்—பின்னுறுவ
வுன்னி யறிதலுமா லுந்திவந்தோ னோர்விலுற்றான்
முன்னும் வசிட்ட முனி. (ரு)

வன்போ டவன்மரபில் வந்துதித்தோன் மாகதன்று
னென்போன் மறையுணர்ந்தோ னேய்கதியைத்—தன்போவ
வீங்கடைவ னென்று விருமா தவந்தனை
யாங்கடைவி லாற்றலுற்றா னாண்டு. (சு)

ஆயவன்பா லின்றே ரசுரமின்னைத் தேற்றிநீ
யேழ்ஜையே லன்னவெய்தி யேயவனை—மேயினவ
ஞேர்வேழ மாமுகத்த னுங்கள் குலந்தோன்றித்
தார்வேந்தாய்ச் செய்வான் றவம். (எ)

நற்றவஞ்செய் தன்மைகண்டு நம்பனெறும் செல்வநல்க
மற்றவன்மன் வானவனசீர் மாற்றிமும்மை—யுற்றவுல
காளுமா சென்றறைந்தா னுசா னதுகேட்டுத்
தாளிறைஞ்சித் தக்கதென்ருன் ரூன். (அ)

திண்புகரு மற்றே செயச்சென்மோ வென்னமன்னன்
விண்புனையு னெய்தி விபுதையென்றே—ரொண்டொடியாங்
கன்னி குலத்துவந்தாள் காரிகையை யெய்தியன்று
மென்னிடைத் தீர்த்தியென்று னீண்டு) (கூ)

மன்னனுரை கேட்டணங்கு மன்னினடித் தொண்டுசெயுங்
கொன்ன னிருதர் குலத்துவந்தே—னுன்னுனக்கிங்
கென்று விசைவிசைத்தி யென்னவும்பர் தம்மைவெல்வா
னுன்று னுறவேண்டு மொன்று. (க0)

ஒன்றதற்குக் கேட்டியே தொண்பொன் வரைத்தென்சார்
மன்றவரு னோன்புபயின் மாசுதன்பாற்—சென்றங்
கவஞ்சிதைக்கு மன்று னமயம்பார்த் தாற்றுந்
தவஞ்சிதைத்துச் சேர்தி தக. (கக)

சேருதியே லாண்டோர் சிறுவனின்பாற் றேன்றிப்பா
ராருலகின் மேற்புதங்க ளார்ந்துவெளவி—வீரனுய்த்
தெவ்வானேர் தம்மையுட்டெஞ் செல்ல றுடைக்குமன்று
மவ்வா றமைதியென்று னுங்கு. (கஉ)

வேந்தனுரை கேட்ட விபுதையந்த மாமுனிபாற்
போந்துமகற் பெற்றேய் புலன்மீள—னேந்தனீ
யின்னலுறே லென்றேகி யேமவரைச் சார்பெய்தி
யன்னவன்பா லுற்று ளணங்கு. (கங)

மாசுதன்றன் பாலுற்றுண் மாதவத்தின் மாட்சிகண்டே
யாகொடிதிந் னோன்பிவனன் ருர்புரிவார்—மோகமிழைத்
தெவ்வா றிவற்புல்வ தெய்யுமதன் கோன்மாரி
துவ்வா வொழிக்குந் துறவு. (கச)

ஏர்செய்தவத்தனவன் யானல்ல மேனகைமுன்
யார்வரினு னோக்கா ளிறைவனிஃ—தோர்வின்றிச்
சேர்திநீ யென்றான் றிறனன்று மீண்டுமன்னி
ஞேர்மன்னன் மீளவுய்ப்பா னுங்கு. (கரு)

ஏற்றவன்பி னெய்தியிவ னெற்கே வாஞக
நோற்றமயம் பார்ப்பனெனு நோன்பரன்றான்—போற்றியுன்னி
வன்றிறனேன் பாற்றும் வரமுனிவ னோர்நின்று
மின்றவம்பன் ஞட்புரிந்தாள் வேட்டு. (கசு)

மாது தவத்தால் வரன்முறைவ ழாவூழி
னேதுவா லங்க ணிருங்களிறு—காதலுறு
மோர்பிடியி னேடுற் றுடன்புணரக் கண்டுதவ
ஞர்வமுற நோக்கினு னங்கு. (கஎ)

மறந்தான் மனுவை மனமார் பொருளைத்
துறந்தான் விரகவெந்தீச் சுட்டே—யிறந்தான்போ
லஞ்சியயர்ந் தம்முனிவ னந்தோவென் செய்வனெனு
நெஞ்சில் வினவலுற்று னேர்ந்து. (கஅ)

விடந்தலைக்கொண் டாங்கமோ வெங்காமச் செந்தீ
யடங்குவதி லென்றுபுணர்ப் பாசைத்—தடம்படிவான்
போவதற்கெண் போதுமுனி பூவையெண்ண முற்றிற்றென்
றுவன் மகிழ்வுற்று னாங்கு. (கக)

ஈங்கிதுபோ தாகு மிடமிதற் காம்வேறு
நீங்கிலைசெய் நோன்பிணங்கச் செய்ததெஞ்—வாங்குநுதன்
மின்னெழுந்து வல்விரைவில் வித்தகன்பான் மேவியன்ஞன்
பொன்னடியிற் றுழ்ந்தாள் புரிந்து (உ0)

நுண்ணிடைமெய் யங்கமுற்று நோக்கிமுனி மாழாந்து
பெண்ணணங்குங் காந்தருவப் பெட்பினெய்தி—னண்ணுமுயி
ரென்றுனியார் நீகனியோ வென்னவதா மென்னநம்பாற்
றுன்றிவந்த தென்கொலென்றான் சூழ்ந்து. (உக)

திருந்திழையு மாமுனிநீ செய்ய வாஞக
விருந்தவஞ்செய் தேன்முற்றிற் றின்றே—பொருந்தினனீண்
டுன்னையான் புல்கவந்தே னேகையோ டென்னவன்ஞ
னுன்னமதி லுற்று னுவப்பு. (உஉ)

என்றவமு மென்னே டிணங்கநீ செய்தவமு
மொன்றியன்றே வுன்னை யுறக்கூட்டிற்—றென்று
கடியார் களிற்றிற் கலப்புறுவ நீயும்
பிடியாதி யென்றான் பெரிது. (உங)

மெல்லியலு மோர்பிடியாய் வித்தகனு மோர்களிறாய்ப்
புல்லியபோ தாங்குப் புணர்ச்சியின்கண்—மல்லின்
வயமுகத்தண் ணண்டர் வயங்கவுண ஞடுங்
கயமுகத்தன் வந்தான் கடிது. (உச)

விற்றின் பலகையொள்வாள் வீசினன்மா ஞாலமெலாஞ்
சுற்றினன்மா வோங்க றுகள்படவே—யெற்றினன்கா
ரேயுருமே றஞ்ச விரட்டினன் மூவுலகுந்
தீயன் பிரிந்தான் சினந்து. (உரு)

அப்பிடியு ரோம மளப்பில் லனவற்றிற்
செப்பெயிற்றுப் பேழ்வாய்ச் செறிபங்கி—யொப்பிறிறல்
வீரர் தெழித்தெழீஇ யின்படைகண் மன்கையுற
வாரெண் ணிலருதித்தா ராங்கு. (உசு)

இன்னரொடு கூடி யிபமுகத்த ஞர்த்தீ
தன்னை யளித்தோர் தளர்ந்திரிந்து—மன்னெழில்கூர்
முன்னுருவங் கொள்ள முனியுணர்வு தோன்றிடவு
முன்னி யிரங்கினைந்தா னுற்று. (உஎ)

காமவலை நீங்குமுனி காந்தி தனைச்சினந்து
நீமன் குலம்யாதென் னேர்ந்ததென்ன—வாமுறையே
கூறிநிற்ப மாகதனுன் கூருயிர்கட் காக்குவித்தேன்
சாறுயரென் றேங்கிநொந்தான் றான். (உஅ)

சிறிதிரங்கித் தேறித் திருமடந்தை நங்கோன்
செறிமெலிவற் றுன்னெண்ணஞ் சேர்வா—னெறியிற்
கடிந்தியான் செய்தவமுங் காண்மூன் றுலகு
முடிந்ததீ போதியென்றான் முன். (உகு)

பொன்னடிதாழ்ந் தன்னுள் பொருக்கெனப்போ யீதெல்லா
மன்னவன்பாற் கூற மகிழ்ச்சியுற்றான்—முன்னுமுனி
முன்போற் றவம்புரிந்தான் முன்னவன்றன் னேடினைஞர்
பின்போ யினர்தொடர்ந்து பேர்ந்து. (௩௦)

தீயவிடஞ் சீறித் திசையெங்குஞ் செல்வதுபோற்
காயவுணர் மேவிக் கடிகுவார்—மேய
மலைபொடிப்பர் மண்பறிப்பர் மன்னுயிர்கள் யாவு
முலையுறழ்பேழ் வாயிடுவ ருற்று. (௩க)

தக்க வவுணரொடு தர்திமுக னெங்குமுலாய்த்
தொக்கவுயிர் நுங்கிமன்னெய்த் தோர்மாந்தி—பக்குறுவன்
பொய்த்தார் பொருளெனவே போனவுயி ரீட்டனி
யெய்த்தார் முனிவரும்ப ரேய்ந்து. (௩உ)

இனையவா றுக விபமுகத்தோன் மேவ
வினைய வுலக மெவையு—மனைய தன்மை
மன்னவுணர் மன்னுணர்ந்து மன்னுபுகர் தன்னைவிட
வன்னவன்போய்ப் பன்னலுற்றா னங்கு. (—)

ஒள்ளிதா முங்குலத்தோர்க் கோர்வான் குருவானேன்
றென்னுமறை தேர்ந்துளேன் செப்புமென்பேர்—வெள்ளியா
மூங்குலத்து வேந்தனென்னை யுய்க்கவந்தேன் மேன்மைநெறி
தங்குநலஞ் சாற்றவென்றான் றான். (நடச)

சல்லியன்பொற் றாளிறைஞ்சித் தந்திமுக னெங்குலத்தி
லொல்லைவரு முய்வா னுரைக்கவந்தாய்—நல்லுறுதி
சீர்க்கவிதிற் பேறிலெனத் தேர்ந்தவுணர் தேசிகனும்
பார்க்கவன்று டாழ்ந்தார் பரிந்து. (நடரு)

போதகனைப் பாராப் புகர்நீ தவமாற்று
யோதானை யோரா யுறுமாய—மாதிறல்சீர்
வன்பினைய தோராய் மருவுடனில் லாமையெண்ணு
யென்புரிந்தாய் புந்தியிலா யிங்கு. (நடசு)

மூப்பகைநீத் தைந்துமொன்ற முன்னோற்றேன் பெற்றுவிண்ணோட்
டப்பகைநீத் தொண்சி ரடைந்திலையா—லொப்பதிலா
விம்மையின்ப மெய்திலா யேயுமம்மை யின்பகன்று
யெம்மையின்ப மேவுகின்று யீங்கு. (நடஎ)

ஆற்றறமா விஞ்சை யருமகவு சீர்த்திவய
மாற்றனிதி போதமின்ப மாதியவு—மாற்றநமன்
கூடுமந்த ஞான்று குறித்திட்டாற் கூடுமோ
மேவுவெய்ய வேலோய் விளம்பு. (நடஅ)

மந்திரமன் மாயம் வரமேலோர் நல்குபடை
தந்திரமொன் றில்லையண்டர் தானையா—விந்திரன்றன்
போர்செயநின் மேற்செலினப் போதுநீ யாதுசெய்தி
சீர்விறலேண் மேன்மையிலாய் தேர்ந்து. (நடகூ)

ஆதலினுன் மேலா மானையுன்னி யாற்றலே
மாதவஞ்செய் கேட்ட வரமுதவு—நாதன்பின்
றேவரெலா நின்னேவல் செய்வா ருலகனைத்து
மேவரசே யாதியென்றான் வேட்டு. (சா)

சொன்னவைகேட் டேந்த ரெழுதகைய தும்பிமுகன்
முன்னிவையா ரேனு மொழிந்தனரி—லுன்னியா
னின்னசெய றேற்றே னினித்தவமே செய்கின்றே
னன்னசெய்மாண் பாற்றுகென்று னங்கு. (சக)

ஐவினைசெய் யைம்பொறிக ளங்க னடங்குகின்ற
மெய்வினைய மந்திரமு மேல்விதியும்—கைவினையு
முய்விரத மாதி யுணர்த்துவித்து மேருவின்கட்
செய்தவத்திற் கேகென்றான் றேர்ந்து. (சஉ)

தந்திமுகன் வெங்குருதா டாழ்ந்து விடைகொண்டு
வெந்தகுவ ரோடவுணர் மெய்ப்பதிபுக்—கந்திலுற்றா
னக்கால நேர்வந்த வாண்டகைக்கெல் லாஞ்சொலியூர்
மிக்கான்போய் வீற்றிருந்தான் வேட்டு. (௪௩)

அங்குருசொன் மாற்ற மகங்கொண்டு தந்திமுகன்
மங்குறவழ் மேருவினோர் மாட்டேறித்—துங்கமிகு
கொன்றவத்திற் கான கொணர்வித்து நீராடி
மன்றவத்தைச் செய்வான் மகிழ்ந்து. (௪௪)

பொறிமன் புலனவித்துப் புன்மைதீர்த் தாசான்
குறிவழிநின் றைந்தெழுத்துட் கொண்டே—யறிவிற்
றிவனறிவா யாருயிராய்ச் சின்மயமா நின்ற
சிவனுருவைச் சிந்தைசெய்தான் றேர்ந்து. (௪௫)

ஆயிரமா மாண்டடைபுல் லாயிரமா மாண்டவிர்நீ
ராயிரமா மாண்டநில மார்ந்துபின்மூ—வாயிரமாண்
டானதன்மேற் காலெழுப்பி யார்மூலத் தீமூட்டி
வானமிர்தந் தானயின்றான் வாய்ந்து. (௪௬)

அண்டாது கண்டுகவன் றன்னவனிச் செய்கைமுற்றி
னண்ட புவன மலைக்குமெனக்—கொண்டிறைக்குச்
சாற்றுவது தேர்ந்துமன்னன் றான்மிகவுஞ் சோர்வுறா
வாற்ற மறுக்கமுற்றா னங்கு. (௪௭)

நாற்புறமுந் தீச்சுலவ நள்ளிலன லோங்கவதன்
மேற்புகைபோற் றாணிறீஇ வித்தகற்பல்—காற்பாசி
யாரயுத வாண்டவதி யாருயிரு நோயுறவே
தாரிபத்தோ னேற்றிருந்தான் றான். (௪௮)

அங்கிபத்தன் றீமே லடிநிறீஇ நோற்றலைப்பார்த்
தங்கிக் கடவு ளருள்புரிய—வங்கிளரும்
வன்னியிலார் காரிரும்பின் மாண்டதுடல் வைரமணி
பொன்னிற் பொலிந்ததெழில் பூத்து. (௪௯)

வீசினர்நல் லொண்பூ வியந்தனருள் ளார்வத்தா
னாசி நவின்றா ரவுணரும்பர்—தேசிழந்தா
ரின்னவர் நோற்குமெல்லை யீசனது நாடியன்னான்
முன்னிடப மேல்வந்தான் முன். (௫௦)

வந்திறைமுன் றோன்றவிப மாமுகத்தா னோன்பொரீஇச்
சிந்தையன்பிற் றாழ்ந்தெந்தை சீர்பரச—வந்தவத்தோ
யென்னவரம் வேண்டுமென யார்போர் செயினுமவர்
வென்னிடவெற் கேயருள்வாய் வேட்டு. (௫௧)

எந்த வகைப்படையா லெண்கணன்முற் றேவரா
லந்தமுறு வன்பு மவிர்படையு—நந்துலக
மாளுமோர் கான்மாளி னூர்கதியு நல்கெனவெண்
டோளனவை தந்தகன்றான் சூழ்ந்து. (ருஉ)

பெற்ற படையும் பிறவுங் கொடுதன்பாற்
சுற்றமெலாஞ் சுற்றத் துதிக்கையா—னுற்றவண்மிக்
கற்புதங்கொண் டாகத் தரும்பு புளகத்தனாய்
வற்பின் மதர்ப்புற்றான் வாய்ந்து. (ருங)

அன்னதுதேர்ந்தாரசு மரிசானுந் தந்திமுகன்
றன்னைவந் தெய்திச் சயமுண்டா—கென்னவே
யாசிநவின் றெய்தினு ரந்தாரை வென்றுவன்பிற்
காசினியி லுற்றான் கடிது. (ருச)

மூவர் தவுணர் புனைவன் றனைநோக்கி
நாவனண்ணித் தீவி னகர்புரிதி—மேவவெனப்
பூவிலய னுறவே பொற்பினகர் கண்டதிலோர்
கோவில் குயிற்றினன் கூர்ந்து. (ருரு)

சிங்கமணிப் பீடமொன்றுஞ் சிந்தையிற்செய் தன்மைகண்டு
வெங்குருவுண் மாமகிழ்ச்சி மேவியே—யங்கநகர்
மாமதங்கொண் மாமுகற்கா மாண்பின் மதங்கபுர
நாமமதற் கெய்தவென்று னன்கு. (ருசா)

ஈரைந்து காத மெழினீட்சி மாநகா
மாரைந்து காத மகற்சியதி—லார்வி
லரக்க ரவுண ராசியொடு மேவி
யிருக்கநல்கி னுனே யிறை. (ருஎ)

அங்கண் மணிக்கோயி லார்மங் கலத்தொடுபோய்ச்
சிங்கணைமேல் வீற்றிருந்தான் சிந்துரத்தோன்—பொங்கவுணர்
வேந்தின் மகளாம் விளங்கும் விசித்திர
காந்திதனை வேட்டான் களித்து. (ருஅ)

வான்மடவார் தன்குலத்து மாதர்முன் மங்கையரைத்
தான்மணந்து பின்னர்த் தனிநகர்வெங்—கோன்மருவத்
தாரமரர் தானவர்க டாழ வுலகனைத்து
மாராசு செய்தா னவன். (ருகூ)

ஆனு மிருதிதியு மைங்காவு மாமணியுங்
கோனு மமாருமே குற்றேவ—ருனுகுற்றத்
தந்திமுகற் கார்புகருந் தானவர்தங் கோமானு
மந்திரியாய் வைகினர் வாய்ந்து. (சாO)

அன்னபோ தத்திமுக னண்டர் தமைநோக்கி
மன்னியிவன் வைகலுமே வந்துழி நுஞ்—சென்னிகுட்டிக்
கைகள் செவியிலுறக் கால்கொண்டு தாழ்ந்தெழீஇச்
செய்கபணி நீவிரென்றான் றேர்ந்து. (௯௧)

அன்னதோர்ந் தண்ட ரரசு மறுப்பதஞ்சி
முன்னர்நின்றும்பன் முகத்தவுணன்—சொன்ன
தொழின்முறையே யாற்றித் துயரவலை மோதப்
பழியழுவத் தாழ்ந்தார் பரிந்து. (௯௨)

வெங்கைமுக னேவலால் விண்ணோர் விழுமமுற்ற
தங்கயன்மாற் கோத வகந்தேற்றிப்—புங்கவரோ
டன்னார் கயிலை யணிகோயி லுட்புகுந்தார்
பொன்னாரு நந்தியுய்ப்பப் போய். (௯௩)

கண்டிறைதா டாழ்ந்தேத்தக் கத்தனண்ட ரோடலமந்
தெண்டுளவோ யிங்குவந்த தென்னையென—விண்டாரற்பார்த்
தோவி லுயிர்தொலைக்கு மும்பன் முகத்தவுண
னாவிதொலைத் தாவென்றா னங்கு. (௯௪)

என்றலுமெங் கோனொருசே யீந்தவுனைற் சாய்த்தனையான்
வென்றிகொண் டேக விடுத்துமென—நன்றெனவே
யாடினார் பாடினா ரன்னார் விடைபெற்று
நாடி நகரடைந்தார் நன்கு. (௯௫)

போகியபோ தீசனிடப் பூவைதனை நோக்கியா
மாக முறுமிவ் வனந்தெரித்து—மேகெனவே
தாயினார் தையலுமை தன்னோடுந் தாமெழுந்து
போயினான் றேம்பாய் பொழில். (௯௬)

தேனமருஞ் சோலை செழுங்கயிலைப் பாலமர்தல்
வானமருங் கூந்தல் வனிதையொடு—கானமருஞ்
செச்சைமலை சேந்தன் றிருத்தாதை வைகமணிப்
பச்சைமலை மேயதொக்கும் பாங்கு. (௯௭)

பச்சைவணை மாய்த்தழைத்துப் பன்னிறமாம் பூப்பூத்து
வெச்செனல்காய் தந்துள்ளூண் மேற்கனிந்தே—யிச்சையிற்ற
னான்றசீர்த் தாளடைந்தார்க் கம்பலமீந் தார்விமலை
போன்றதே வான்றோய் பொழில். (௯௮)

தண்ணளிக்கோர் வைப்பாய்த் தருநியமம் பூண்டடியி
னண்ணியவர்க் கொப்பிலின்ப நல்கலால்—விண்ணிமிர்கா
மானு மழுவு மலர்க்கரங்கொள் வித்தகனை
மானு நிகரில்லை மற்று. (௯௯)

காவினியல் கண்டுதன்ஞேர் காந்தையோ டின்னருள்செய்
தாவியுளோர் வென்ன வதனுளா—ரோவ்யமன்
றத்தன் செலவாங் கவிரோவக் கோலமெலாஞ்
சித்தமுறக் கண்டாள் சிவை. (எ௦)

பாங்குறுதே வாணையாற் பன்னதன ளாதியா
யோங்குதனி யக்கரந்தா ஞென்றிரண்டாய்த்—தூங்கலெனத்
தோன்றவவை யான்காணத் தொல்புணர்ச்சி யின்மூய்ற
ரூேன்றலதென் கொல்லென்ருள் சூழ்ந்து. (எக)

மூன்புநீ காண்கையான் மூலமா யுள்ளதோர்
மன்பொறியுற் றீருருவ மன்னியே—யன்பிஞ
றுன்றந்தி போற்புணரு மாகையாற் ரூகையே
நின்றகவை யெண்கிலாய் நீ. (எஉ)

காட்சியா யீதுசெயுங் காரணந்தான் பெற்றநின்றன்
மாட்சியா ரோர்வரென மன்புகழ—வாட்சியா
மன்போ தகமாய்ச்சேர் மாண்பார் தொழில்விட்டு
முன்போன்றதுகுடிலே முன். (எங)

அக்கணத்தி லாங்கொருசே யைங்கரநால் வாய்முக்கண்
மைக்களிற்றின் வத்திரத்தின் வந்துதித்தான்—ருெக்கெவரு
நேசமுறத் தாள்பணியு நீர்மையிஞ ஞோர்வரியா
னீசனென நின்றருளவா னேய்ந்து. (எச)

வந்திருவர் தந்தாண் மலரிணைமேற் ரூழுதலுந்
தந்தைதாய் முன்றழுவித் தண்ணருள்செய்—தந்தமிலாய்
நின்னைநினைந் தாற்றுவார் நேர்கரும மாக்குநீ
யுன்னலர்செய் கைக்கூ றுஞற்று. (எரு)

ஆயனைய ஞதியா மண்டர்க்கு மார்க்குநீ
நாயகமே செய்தியா னல்லருளின்—றீயகயத்
தானனனைச் சாடியே யாழியான் றன்சிறமை
தானகற்றி மீள்கென்ருன் சம்பு. (எசு)

ஞானமைந்தன் பான்மருவ நற்பூத மாவணிகந்
தானருள்செய் தத்திமுகன் றன்னைப்பார்த்—தானவெழி
னங்கலடையி ஞயகஞ்செய் நன்கெனவைத் தன்னையொடு
சங்கரன்போய்ச் சார்ந்தான் றனி. (எஎ)

தந்திமுகன் பாரிடாங் தானைமுன் முற்றுறவே
நந்தியெங்கோன் வந்தனைதா னன்கியற்ற—வந்து
பழமறையோ ஞதியாம் பண்ணவர்தா ளேத்தித்
தொழமகிழ்வின் வைகிஞன் சூழ்ந்து. (எஅ)

கண்ணனன்பிற் கண்ணுதலைக் காணக் கயிலையின்க
ணண்ண வானருளா னந்தியுய்ப்ப—வண்ணனற்று
ளாங்கருத்தியோடுதொழ வாழியான் றன்னைத்தன்
பாங்கிருத்தி யென்றான் பரிந்து. (௭௯)

மாதையரா னோக்கி மகிழ்வுற்றோ ராடலாஞ்
சூதையெம்மோ டேபொருதி தோற்றனையே—லீதிநின்பூண்
வென்றனையே லெஞ்சகிமுன் வெம்பணிகள் கோடியா
லென்றனையோ டோதினா னேய்ந்து. (௮௦)

அன்னதற்கு மாதிசைய வத்தனத்தற் பார்த்தரிநீ
யின்னதற்குச் சான்றா யினிதிருத்தி—யென்னநன்றென்
றெண்புடையில் வைக வெவருமுற மன்னருளா
லொண்பலகை காசுதந்தா ரோர்ந்து. (௮௧)

கண்ணுதலோன் மாலிக் கருவிமுறை வைக்கென்ன
நண்ணவைக்க நாரியைமு னன்கிருத்தி—பண்ணைக்
கவற்றினைமு னுய்ப்பவெந்தை காரிகையு முய்த்தா
டவற்றியல்பின் றாடினார் தாம். (௮௨)

பஞ்சென் றுரைசெய்வர் பாலையென வோதுவரீ
ரஞ்சென்ப ரஞ்சென்ப ரன்றியுமே—றஞ்சவொடு
தோயினட மென்பர் துருத்தியீ தென்பர்தீ
ராயின் வெடியென்ப ராங்கு. (௮௩)

அடியிதுபொட் டையிதென்ப ரஃதெனவே யூழின்
முடிவில் குழூஉக்குறிகண் முந்தக்—கடிதினன்கு
செப்பினரொண் மாக்கவறு சிந்தினார் நண்கருவி
துப்பினெதி ரூக்கினார் சூழ்ந்து. (௮௪)

எந்தையா மீசன்கொ லின்னருடா னென்னையோ
சிந்தையாந் தேர்ந்திலமெண் செய்கையால்—விந்தையா
மேற்றா னெதிராடு மெல்லியற்கு மாலயற்குத்
தோற்றானே தோற்றான் றுதைந்து. (௮௫)

ஒன்றாம் பரம னுமைதன்னை நோக்கிநின்னே
னன்றாய தென்று நகைத்துநம்மை—வென்றா
யலைதோற்றாய் முன்விளம்பு மாற்றானீ பூண்பூ
ணுலைவிலெமக் கீதியென்றா னோர்ந்து. (௮௬)

என்றா ளனைத்துங்கேட் டண்மா யனைநோக்கிச்
சான்றாய நீயிதனைச் சாற்றுகென—வான்றகு
தார்போர் வெலுந்தகையோ னத்தனென நன்றுநன்றென்
றேர்போ றாமைசினந்தா ளேய்ந்து. (௮௭)

அங்கணனங் கேளீ தறையினுநீ யாராயா
தெங்கணிது சொற்ற விழுக்கினால்—வெங்கண்ண
பாம்பாதி யென்னப் பகர்ந்தாள் பரையொல்லை
யாம்பா லுருவடைந்த தாங்கு. (அஅ)

வெவ்வுருவ மெய்திடமால் வித்தகன்று டாழ்ந்தெவ்வா
றிவ்வுருவ நீங்கு மிசைத்தியென—வெவ்வமிலா
னென்பால் வருமன்பி னீறுபெற்றாய் நீக்குவே
னுன்பால் வருதுன் பொருங்கு. (அகூ)

தென்பா லுலகிற் றிகழாலங் கானுளதங்
கன்பா வடப்பொந்தார்ந் தாற்றுதவ—மன்பால
னவ்வயிற்செல் வானெதிர்போ யன்னவனைக் காண்டியுனக்
கிவ்வுருவ மாறு மினிது. (கூ0)

என்னு மளவி லிறையவனைத் தாழ்ந்தேத்தி
யன்னவனத் தெய்துவே னத்தவென—மன்னும்
வரமார் கயிலை வரைநீங்கி யால
மரமார் வனமடைந்தான் மால். (கூக)

வித்திற் சிறிதென்பர் வெள்கவோர் வீழ்சாகை
முத்தலமு மேவ முறையாக—வித்தகன்றெவ்
வூர்போய் வெலவயனு மோர்பாக னுய்த்தநெடுந்
தேர்போன் றிருந்ததால் சேர்ந்து. (கூஉ)

வீழ்கிளரொண் காலாய் வியன்றூர்கீழ்த் தட்டாய்விண்
போழ்கிளைமேற் றட்டாய்வாழ் புட்கொடியாய்த்—தாழ்கனிக
டுய்ய பவளத் தொடையா யடைதுகிலாய்
வையமது போலாம் வடம். (கூங)

இருங்காற் கல்லாலு மும்பர் பதியமரைந்
தாருமொவ்வா வாலினுக்கென் சற்குருமம—ருரும்
பாச விருக்கும் பதியாந் துறைசை
யரச விருக்கநிக ராம். (கூச)

அலகில் புகழுடைய வன்னையுரையா
லிலகு பணியா யிருநீ—ருலகமெலாந்
தொந்திதனில் வைக்குந் துளவன்வடதாருப்
பொந்தி லமர்ந்தான் புரிந்து. (கூரு)

பூந்து கயமுகனுன் முன்னமது நொந்திமையோ
ரிந்திரன்முன் னேவருமே யோரம்பன்—வந்தேதோர்ந்
துள்ளமகிழ் வெய்தி யுயர்கயிலை மேவியையங்கை
வள்ளல் பதம்பணிந்தார் வாய்ந்து. (கூகூ)

அங்க ணிறைஞ்சு மமரரைப்பார்த் தைங்கரத்தோ
னுங்கள் குறையெ னுவனுமெனப்—புங்கவர்கோன்
சொல்வான் கயாசுரனோர் சோதிவர மெய்தினா
னெல்வான் றுயர்செய்தா னுற்று. (கஎ)

பின்னாங் கலைத்தன்னைப் பேர்வுங் தலைசெய்யச்
சொன்ன தன்றிக் குட்டெடனே துன்னுகரங்—கன்னமுறத்
தாழ்ந்தெழவுஞ் சொற்றான் றணிவில் பழிநாணத்
தாழ்ந்தவற்கா ளானோ மயர்ந்து. (கஅ)

அன்னவன்ற னுவி யடநீ வருவையென
முன்னவன்றன் சொற்றமையான் முன்னெவரு—நின்னடைந்தோ
மேதமகற் றென்று விலட்டுகமுன் வைத்தேத்த
காதனவற் சாய்த்துமென்று னன்கு. (கக)

இறைவ னுடனிமையோ ரெம்மிடுக்கண் டீர்ந்து
மறுமையின்பும் வந்தவினி மன்னப்—பெறுவதென்கொ
லென்றின்ப மெய்துறும்போ தீசனரு ளோரம்பன்
றுன்றவற்கொல் வான்முனினான் சூழ்ந்து. (௧00)

பொருக்கென் றெழுந்தையன் பொரன்வாய்த லெய்தி
யருக்கனில் வில்வீசசல னார்தோ—டிருக்கழல்வைத்
தேறியிருந் தேகுழித்தி ணேண்பூதர் வந்துசுற்றிக்
கூறினா ரன்னவன்சீர் கூர்ந்து. (௧0௧

சாமரைகள் வீசினார் தண்கவிகை யேந்தினார்
தேமருவார் பூமாரி சிந்தினார்—நாமம்
வருகோடி னார்பூதர் மன்னியஞ்சாற் றிட்டா
ரொருகோடி சாரதர்க ளுற்று. (௧0௨)

மன்னேங் கரத்தோன் வருகாலே யும்பரெய்தி
மின்னலர்கள் பெய்துசெல வெவ்வனிகந்—துன்னுறவே
நூபுரமுன் னார்ப்ப நொடிப்பிலேண் டெம்மதங்க
மாபுரமுன் போயினான் வாய்ந்து. (௧0௩)

ஆயதொற்றா தேர்த்தோடி யாம்பன் முகற்கியம்பத்
தீயனவிற் சீறியே திண்படைகொண்—டேயதுன்றே
ரேறினான் பல்லியங்க ளெல்லா மியம்பினவே
மாறினாற் றூனைசுற்ற வந்து. (௧0௪)

ஆயிரமா வெள்ள மணிகழுற்றப் போயவுண
ருயகன்சேய் தன்படைமு னண்ணினான்—மேயவெல்லை
பூதருந்திண் டானவரும் யோர்புரிந்தார் வன்படையா
மீதமரர் நோக்க வியந்து. (௧0௫)

ஏற்றா ரிருதிறத்தா ரெண்டா னவர்பூதர்க்
காற்றா தழிந்திரிந்தா ராயிடைமன்—சாற்றுவி
விட்டா ரளப்பிலார் மெய்குறைந்தா ரெண்ணிலார்
பட்டார் துயரம் பலர். (௧௦௬)

ஒழிந்த கரிபரிதே ரோங்கவுணர் தானை
குழிந்தகட் பூதர்வென்றி கொண்டா—ரழிந்ததன்மை
நோக்கமுற்று வில்வளை இ நோன்கணவ ராங்குலை
மாக்கணையா மாரிபெய்தான் மன். (௧௦௭)

புங்கவந்திண் பூதர்மெய் போழ்தரக்கண் டைங்கரத்தோன்
வெங்க ணவுணனேர் மேவலுமே—யிங்கிவனு
ரென்று வினவ விபமுகத்தோன் சங்கரன்சேய்
வன்றிறலோ னென்றான் வகுத்து. (௧௦௮)

அன்னவுரை கேட்டவுண னண்வலவன் றன்னைப்பார்த்
துன்னிரத மைங்கரன்மு னுய்ப்பையென—முன்னுகைப்பத்
துன்றுவனைத் தீக்கண் சுழறநோக் குற்றெயிற்று
லொன்றுமிதழ் தின்றுசொல்வா னொன்று. (௧௦௯)

நுந்தை யெனதுதவ நோக்கிவரந் தந்தமைதேர்
தந்திலையா ராவிகொடு தான்போதி—புந்தியிலாய்
போர்செயினிற் கேணில்லை புங்கவரான் மானுடரா
லார்படையான் மாய்விலையெற் காங்கு. (௧௧௦)

பின்னும் பலவுள்ள பெற்றவரம் வெல்பவரா
ருன்னைவென் றண்ட ருயிருமுண்பே—னென்னைவெல்ல
வல்லையேல் வல்லை வருதியெனத் தும்பிமுக
னெல்லையே யோதுவா னேர்ந்து. (௧௧௧)

எண்படையும் வானுரு மெய்வரமு நிற்களித்த
மாண்படையு மெந்தைநின்னை மாய்த்தங்கண்—சேண்புரப்போ
னந்தரர்க்குப் பொன்னு டளித்தனையா ருள்ளமுற்ற
வெந்துயர்தீர்த் தேகென்றான் வேட்டு. (௧௧௨)

உன்னுயிர்தான் காத்தியெனி லோருறுதி சாற்றுவன்கேள்
பொன்னகரில் வேந்து புரக்கநல்கி—யிந்நிலத்தை
யாண்டே யிருத்தியஃ தாற்றிலையே னின்னுவி
மாண்டே விடநினைவேன் மற்று. (௧௧௩)

என்னலுமே வெய்யவன்வேர்த் தேமத் தனுவாங்கி
மின்னொளிநா ணேற்றிவெங்கோல் வீசவையன்—மன்னெழுவா
னெற்றவிற்ற தோர்வில் லெடுத்தனையான் வாங்குமுன்னர்
ஏற்றதையுஞ் செற்றான் வரன். (௧௧௪)

தண்டமொன் றேந்தியான் றன்றனய னோடெதிர்ப்ப
விண்டதயர் வான்புடைத்து வெய்யனுரம்—புண்டயங்கத்
தாக்கமரம் போனின்றான் றந்திமுகன் றானைதெற
வூக்கினான் பாசமொன் றோர்ந்து. (௧௧௫)

விட்டவெம் பாசமங்கண் வெய்யதோர் சேனைமுற்றுங்
கட்டியது சேய்பின் கணிச்சியுய்ப்ப—வட்டதா
லன்னதனை நோக்கியும்ப ராடினார் தானைபட்ட
மன்னவுணா னோர்ந்துநொந்தான் மற்று. (௧௧௬)

மூந்துதன்கை யுள்ள முரண்படைகள் யாவுமே
சிந்தினா னன்னவெலாஞ் சேர்ந்தவும்ப—லெந்தை
தனைவலஞ்செய் தேத்தித் தனியேவல் செய்த
வினைவெகுளித் தீக்கணின்றான் வேந்து. (௧௧௭)

நின்றவனை நோக்கி நெடும்படைக டாமேவிற்
சென்றவனைக் கொல்லா சிவன்வரத்தா—லென்றிறையை
யுன்னித்தன் கோட்டிலொன் றோர்கரத்தி னான்முரித்தான்
மின்னிற் றிகழ்சடையோன் வேட்டு. (௧௧௮)

கையிலொசி கோட்டைக் கயாசுரன்மே லுய்ப்பவது
வெய்யனுரங் கீண்டுபோய் மேவுடலம்—வையமிசை
வீழ்த்தியொல்லை யோடிநன்னீர் வேலைபடிந் தேரம்பன்
வாழ்த்துகர முற்றதுவே வந்து. (௧௧௯)

வெய்யனுரங் கீண்டலுமே வேலையுடைந் தாங்கார்த்தார்
செய்யநெய்த்தோர் கான்பரந்து செங்காடா—வையமூன்றும்
போரா கியதனையான் போர்ந்துருகீத் தஞ்சவுல
கோராகு வாறு னுருத்து. (௧௨௦)

தாக்கவரச் சாரதன்றோ டன்னினின்று மூடிகத்தை
நீக்கருந்துப் பின்றாக்கி நீநம்மை—மீக்கொளொன
மேக்கார் பிடர்தாவி வீற்றிருந்தே யூர்தலுற்றான்
மாக்கார் மதங்கொண்ட மன். (௧௨௧)

மற்றதுகாண் டேவர் மகவான் முதலெவரு
மிற்றனன்வெஞ் சூரா னிடரேகிற்—றற்றதிக
லென்றுமகிழ்ந் தாடியெழி லேமமலர் தூயன்பு
துன்றநனி போற்றலுற்றார் சூழ்ந்து. (௧௨௨)

பூப்பவனு மெல்லாப் புவனங் களுமுறையே
காப்பவனும் பின்னர்க் கடிந்தவற்றை—வீப்பவனு
நீயலா தில்லையென நின்றிறைஞ்சிப் போற்றவும்ப
ராயனையான் செய்தா னருள். (௧௨௩)

உய்ந்தனனா மென்றயன்முன் னும்பரெலாம் போற்றுதலும்
வெந்தகுவன் காய விளிந்தவரை—யெந்தையன்பி
னோக்கி யெழுதிரென னொய்தெழுந்தா ரஃதுணர்ந்தான்
வீக்குகழல் வெவ்வவுணர் வேந்து. (௧௨௪)

மந்திரியோ டுன்னியுயிர் வாழ்ந்தனனா னென்றுள்ளா
யந்தரமார் வீயெனப்போ யப்பதிநீர்ந்—துந்தொளிசால்
பொன்வரையின் சாரலின்கட் பூந்தருமன் பூழையினுண்
மன்புலம்பி யுற்றான் மருண்டு. (௧௨௫)

தானவர்கோன் செல்லுந் தனிப்புகரு மோர்புள்ளாய்
வானமருந் தன்னுலகம் வாய்ந்திருந்தான்—மாநகர்போய்ப்
பூத ரவுணரொடு போர்முற்றி மேவுதலு
நாதனவ ணின்றகன்றா னன்கு. (௧௨௬)

மீண்டுசெங் காட்டிலொர்சார் மேவிப் பரவெளியிற்
றாண்டவஞ்செய் தாதையுருத் தாபித்துப்—பூண்டவன்பிற்
பூசைசெய்தா னத்தானம் பொற்கணப தீச்சரமென்
றாசையுளார் சொல்வா ரமர்ந்து. (௧௨௭)

பூதகணம் போற்றவாற் பூசை புரிந்தபின்னர்
மேதகுசீ ராகு மிசையேறி—நாதனெங்கோ
மாலவன மாதுமைதன் வாக்கினா வாகிவெங்கு
மாலவனம் புக்கா னமர்ந்து. (௧௨௮)

கயமுகனுற்பத்திப் படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா. ௩௧௭.

# அனந்தன் சாபநீங்கு படலம்.

புக்கபொழு தங்காலம் பொந்தார்ந் தரற்கருதி
மிக்கதவஞ் செய்மால்கை வேழமுற—வக்கணநேர்
சென்றிறைஞ்சிக் காணவம்மை செப்பிடுமா சாபமற
முன்றனுருப் பெற்றான் முயன்று. (௧)

மான்முனுருக் கண்டு மகிழ்ந்தானை யேத்தியைங்கை
மேன்மையுளான் முன்னிறைஞ்சி மீண்டெளியன்—பான்மருவு
பூசனைகொள் வான்வேண்டும் புந்திமகிழ்ந் தின்னருள்செய்
ஈசனருள் பாலவென்றா னீங்கு. (௨)

ஐங்கரன்மால் சொற்கேட் டதுசெய்கென் றங்கமாக்
கொங்கலர்முன் னாகக் கொடுபோந்து—பொங்கவனைச்
சாற்றியலி லர்ச்சித்துச் சாலவிசிற் றானார்த்திப்
போற்றியிது சொல்வான் புரிந்து. (௩)

விண்ணும மார்திங்கண மின்மதியா ரும்பக்க
மிந்நாண னுன்னையர்ச்சித் திட்டமைபோன்—மன்னுவுன்
பொன்னடியார் பூசை புரியினவர் புன்கணொழித்
தின்னருள்செய் கென்றா னினிது. (௪)

கேசவன்சொற் கேட்டலுநீ கேட்டபடி யாக்கின்றன்
பூசைமகிழ் வுற்றமெனப் புங்கவர்க—ணேசமொடு
போற்றிடவெவ் வாகிவர்ந்து பொற்கயிலை மேவியையன்
சாற்றாற்றாழ்ந் தாற்றான் றளி. (௫)

அற்றைநாண் மாயனய னாதியர்க ளைங்கரன்றாண்
முற்றுமன்பிற் றாழ்ந்து முறையினருள்—பெற்றுநின்றே
யெந்தையெமை வாட்டு மிபமுகனைவீட்டவுய்ந்தோ
மந்துகைம்மா றுண்டோ வுனக்கு. (௬)

மென்னல் வரையசுர னேர்செய் பணிநின்று
னின்ன தினங்கொட் டியுற்றுதும்யா—மென்னவது
செய்திரென வும்பர் சிரங்குட்டிக் கொண்டுகுழை
யெய்துகையிற் றாழ்ந்தா ரினிது. (௭)

அன்புடனே யாவருமீ தாற்றி வணங்கிநிற்ப
மன்பரையின் மைந்தன் மகிழ்வெய்த—வன்புலவ
ரின்றுமுத லெம்மைப்போ லிப்பணிசெ யேவர்க்கு
நன்றருள்செய் கென்றா ரயந்து. (௮)

அம்பிகைமா மைந்த னருள்செய்தவ் வாறயன்மா
லும்பர்க் கெலாவிடைதந் துய்ப்பவண்டர்—தும்பிமுகன்
கூர்ந்த வருளாற் குலவியதந் தம்பதம்போய்ச்
சார்ந்தங்கு வைகினார் தாம். (௯)

வேத முதலெழுத்தாம் வித்தகனுற் பத்தியிது
மாதிடத்தாற் கோர்குணந்தான் வந்ததன்மை—யோதுவங்கேள்
சிற்குணனே யாகுஞ் சிவன்குணமோர் மூன்றுமிலா
நிர்க்குணன்சீர் சொல்பவரார் நேர்ந்து. (௧௦)

பாவுயிர்க்குப் பாசம் பறிப்பவன்மால் வேதற்
கிருதொழிலீந் தாங்கவற்றிற் கேய்ந்து—மருவுகுண
மாக்கி யடுந்தொழிலுக் காந்தா மதமமைத்தா
னோக்கினது தேர்வர் றுனித்து. (௧௧)

மாமறைநூ லாதிதந்து மாமுனிவர்க் கன்னவைதாந்
தாமதகு ணத்தனேற் சாற்றுவனே—வாமமல
மெய்வடிவ மேவுமோ வித்தகனை மூலமெனத்
தெய்வமறை செப்புமோ தேர்ந்து. (கஉ)

விமலனன் றீறு விளக்குந் தகைவாற்
றமகுணத்த னென்றியந்தத் தன்மை—யமைசெயலா
லேய்ந்த வியற்குணந்தான் யாருரைப்பார் வேதமுழு
ஞய்த்து மறியா வது. (கங)

ஈத்த லளித்த லியற்று பூவர்க்குள்ள
சாத்திக ராசதந்தந் தஞ்செய்கை—மாத்திரை
யல்ல தவர்கட் குவைபார்த் திடினியல்பாச்
சொல்லவு மாகுமோ சூழ்ந்து. (கச)

மாற்குருவ நீலமுந்நீர் வாய்த்துயில்கொள் பாண்மையந்தை
யேற்கும் பிறவுமெய்து மேலிரண்டி—னூர்க்குமன்பி
னேத்திவழி பட்டினரு ளெய்போத மும்பெறலாற்
சாத்திகமே பெற்றுளான் றான். (கரு)

மேனிபொற் கென்றலான் மேவமல மானபொரு
ளெனென் மருட்கையா னந்திதனைத்—தானன்
குணர்தெளிவிற் பூசனையி லுண்டா யதுவே
குணனெலாம் போதற்குங் கூர்ந்து. (கசு)

ஆசையின்ன லெய்திறே ரக்குணவி தத்துறுவ
ரீசற் கதநணுகா நீறுசெய்—பேசினூர்
தாமதமல் லாது தனிமுதலின் றன்மையெலா
நாமறியற் பாலதோ நன்கு. (கஎ)

என்றினைய தூயோ னிசைத்தலுமே வன்மையொடு
மன்றிருவ மெய்தி மயங்கலால்—வன்றக்கன்
புந்திகொளா தைய புகழாற்கி யேனவிநீ
சிந்தைசெயேல் போதியென்றான் றேர்ந்து. (கஅ)

தக்கனிது கூறத் ததீசி முனிசினவ
மிக்கு நடுங்கியது மேவுலக—மக்கணந்தன்
சீற்றந் தனைநோக்கிச் செப்பகில மற்றவனு
லாற்றலையு மென்றுணர்ந்தா னங்கு. (கக)

சீற்றந் தணிந்து சிவனை விலக்கியின்
றூற்று மகஞ்சிதைக வன்பிறக்க—வேற்றநின்றே
டுற்றவும்ப ரெல்லா மொழிவுறவின் னேயென்னுச்
சொற்றனனே மாமுனிவன் சூழ்ந்து. (உ0)

அந்தணரை நோக்கிமுனி யாசணம்போற் றீசனோ
டெந்தையன்பர் கண்டிகைநீறெள்ளினீர்—சிந்தலகி
லானவவ்வ ராய்ப்பிறந்தே யாங்கிறந்தெய் தாதுகதி
தீநெறியில் வீழ்கிரொன்றான் றேர்ந்து. (உக)

இனையநெடுஞ் சாபமிசைத்துமுனி பாங்கர்
முனிவருறத் தன்னிலுற்றான் முன்னி—யினையவன்றன்
பின்னாகத் தக்கன் பெருந்தகவு சீர்திருவேண்
முன்னாகப் போயிற்றே மொய்த்து (உஉ)

அனந்தன் சாபநீங்குபடலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா. சாஙசு.

---

# தானப்படலம்.

---

போன பொழுதிலவன் பொற்றுவச மிற்றகொடி
சேனமகத் தூணிற் செறிந்தமலைக்—கானமங்கை
மங்கலநன் ஞண்கழன்ற மற்றுமெண்ணி றுன்னிமித்த
மங்க ணிகழ்ந்த வடுத்து. (க)

இன்ன நிகழ்ந்துமுள்ளத் தெண்ணான் சிறிதுமையன்
றன்னையரி யைப்பூசனைசெய்தான்—பின்னையும்பர்
மாமுனிவர்க் கானநல்கி மாதர் மருகர்க்கு
மாமங் கலமளித்தா னங்கு. (உ)

தக்கனிந்த வாறுநல்கித் தாமோ தரன்முதலா
மிக்கெவருங் காத்திடத்தீ வேள்விசெய்போ—தக்களத்தின்
முன்னமே வொண்சுரபி மொய்வெள்ளி வெற்பன்ன
வன்னமே நன்களித்த வாங்கு. (ங)

தீயபாற் சொன்றி செழுமுதிரை யுணடிபாற
வாயவனம் வீற்றுவீற் றாகவெற்பின்—மேயவெந்தை
தோசைமுதற் பண்ணியங்க ளென்கனிக ளேவருமே
யாசை யுறவகுத்த வாங்கு. (ச)

விருந்தினர்தாங் கொள்ள விழுது தயிர்பா
திருந்துநதி யாமென்னச் செய்த—பெருந்தகவின்
மான்மருஞ்சார் தொண்பனிநீர் வள்ளடைக்காய் பூவினைய
வான்மகிழ்வி னல்கினவே யாங்கு. (ரு)

ஆவதெல்லா நல்கிமணி யாரு மிருநிதிகாத்
தாவிலவ னேவலாற் சாலையின்கண்—மேவி
மணிகள் கனகம் வணங்கொ ளுடைகள்
பணிக டொகுத்தவொவ்வோர் பாங்கு. (சு)

மற்றுள் ளனவுதவி மாடடைந்த வேலையத்தீ
துற்றதக்க னேவலின்க ணுற்றொழுகு—நற்றவர்கள்
யாரு நிலத்தோர்க் கிவையிங் களித்துமெனக்
கூருமன்பிற் சொன்னார் குறித்து. (எ)

இன்னபோ திச்செயலோ ரோரந் தணர்முனிவ
ரன்னநெடுஞ் சாலை தனையணைந்து—முன்னுஞ்
சிறுவிதியைப் போற்றிச் செறிந்தாடிப் பாடி
யறுவைதனை வீசினா ரார்த்து. (அ)

கண்டந் தணரைக் கடிதுவம்மி னீரென்னுக்
கொண்டு குறுகிக் குழுவிருத்தி—யுண்டிகளை
யம்பொன் மணித்தட்டத் தார்க்குமிட் டேட்டுவித்தார்
பம்புறவு கொண்டாரிற் பார்த்து. (கூ)

அன்னபொழு தாரு மயின்றுஞ் சுவைமிகையா
லின்னமுண்டி வேண்டு மெனவுரைப்பார்—பன்னுசில
ராயவுண வாற்றவுண வாரகட்டில் வெய்யபசித்
தீயடலை யென்பார் சிலர். (க0)

வானை னனந்தன் வலிதருகுண் டோதரனின்
மானுறப்பல் கைவாய் வயிறுபெற்றிவ்—வூணருந்தக்
கூர்வடவை போற்பசித்தீக் கொண்டாற் சிறிதுநசை
தீர்தருமே யென்பார் சிலர். (கக)

இந்தவுண வுண்ணமைந்த தில்லாளை யாங்கொண்டு
வந்திலமென் செய்வமென்பர் வாய்ந்தசிலர்—தொந்திதெற
மாக்கறியூ னுண்டிவ் வயினெழுலெவ் வண்ணமெனத்
தேக்கெறியச் சொல்வார் சிலர். (கஉ)

தக்கனொடு வானவரு மற்றவரும் வாழ்ந்திடலாற்
றக்கன் புரிந்த தவத்தினுண்டோ—மிக்கதென்ப
ரெல்லையினல் லூணுதவு மித்தேனு வைப்பற்றிச்
செல்லுதுமூர்க் கென்பர் சிலர். (கங)

அன்னபல பேசிநுங்கு மந்தணர்கள் கேட்டவெலா
மன்ன வளித்தருத்தி மாமுனிவர்—பின்னவரை
யாங்கிருத்திச் சாந்த மடைக்காய் மலர்யாவு
மோங்கருத்தி யோடுதந்தா ரோர்ந்து. (கச)

உண்டான பின்சாந் தூரத்தணிந்து பாகடைமென்
றெண்டான சாலையெய்த வேர்முனிவர்—கண்டார்வி
னீந்தார்பொ னீந்தார்பூ ணீந்தார்து சீந்தாரா
வீந்தார்மா தந்தணர்கட் கேய்ந்து. (௧௫)

மல்குசெம்பொற் பாதுகைகண் மன்குடைகள் குண்டிகைக
ணல்கி முனிவர் நயப்புறவே—மல்குபொரு
ளங்கண் மறையோ ரவாவடங்கத் தந்தவெலாந்
தங்கடலைக் கொண்டுசெல்வார் தாம். (௧௬)

மாலயன்முற் றேவர் வயங்கூர்தி யார்த்தவொர்பா
லாலு மரம்பையர்க ளாடினரோர்—பாலமர்ந்து
நண்புறவே வானோர் நயமொழிகள் பேசியங்குப்
பண்புறவே வைகினரோர் பால். (௧௭)

வேதவல்லி யீன்ற விளங்கிழையார் விண்ணவர்த
மாதர் சசியொடோர்பால் வைகினா—ரோதுமற்றக்
கோங்கரங் குவிமுலையார் கொண்கருடன் கூர்ந்தவன்பி
னுங்காங் குலவியுற்றா ராண்டு. (௧௮)

தானப்படலம் முற்றிற்று.

ஆ. திருவெண்பா ௬௫௭.



# வேள்விப் படலம்.

மருத்துளவன் போதனயன் மன்ன மகத்தின்
கருத்தனுந் தீயன் கருதி—வரித்தநல்
மன்றவரை நோக்கி மரபி னிருத்துமுத்தீ
யென்றலுநன் றென்றா ரிசைந்து. (௧)

மேய விருத்திரோர் மேவரணி தன்னினுற்ற
தீயை யொளிர்வே திகைப்பறப்பை—மீயுய்த்துப்
பன்மந் திரத்தாற் பரிதிகள்சூழ்ந் தேனைவிதி
மன்மரபிற் செய்தார் மகிழ்ந்து. (௨)

ஆங்க ணழனா லறைமுறையிற் செய்தலுமே
பாங்க ணிருத்தினரைப் பாரம—னீங்கணுங்கட்
காயசெய றன்னைவினைந் தாற்றுமி னென்றுரைத்தான்
சேயமலர் மேலமர்வோன் சேய். (௩)

என்ன வதுகேட் டிருத்தினோர் முன்னமா
மன்ன மகத்திற் கவிமுழுதும்—வன்னிபல
துன்னு சமிதை துறைதருப்பை யாதிதந்தார்
பன்னிருவர் கொண்டு பரிந்து. (௪)

அந்தமகஞ் செய்வித்தா ராங்கொருவ ராலவிச
ௌந்தையலார் கொள்ள வெவர்க்குமுள்ள—மந்திரத்தைச்
சொன்னா ரொருவரன்னார் சூழ்தந் தமையழைத்தார்
துன்னு வொருவர்பேர் சொற்று. (௫)

மற்றவர்க்கெல் லாமொருவர் வன்னியிட்டா ரின்னவிய
வற்ற முணர்ந்திருந்தா ராங்கொருவர்—துற்றதற்கு
முற்றுநல்ல வின்னருளை முன்னிப் புரிந்தனரன்
புற்றொருவ ரம்முதல்போ லுற்று. (௬)

இருத்தினர்க்கு மேனையர்க்கு மீதியற்ற யாக
கருத்தனந்தத் தேவர்க் கருதிப்—பரித்துணுதி
றென்றவிசெய் தோறு மினிய மொழிபகர்ந்தே
நன்றருத்தி யுற்றா னயந்து. (௭)

திருந்துசுவை யானுந் திகழ்தூய்மை யானு
மருந்தனைய தேனு மகத்திற்—பொருந்தவிசேர்
மேலவனை யன்றி மிசைதலான் வானவர்கட்
காலமதே யாகிய தாங்கு. (௮)

வேள்விப்படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா ௬௬௫.

---

## உமைவருபடலம்.

பாரதிலிவ் வேள்விதக்கன் பாற விழைந்தியற்ற
நாரதன்கண் டெவ்வுயிர்க்கு நாதனைநீத்—தாரமார்
தம்முடனிஃ தாற்ற றகைத்தெனப்போ யங்கயிலைச்
செம்மலைத்தாழ்ந் தேத்தினன் றேர்ந்து. (௧)

கைதொழுதே யேத்தவனைக் கண்ணுதலோன் கண்ணுற்றிங்
கெய்தியதென் செய்தி யெவன்கொலென—மைதிகழுங்
கந்தரனே கங்கையின்பாற் கஞ்சன்சே யாற்றுகின்றா
னந்துமக மொன்றென்றா னன்கு.

என்னலுமே யீச னிடமா மிறைவிகேட்
டன்னவன்செய் வேள்விகா ணார்விற்றாழ்ந்—துன்னியெழீஇத்
தந்தைமகங் கண்டு தமியேன் வருகின்றே
னெந்தைவிடை யீதியென்றா ளிங்கு. (௩)

என்றலுங்கோன் றக்கனினை யெண்ணலான் மால்கின்றா
னின்றவன்செய் வேள்வியின்க ணேகலென—நன்றுமையாங்
கன்னா னறிவிலா னாகு மவன்பிழையை
யுன்னாய் பொறுத்தியென்றா ளோர்ந்து. (௪)

ஆதியடி தாழ்ந்துமக மண்ணியிவண் ழீள்வலொல்லை
நாதவிடை நல்கெனலு நங்கையே—யோதுமது
காதலுறக் காணுங் கருத்துண்டேல் கண்டணைநீ
போதியென்றான் வென்றான் புரம். (௫)

அன்னை விடைபெற் றான்மலர்த்தா டாழ்ந்தெழீஇ
மின்னணிவி மானத்தின் மேலேற—மன்னருகிற்
றுய்ய கவிகை சுமாலியொடு மாலினியாந்
தையலார் தாங்கியுற்றார் சார்ந்து. (௬)

ஆர்மங் கலைசுமனை யாதியோ ரொண்கவரி
யேர்விமலை பாங்க ரிரட்டினார்—சார்மருவி
யாலவட்டம் பீலி யசைத்தே கினர்சில்லோர்
கோலவட்டி லன்னார் குயம். (௭)

மன்கோ டிகமடப்பை வாள்கண் ணடிதொடைய
றன்கோடற் கையேந்தித் தோகையன்னார்—நன்கேக
மாது சுசேசை மலைமகடன் றாண்மலரார்
பாதுகைகொண் டேகினள்பின் பாங்கு. (௮)

கமலினிய னிந்திதையாங் கன்னியர்பூந் தார்கொண்
டமலைபுடை செல்கின்றா ரன்பின்—விமலைதன்சீர்
பாடினா ரேகினார் பண்பிற் சிலர்சிலர்நன்
காடினா ரேகினா ராங்கு. (௯)

பாங்கியர்தம் மோடு பரிவார் சிலதியர்கள்
வீங்கொளிவி மானத்தின் மேலேறித்—தாங்குலவு
நானநறு சாந்துசுண்ண நற்சுடர்ப்பூண் டானைமுத
லானசிலர் கொண்டணைந்தா ராங்கு. (௧0)

தோகைகுயில் பூவைசுகஞ் சொற்பயில மின்னிடையா
ரோகையுட னேந்தி யுமையவள்பின்—போகையுற்றா
ரேரண் கொடிகவிகை யேந்தியஞ் சாற்றியெண்ணில்
சாரதர்கள் சூழ்வுற்றார் சார். (௧௧)

பன்னிரண்டு கோடியாம் பாரிடங்கள் பாற்படவே
யன்னவடா டாழ்ந்தருள்பெற் றனின்மேன்—மன்னமைச்சாஞ்
சோமநந்தி யேகினன்முன் றாயசிவை தீயதக்கன்
மாமகஞ்செய் சாலையுற்றாள் வந்து. (௧௨)

மானமே னின்றிழிந்து மாவேள்விச் சாலையுட்போ
யான தக்கன் முன்னுறும்போ தன்னை தனைத்—தானுருத்தே
யாந்தந்தை தாயிலனன் பார்தேவி நீயிங்குப்
போந்ததென்கொ லோமகளிர் போல். (௧௩)

மல்லல்சே ரிம்மகக்கு வாவென் றழைக்கிலைநீ
செல்லுமீண் டுன்றன் சிலம்பெனமின்—சொல்லு
மருகரொடென் றங்கையர்க்கு மாண்சீர்தந் தெங்க
ணிருவரையு மெண்ணலா யீங்கு. (௧௪)

அன்றியுமிங் காற்றுமகத் தாரொனையுங் கோபித்தாய்
நன்றலவென் னெண்ண நவிற்றென்ன—மன்றக்கன்
பேயுடனே யாடல்செய் பித்தன்றன் றேவியாய்
நீயுமவ னீர்மையுற்றாய் நேர்ந்து. (௧௫)

அன்னவனோ டுந்தையுறு மாறறா னினையிகழ்ந்தேன்
பின்னுளர்சீ ரென்மருகர் பெட்புறலான்—மன்னவர்பாற்
காதலால் யாவுங் களித்தளித்தே வேள்வியின்க
ணோதவியுந் தந்தே னுகந்து. (௧௬)

மான்முதலோ ரேத்துகின்றார் வந்தானு நீயுமெனைத்
தான்சிறிது மெண்ணிலீர் நுஞ் சாரிலைநார்—நான்புரிவி
னுற்றுகின்ற வேள்வி யவிநல்கேன் வேதமொழி
மாற்றுகின்றேன் வன்மையினுன் மற்று. (௧௭)

அனையதன்றி யிங்க னடுத்தநிற்கு நான்றான்
றினையளவு மோர்சிறப்புஞ் செய்யே—னெனலுமுமை
சீற்றமுறச் செற்றத்தீ செப்புலகோ டெவ்வுயிரு
மாற்றுவா னோங்கியது வாய்ந்து. (௧௮)

பாருட் கினநீர்ப் பரப்புட் கினவங்ங
காருட் கினமாக களிறுடனே—நாரணனுஞ்
சாற்றயனு முட்கினரேற் றவிலுமை மாதுபொங்கு
சீற்றமெவர் செப்பவல்லார் தேர்ந்து. (௧௯)

வேலையதோர் பாங்கி விமலைதனைத் தாழ்ந்தெழீஇ
ஞாலமெலா மீன்றாய்க்கு நண்ணுசின—மேலுமோ
வந்த மிழைப்பா னமைந்துளா யென்னிலிங்க
னுய்ந்திடும்பாங் குண்டோ வுயிர். (௨0)

அறத்தை யனையா னகன்றுளா னென்னச்
செறுத்தியன்ன தேவரையுந் தீர்க்கும்—பொறுத்தியெனப்
போற்றிநிற்கச் சேடிநனி பொங்குசினத் தீயுளூற
மாற்றியவற் பார்த்துரைக்கு மாது. (உக)

என்னைநீ யெள்ளினமை யெண்ணே னெனதிறைவன்
றன்னை யிகழ்ந்தாய் தரிக்கிலேன்—மன்னமலன்
சிற்குணனே யீறு செயும்போது தாமதமா
முற்குணமின் றேமோ முடிவு. (உஉ)

தீயதன்றச் செய்கை திருவருளா மாயிலுயி
ராய பிறப்பிறப்பி லாம்வருத்த—மாயவிறை
யன்னசெய லீசனுக்கே யன்றிப் பிறர்க்காமோ
வென்னிறைவன் பாலா மெலாம். (உங)

மாமறைநூ லாகமங்கண் மற்றுளவுஞ் சொற்றவனைத்
தாமதனென் றேதத் தருங்கொல்லோ—வாமெவர்க்கு
நாதனுந் தானுவிற்கு நல்லவிநல் காதிகழ்தி
வேதமஞ்சிப் போற்ற வியந்து. (உச)

சிவனெனும்பேர் செப்புவோர் சேர்வருயர் சீர்வீ
டவனை யிகழ்ந்தா யயர்ந்தே—யெவனுய்தி
சாலிழுதை நீரைநீ தண்டமெள்ளி ளூர்க்குறுமென்
றேனுமறை சாற்று மெடுத்து. (உரு)

இதுகே ளயன்மைந்த விங்கோர் மகநீர்
விதுமுடியான் றன்னை விலக்கிக்—கதுமெனவே
வாய்ந்துசெய்தாய் நிற்கதனல் வந்தடைக தண்டமென
வாய்ந்துசொன்ன ளூரா யணி. (உசு)

இன்னணவாந் தீச்சொல் வியம்பிமகஞ் செய்நிலம்விட்
டன்னை பரிசனங்க ளார்த்துவரப்—பொன்னெழில்கூர்
மான மிவர்ந்துதக்கன் மாற்றமுன்னி யேற்றான்வாழ்
வான கயிலைசென்ற ளாய்ந்து. (உஎ)

ஒருவியொளி ரூர்தி யுமையவடன் கேள்வன்
திருவடிதாழ்ந் தையநினைத் தீயன்—பெரிதும்
மிகழ்வுற்ற னன்னு னியற்று நெடிய
மகமழித்தி யென்றாள் வலிந்து. (உஅ)

ஆயவருட் கோமா னதுகொண் டிலனாக
நேயவிழை வார்வெறுப்பு நிற்கில்லை—யாயினுமே
யன்பினேற் காகவன்ன ளூற்று மகஞ்சிதைத்தி
மன்பரவென் றேத்தினண் மாது. (உகூ)

உமைவருபடலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா சுகூச.

# வீரபத்திரப்படலம்.

---

அந்தவெல்லை வீச னனங்கன் பினைவியந்து
சிந்தைதனிற் கொண்ட செயன்முற்றப்—புந்தியின்க
ணுன்னினு னுன்னியபோ தொல்லைநுதற் கண்ணினின்று
மன்னினு னோர்வீரன் வந்து. (௧)

ஏமவரைக் கோடுதொறு மேய்பிறைக டங்கவவை
மாமதியாங் காறுமாரா வவ்வரினைங்—தாமுகட்டின்
சாராரி னேருமன்னுன் றன்று யிரமுடியோ
டாரா யிரங்குழையு மே. (௨)

ஊழிக் கனலுடனவ் வூதையும்பற் பல்வடிவ
மூழிற் கொடுபோ ருளுற்றவபோல்—வாழியவ
ணயிரமுக் கண்டோறு மாயிரமொண் ணாசிதொறுந்
தீயநில மார்த்தெழுந்த சீர்த்து. (௩)

கோவார் பிறைகவ்விக் கொண்டே யுடுமென்று
மேவா விருப்பதுபோல் வீரன்றன்—றூவாத
வாயிரம்வாய் தோறு மமைந்து வளையெயிறுந்
தூயபல்லுந் தோன்றுந் துதைந்து. (௪)

துண்ட மிசையழலோ தோன்று சினத்தழலோ
கண்டனிலே கான்ற கனலதுவோ—வெண்டிசையு
மாயுயிர்கள் யாவு மடுகின்ற தென்பரந்தத்
தீயுகாந் தத்திற் செறிந்து. (௫)

உலகுண் டுமிழ்நீ ருரகங்க டம்மை
யிலகங் கதங்கடக மென்ன—நிலவவிட்ட
திண்டிறல்கொ ளன்னுன் றிருப்புயமீ ராயிரமு
மெண்டிசையு மார்ந்த விவர்ந்து. (௬)

வரமா ரயன்மான் மகவான் முதலோர்
சிரமா லிகையென்பு சேர்பூ—ணுரமாவின்
கோடாமை யோடாதி கூர்ந்து பிறங்கினவே
பீடாமை மார்பிற் பெரிது. (௭)

குந்தமழுச் சூலங் குலிசம்வா ணேமிமுத
லந்தமில்பல் வெம்படைக ளங்கையிலார்—தந்தொளிரச்
செய்ய பணியுந் திகழ்பாப் பணியுமையன்
மெய்யில் விலகினவில் விட்டு. (௮)

தஞ்சமெனத் தன்சரணைச் சார்ந்தவன்பர் தங்குழுவை
யஞ்சலஞ்ச லென்சொலென வார்கழலுஞ்—செஞ்சிலம்பு
மொத்திரங்க வையன்மு னுற்றுநின்றான் றிண்வீர
பத்திரனும் வல்லோன் பரிந்து. (கூ)

அன்னையங்க ணுஞ்சினத்தா லார்பத் திரகாளி
தன்னைநல்க வாயிரமோர் சார்முகத்தோ—டுன்னரிய
வீரா யிரங்கையுமா யேண்வீர பத்திரன்றன்
சாரா யினடுணையாய்த் தான். (க0)

இருவர் மகிழ வினிதுலவுஞ் சூழ்தந்
தொருவருஞ்சீர்ப் பத்திரையோ டுற்றுப்—பொருவின்மா
லத்திரனை யன்னையைத்தாழ்ந் தன்னூர் தமைநோக்கிப்
பத்திரன்முன் சொல்வான் பரிந்து. (கக)

மாலயனைப் பற்றிமுன் வந்திடோ வெஞ்சினத்த
கால னுயிர்முடிக்கோ கண்டவண்ட—நீலநீர்
வையமுற்று முண்ணுகோ மன்னினரு ளாளுனென்
செய்யெனினுஞ் செய்வலென்றான் றேர்ந்து. (கஉ)

என்றவந்த வீரனைப்பார்த் தீசன்வெந் தக்கனெமை
யன்றிமக மாற்றுகின்றா னுயிடைநீ—சென்றங்
கெமதவியைக் கேட்டிவெய்யோ னீந்தனனே யென்னி
லமவிவ் விடைநடத்தி யார்ந்து. (கங)

திருதலின்றே லன்னான் றலையைத் தடிந்து
பரியவன்பா லுள்ளார்ப் படுத்துப்—புரியுமந்த
வெச்சங் கலக்குதியங் கெய்துவோம் போதியென்றா
னச்சங் களத்துவைத்தோ னன்கு. (கச)

அந்த வமயத் தவிர்பத் திரையொடுமை
யெந்தையடி போற்றிவிடை யேற்றானை—நிந்தை
புரிபவன்றன் மாவேள்வி பொன்ற நினைந்தான்
பரிபவமில் வீரன் பரிந்து. (கரு)

உன்னியவ ணீங்கி யுறவுருத்தே யன்னவன்றன்
மன்னுயிர்ப்பில் வேர்வின் மயிர்க்காலிற்—பன்னுரையிற்
கண்ணி லவிர்சடையிற் காமருந்தி யார்சுழியி
லெண்ணில் கணங்கடந்தா னேய்ந்து. (கசா)

தோளிற் காத்திற் றுடையின் முழங்காலிற்
றுளிற்பல் பூதர் தமையளித்தான்—வாளிலவன்
பற்பலரைத் தந்துநிற்பப் பத்திரையுங் காளிகளாம்
பற்பலரைத் தந்தாள் பரிந்து. (கஎ)

வீரபத்தி ரப்பேர் விளங்குருத்தி ரன்னளித்த
சாரதர்க்குட் சில்லோர் தனிநீல—வேருருவர்
கோரபத்தி ரம்மணிப்பூண் கொண்டுமுகில் போற்பொலிந்தே
யாருருமிற் சாற்றுகின்ற ராங்கு. (௧௮)

அக்குடுவி ளாவெயி ளர்பிறையிற் றேன்றவுருச்
செக்கர்வான் போன்றார் சிலர்பூத—ருக்கிரனை
சார்ந்தவரொள் வானிறத்தர் சாரதருண் மாப்பெரியர்
சேர்ந்தகட னேர்ந்தார் சிலர். (௧௯)

அம்பொன் வணர்திருமா லன்ன வுருவினராய்ச்
செம்பொனகம் போன்றார் சிலர்பூதர்—பம்புபசப்
பூர்வடிவர் காய முறழ்வில்லார் வீழ்தூங்கு
சீர்வடத்திற் றெக்கார் சிலர். (௨௦)

ஆங்கவர்க்கு ளான்மடங்க லாளி களிறுபுலி
வாங்குதிரை யெண்குகலை வத்திரத்தா—ரோங்குசிலர்
பன்னினைய ரீட்டம் படையனித மேண்வீர
முன்னரிதேற் சொல்வதெங்க ஞோர்ந்து. (௨௧)

கையிலெண்ணில் வான்படையர் காய்பூணர் தீக்கண்ணர்
வெய்ய மொழியர் வெருவுருவர்—வையமுண்ணும்
வாயர் பலகறைநேர் வாளெயிற்றர் செஞ்சடிலர்
தீயுமிழுஞ் சூலத் தினர். (௨௨)

துண்டமிசை வீழனலர் தொல்லண்டம் வீக்குகையர்
சண்டவளி பின்செலமுன் றுஞ்செல்வர்—பண்டிதனில்
வெங்கனல்போல் வாட்டுபசி மேயினவர் தீயெனினு
துங்குந் திறலார் துனித்து. (௨௩)

ஆலமதிற் றீய ரடிபெயர்க்குந் தோறுமே
ஞாலமங்கை யஞ்ச நடையினர்—சாலவே
யூழிக்கா லுட்கு முயிர்ப்பர் கடல்வயிற்றர்
பாழித்திண் பூதர் பலர். (௨௪)

பத்திரன்றன் றிண்புயஞ்சேர் பத்திரையீன் காளிகடா
மித்துணையென் றெண்ணற் கியையுமோ—வத்தகையா
ரந்தமில்பல் லாயுதங்க ளங்கையுறத் தும்பைமிலைந்
துந்தெழில்கூர் தோற்றமுற்ற ருற்று. (௨௫)

சாடியலார் காளிவிந்தை சாகினிபன் மோகினிதெவ்
வாடியலார் யோகினியேண் வைரவிமன்—மோடியென
வெம்படையும் பூணும் விறலுநனி கொண்டுசெல்வர்
பம்பரிவை மார்கள் பலர். (௨௬)

கணங்கொளன்ன திண்பூதர் காரிகைமார் யாரு
மணங்கினுட னண்டகைபொன் னார்தாள்—வணங்கிப்
பரசியவர் பாற்சூழ்ந்து பாடிநனி யாடி
விரசியவண் போதலுற்றார் வேட்டு. (௨௭)

பானுகம்பன் முற்கணங்கள் பன்வீரன் முன்னாகி
வானியங்கள் சாற்றி வழிக்கொண்டார்—கோனவன்பால்
விண்டண் குடைபிடித்து வெண்கவரி வீசியுற்றார்
தண்டன் முதற்கணவர் தாம். (௨௮)

பாவையர்கள் சில்லோரார் பத்திரைதன் பாங்காகித்
தாவில் கவிகைக டாங்கியே—மேவவெழில்
வெண்கவரி வீசிப்பல் வேறுசி கள்புகன்று
தண்மலர்க டூய்ப்போர்த்தார் தாம். (௨௯)

பார்முழுது மீண்டிப் படையார்க்கும் பேரோதை
யார்கலியின் வாயடக்கி யாரவெங்கும்—கூர்தருவெம்
பூழியெழுந் தம்மா புவிவான் பதவிமறைத்
தூழியிருள் போற்பரந்த தூற்று. (௩௦)

இப்பெரிய சேனையுற வெங்கோ னெழுந்துசினத்
துப்புடன்போய்த் தீயதக்கன் றன்மகஞ்செய்—வைப்பணுகித்
தன்புடையர் தானைத் தலைவர்கட் கொன்றுரைப்பான்
வன்புருமே றட்க வலிந்து. (௩௧)

பற்றலரு ரட்ட பரனையெள்ளி நீக்கிவெய்யோன்
மற்றவர்க்கொண் டாற்று மகச்சாலை—யுற்றவுயர்
வெய்துகெடு வாயி லிவர்சூற் றொடுசேமஞ்
செய்துநனி காத்திரென்றான் றே. (௩௨)

என்றலுமே சேனையோ ரிஞ்சியயன் முற்றுமுற்றி
நின்றனர்வான் வாய்தொறு நீர்மையுறச்—சென்றனர்வெந்
தக்கனவன் றானையாய்த் தாமெதிர்ந்தார் தம்மையட்டு
மிக்கவருன் றுய்த்தார்த்தார் வேர்த்து. (௩௩)

வீரபத்திரப்படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா ௭௨௭.

# யாகசங்காரப் படலம்.

---

மாகமன்சேர் மாதுடனே மாவீரன் வன்றக்கன்
யாகமுறு சாலை யிடத்தெல்லை—யேகலுமே
தீர்த்தனொடு தேவிதனைச் செப்பயன்முற் றேவரெலாம்
பார்த்தனரச் சுற்றார் பதைத்து. (க)

மடங்கல் வரவுகண்ட மானினம்போல் யாக்கை
நடுங்கினரோண் சிந்தி நகைபோ—யொடுங்கி
யுயிரில் லவர்போ லுணங்கியிவை சில்ல
வயர்வுற்றுச் சொல்லலுற்றா ராங்கு. (உ)

ஈசனுங்கன் மாதும்வந் தெய்தினா ரென்பரன்னார்
மாசினத்தின் காட்சிநல்க வந்ததென்ப—ராசின்றிப்
பேசினிவர் சீற்றம் பெரிதென்பர் நம்முயிர்க்கு
நாசம்வந் திட்டதென்பர் நன்கு. (ங)

தக்கன் றனக்கிறுதி சார்ந்தந்த தின்றென்பர்
மிக்கதோ ரூழியை யார் வென்றதென்பர்—முக்கணனை
வெய்யசினங் கொண்டிகழ்ந்தோர் வீவரன்றே யென்பதற்கோ
ரையமே யில்லையென்ப ராங்கு. (ச)

ஈடறுமா பூதரெங்கு மேவலைந்தா ரென்பாரிங்
கோடவரி தென்பா ரொளிக்கவிட—நாடவரி
தென்பா ரினிச்செயலென் னென்பார்கு ழங்கியுற்ற
வன்பார் கயம்போன்றார் வாய்ந்து. (ரு)

அஞ்சினரிவ் வாறுரைத்தே யண்ட ரரந்தைமிகச்
செஞ்சரண்சார் பூதர் சிலர்சூழக்—கஞ்சமலர்த்
தாள்விமலை யோடுசென்று தாவுசின வீரனன்னான்
வேள்விபுரி தன்மைகண்டான் வேர்த்து. (சு)

இடித்தா லெனநக் கெரிவிழியிற் காலப்
பிடித்தான்கொம் போதை பிளந்த—தடித்தானம்
விண்டதுமா ஞாலம் வெடித்ததுமா மேருநனி
மண்டு முயிர்துடித்த மற்று. (எ)

எழுகின்ற வோதைகேட் டேரிமையோர் யாரும்
விழுகின்றார் சால வெருவி—யழுகின்றா
ரோடுகின்றார் வேள்வி யொழிந்ததோ வென்றுசொலி
வாடுகின்றார் மீளுகின்றார் வாய்ந்து. (அ)

காலமதில் வீரன்போய்க் கஞ்சன்மா னுட்கமகத்
தாலமுறத் தக்கன் றகநோக்கிச்—சாலவஞ்சி
யெக்கருமஞ் செய்வ தெனவுழந்து தேறிமன்போ
னுக்கிரனைப் பார்த்துரைப்பா னென்று. (௯)

இங்கணம்வந் துற்றதென்கொல் யாரைநீ யென்னயான்
சங்கரன்சேய் தக்கநின்றன் சார்மகத்தி—லங்கவற்கு
நல்கு மவிப்பாக நல்குதற்கா வப்பரன்சீர்
மல்கருளிற் போந்தெனென்றான் மன். (௧௦)

சாற்றவான் றக்கனவி சங்கரனுக் கில்லையெனப்
போற்று மறையெழுந்து பொள்ளெனவோ—ரேற்றுடையான்
மாறி லிறைவன் மகத்தி லவற்குநல்குங்
கூறிதுநீ யீதியென்ற கூர்ந்து. (௧௧)

நிலைமையிலான் கேட்ப நெடிதின்ன கூற்று
னலமறைகள் சாற்றவெய்யோ னல்காத்—தலைமைகண்
டத்தனவன் றொல்சீ ரறைந்தேத்தி யங்ககன்று
தத்தமிடம் போயவன்றே சார்ந்து. (௧௨)

போதலுமே தக்கனைத்திண் போர்வீரன் பார்த்துமறை
யோதுபொருள் கேட்டியன்றே யுண்ணினைந்தே—யீதியவி
யத்தனுக்கே யென்ன வணங்கோடு காணும்
பித்தனுக் கீயனென்றான் பேர்ந்து. (௧௩)

ஆங்கதனைக் கேளா வயனுதி யர்ப்பாரா
நீங்களுமே மற்றவன்பா னின்றீர்சீ—ரோங்கமலற்
கின்னவிநல் காதெள் ளிசைவு நுமக்குமென்று
னுன்னருமா வீர னுருத்து. (௧௪)

என்றலுமே யன்னவரு ழேய்வினது கேளார்போ
லொன்று முரையாரா யூமரென—நின்றிடலு
மின்றயங்க வீரன் விழித்து வெகுண்டிவரே
ணன்றென்று னுமுறவே நக்கு. (௧௫)

கடித்தா னெயிறுசெந்தீக் கான்றனனங் கையிற்
பிடித்தான் வலாத்தண்டம் பேர்ந்து—தடித்தார்
கடித்தா ருஞ்சாயக் கண்டசக்க னுட்க
வடித்தா னரிவீழ்ந்தா னங்கு. (௧௬)

விண்டுமுனம் வீழ்தலுமே வீரன் மலரோனைக்
கண்டுநனி குட்டக் கவிழ்ந்துவிழ—வண்டுமென்ன
வாக்குறுமின் றன்னைமற்ற மாதர் தலைவாளான்
மூக்குமுலை கொய்தான் முனிந்து. (௧௭)

பீடினார் வீரனிப் பெற்றியினன் னார்முனஞ்
சாடினான் கண்டங்கட் சாரவரு— மோடினா
ரோர்ந்துலந்தார் வீழ்ந்தா ரொளித்தற் கிடமிலெனத்
தேர்ந்து சிதறினார் சேர்ந்து. (௧௮)

ஆய பொழுதிலிரி யம்புலியைக் கண்டிறையோர்
சேயடியாற் சின்னமுறத் தேய்த்துவிட்டுக்—காயருண
னச்சங்கொண் டோட வவன்றன் னெயிறுடைத்து
மெச்சுபகன் கண்பறித்தான் வேர்த்து. (௧௯)

சீற்றமிகு வீரன் றெருமந் திரிந்தயருங்
கூற்றன் றலைதுமித்துக் கொன்றனரி—சாற்றுகுயி
லங்கமுறீஇ வானேக வன்னான் றனைத்தடிந்து
வெங்கனல்கை நாவரிந்தான் வேர்த்து. (௨௦)

செந்தழலோன் றேவி திகழ்நாசி யைக்கிள்ளி
யெந்தைபிரான் சாடலுமே யேணிருதி—நொந்தடியில்
வீழ வவனைவிட்டு வெவ்வருணன் காறனைதன்
மாழ வவர்த்தடிந்தான் மற்று. (௨௧)

எட்டென்னு மாசையா னேங்கியஞ்சி யேகலுமே
கிட்டினான் வைதான் கெடுத்தலின்றி—விட்டனனே
ரொண்சோ ணிதபுரக்கோ னோட வவன்றலைசீ
ரண்சோதி வீட்டினா னங்கு. (௨௨)

மணிகளவிர் சாலையார் மாமகத்தின் றெய்வம்
பிணையினஞ்சி யேகப் பெருவிற்—கணைதொடுத்தே
யன்னான் றலைதுமித்தா னையனவை தேர்ந்தயனீன்
மன்னுங் கெழுந்தான் மருண்டு. (௨௩)

வலைப்பட்ட மான்போன் மயங்கிவெய்ய தக்க
னலைப்பட்ட நெஞ்சினனா யாற்று—தலைப்பட்ட
விம்மா மகமென்மு னீறுபெறு மோவென்னா
விம்மா விவைநவின்றான் வேர்த்து. (௨௪)

வேதனுரை வாய்மையால் வேள்வி புரிந்தியா
னேதமிலா னல்குவள மெய்தினன்பி—னாதிதனைச்
சிந்தைசெய்தே னில்லேன் சிவையையுநல்கு நீர்மையினா
னிந்தைசெய்தே னந்தைகொடி தின்று. (௨௫)

மறைமுறையிற் சற்கு வழங்கு மவியின்
முறையை விலக்கினேன் முன்னே—யறைதகிசி
வாய்மை தனையிகழ்ந்தேன் வந்தமக டன்னைவெறுத்
தாய்வானை நிந்தைசெய்தே னங்கு. (௨௬)

அன்றியுமே வீர னவியீதி யாலெனலு
நன்றெனவே யீந்திலே னன்மைபிலேன்—மன்ற
வுறுதிதனை நாடிலே னுற்ற வெவர்க்கு
மிறுதிதனைத் தேடினேன் யான். (உ௭)

வேதப் பொருளுணர்ந்தும் வித்தகனை நிந்தித்துப்
போதிறத்தற் கேதுற்றேன் புந்தியுழ்—மீதுசெலு
மென்னத் தருமா றினைந்துரைத்து நெஞ்சொடினி
யென்னசெய்வ தென்றெணினு னீண்டு. (உ௮)

பூதர் பரப்பும் பொருவீர னேண்சினரு
மாது தகவு மனக்கண்டிப்—போதிங்க
ளேடரிதென் றன்னியும்ப ருற்றமைபோற் செய்கிலனென்
ருடலன்முன் னின்ரு னவன். (உ௯)

கண்டதனை வீரன் கனன்றுதக்க நீயானை
யண்டரொடு மெள்ளினு யன்னதாற்—றண்டமிதென்
றெற்றிகழ்வாள் கொண்டவன்ற னென்சிரமீர்ந் தங்குநல்கத்
திற்றியெனத் தின்றதுசெந் தீ. (௩௦)

அங்கியுண்ண வேதவல்லி யாதியரோர் மாமகளிர்
தங்குழல்கள் சோர்தரவே தாம்புலம்பி—யங்கணுற
மன்வண் குழையிறுத்து மற்றோர் தலைதடிந்தா
னுன்பத் திரகாளி யுற்று. (௩௧)

காளியுமா மீளியுமே காயத் தவர்முனிவர்
கேளி ரிவரைக் கிடைத்தெழில்கூர்—தாளிற்
படையிற் றடிந்தே பகர்தக்கன் வேள்வி
யடையத் தொலைத்தா ரடர்ந்து. (௩௨)

இற்றெலா ரோர்வேலை யோர்வீரன் றன்னிசைவாற்
சுற்றனிகர் நோக்கிச் சுலவுமதிற்—பொற்றைதகர்த்
துள்புகுந்தே யார்த்தா ருலைந்தெவரு மாங்கிரியக்
கொள்பரவை போல்வளைந்தார் கூர்ந்து (௩௩)

தியக்குற்ரு ரஞ்சித் திடுக்கிட்டார் நெஞ்ச
மயக்குற்ரூர் விஞ்ச மறுகி—யுயக்குற்ரூர்
நற்றவரும் வானவரு நாடெண் டிசையினரு
மற்றவரு வந்த வரைப்பு. (௩௪)

இருகுரவர் தம்மை யெழில்கூர் மனையைத்
தருமகரைச் சுற்றத்தார் தம்மைக்—கருதி
விளிக்கின்ரூர் சால வெருவிப் பிணைத்து
வொளிக்கின்ரு ரந்தணராங் குற்று. (௩௫)

போர்க்களமாஞ் சாகரத்தார் புங்கவரை மாதவரை
யார்க்கக் கலக்கிவல்லோ ரங்கிரியப்—பார்க்கின்றார்
சிந்தை தியங்கச் சிரத்தைக் கறிக்கின்றார்
தந்தங் கறகறெனத் தாம். (௩௬)

மூறிக்கின்றார் திண்டோண் முழுவென் புடலங்
கறிக்கின்றார் நாவோடு கண்ணைப்—பறிக்கின்றார்
தேய்க்கின்றார் செந்நீர் செறிந்தோடத் தேவரையே
மாய்க்கின்றார் பூதர் வளைந்து. (௩எ)

கரக்கின்ற மாதவரைக் கண்டுபிடித் தங்க
மாக்கொம் பெனவொசித்து வாயிட்—டிரக்கின்ற
வெங்கழுகும் பேயும் விரும்பவண்டர் தங்குழா
மங்கழவே யீகின்று ரார்த்து. (௩அ)

நெய்யுண்டார் பாலுண்டார் நேரி லவியுண்டார்
துய்யுண்டார் தேச்கெடுப்பச் சூழ்பூத—ரையர்
தவித்தா ரிரிதரவே தாவியெழு மூத்தீ
யவித்தார் மகமழித்தா ராங்கு. (௩௯)

தீவக்குண்டத் தொள்வேதி தன்னைச்சாய்த் தங்கண்
றுவக்குண்ட வாவின் றொகையை—யவிழ்க்கின்றார்
கங்கை யலையிற் கறங்கிச் செலவிடுவார்
செங்கையுள வீரர் சிலர். (௪௦)

தக்கன் மருமக்க டம்மைப் பிடிக்கின்றார்
மிக்க கருமம் விளக்கின்றார்—தொக்கவவர்
தங்கணுயர் மார்பின் றடத்திற் புடைக்கின்று
ரங்கணுமிழ் விந்தா ரவி. (௪௧)

குட்டென்பர் போழென்பர் கொல்லென்பர் தேயென்பர்
வெட்டென்பர் குத்தென்பர் வீழ்த்தென்பர்—கட்டென்பர்
வெம்பூத ரிவ்வோதை மேவியதே யெவ்விடனு
மைம்பூத மச்சமுற வாங்கு. (௪௨)

கையற்றார் காதற்றார் காலற்றார் கண்ணற்றார்
மெய்யற்றார் நாவற்றார் மேவுருவி—னையற்றார்
காயத்தா ரோடு களத்தா ரெவருமே
காயத்தா ராயினராங் கண். (௪௩)

இத்திறத்தி னுரையுமே யேந்த லணிகமொடு
பத்திரைதன் சேனையுமே பாற்றவிற—னத்த
னெழுந்தான் மகத்தி னிறப்பதனைக் கண்டான்
செழுந்தா வெரியிற் சினந்து. (௪௪)

பரமனையென் பான்மையர்க்கிப் பண்புறுமென் றெண்ணான்
றெருமந்து வீரன்மேற் சென்று—பொரவினைந்தே
யுன்னினன்வீ வேங்கை யுடைந்தமையாற் றன்சீற்ற
வன்னியைப்புள் ளாக்கினான் மால். (௪௫)

முன்னின்ற புண்மேன் முராரிபொருக் கென்றேறி
மின்னைம் படைதாங்கி வேள்வியிட—மன்னி
யெடுத்தனன்சிங் கைவாய்வைத் தேறுநீ ருட்கப்
படுத்தனன்பே ரோதை பட. (௪௬)

தீச்சிகைநன் கீந்த சிலைவளைத்து மால்கணைக
ளோச்சினன்றின் வீர னுறுபடைமேன்—மீச்செலுஞ்சீர்க்
காளிகளுங் கூளிகளுங் காய்ந்தரியைச் சூழ்ந்தரிதாய்
நீளிகணோர்ந் தாற்றினார் நேர். (௪௭)

தண்டா ரரியமர்தன் றானைமுற்றுங் கொண்டாற்றல்
கண்டா னகைத்தான் கவின்வீர—னண்டானோர்
போரதனைச் செய்யவித்தன் பூமி சிறிதெனவோர்
தேரதனை யுய்த்திட்டான் றேர்ந்து. (௪௮)

மறையா யிரம்புரவி மன்கே தனங்கள்
கறையார் படைமீக் கவிந்த—பொறையார்தே
ரங்கனொல்லை மேவிற் றயனறிவு பெற்றெழீஇத்
துங்கமக மாய்வுகண்டான் சூழ்ந்து. (௪௯)

விண்ணிழிதேர் மேலே விரைவினயன் பாகெனய்தி
முண்ணெடுங்கோல் கொண்டுகைத்து மொய்ம்புடையோ—யண்
வீறிரதந் தன்னையுய்த்தான் வீரநீ தேவியோ [ணனிற்கோர்
டேறுதியென் றேத்தினா னிங்கு. (௫0)

செங்கமலன் மேற்கொள் சினஞ்சிறிது நீங்கியத்த
னங்கணன்னை யோடதன்மே லாகவயன்—பொங்கனிக
வீட்டந் தனைநீக்கி யோரிமுன் னுய்ப்பவல
னாட்டமுறப் பார்த்துரைத்தா னன்கு. (௫௧)

தெழித்தபுனல் சென்னியிற்கொ டேசார் சிவனைப்
பழித்ததக்கன் றன்னையடல் பண்பே—யழித்துமக
மன்னவன்பா லுற்றவரை யங்கடுவ தென்னைசொன்னீ
யென்ன வியம்பினன்மா லேய்ந்து. (௫௨)

பரமன் றனையிகழ்ந்தோன் பண்ணு மகத்தில்
விரவியவி யுண்டவர்க்கு வேத—முறைதருமுன்
றண்டமது செய்தனநின் றன்னையுங்கொல் வோம்வலையேல்
விண்டதுநீ காத்தியென்றான் வேந்து. (௫௩)

வீரனது கூற வெகுண்டுமால் விற்குனித்தே
மாரியெனப் பூதருலே வான்பொழியச்—சூரியோ
டத்தனது கண்டுகைத் தாடகமா வெற்பினையே
யொத்த தனுவளைத்தா னோர்ந்து. (ருச)

செற்றமிக வையன் சிலைவாங்கி னன்சிறிதே
பற்றினா னுறைகொளப் பாமநீர்—வற்றினகல்
நீண்டபுவி கம்பமுற்ற கேழ்கிளர்பல் காண்டந்தூய்
நீண்டவன்மெய் போர்த்தா னெடிது. (ருரு)

வீராதி வீரன் விடுகணைக ளேபடவே
யோரா யிரங்கோன்மா லுய்க்கமன்மே—னோராவவ்
வம்பொத் தனது யரிநுதன்மீ தெம்பெருமான்
வெம்பொத் திரம்விட்டான் வேர்த்து. (ருசு)

ஏவுகணை மாயனுத லெய்தவவன் சோர்தலுமன்
மாவிரதத் தூன்றினன்வின் மால்யர்த—லோவளவு
மன்னு னெதிர்தாலு மண்ணலுமே நேர்ந்தனன்போர்
முன்னுப் புரிந்தார் முறை. (ருஎ)

போரிவ் வணம்புரியப் புண்ணியன்மா றிண்ணுரத்தில்
வாரியண லன்னபடை மாழவுய்த்தான்—சோரவுள
முய்திறனின் றேர்ந்தெழுந்த வொள்ளரியை நோக்கியத்தன்
செய்நியம மொன்றுரைத்தான் றேர்ந்து (ருஅ)

மெய்வதத்தை யார்க்கும் விரைவி னிழைக்குமா
தெய்வப் படைகள் செலுத்தமா—லவ்வனைத்து
மவ்வப் படையா லகற்றினு னேற்றுவருந்
தெவ்வர்ப் படுத்தான்றன் சேய். (ருகூ)

அரியதன்பின் வீரன்மே லம்புபல வெய்யச்
சரமவற்றை மாற்றிமால் சார்ங்க—மிருதுண்ட
மாக்கியத்த னீரம்பா லன்னவனூர் புள்சிறையைப்
போக்கியொல்லை யுய்த்தான் புவி. (சுo)

மாயவனுந் தன்மையினுன் மால்பல் கணைரைநல்க
நாயகன்முன் மைம்முகில்போ னண்ணுதலு—மேயவரைப்
பாழியந்தோள் வீரன்கட் பாயனலா னீறுக்க
வாழியைச்செல் கென்றுவிட்டா னுங்கு. (சுக)

விடுத்த திகிரிதனை வீரனெழிற் கையாற்
பிடித்து விழுங்கினன்மால் பேர்த்து—மெடுத்திடுதிண்
டண்ட மெறியத் தடுத்தான்றன் பொற்றண்டா
லண்டர் தொழுந்திறலோ னுங்கு. (சுஉ)

சங்காரஞ் செய்தண்டந் தான்விழலும் வாள்விடுப்ப
வுங்காரஞ் செய்தா னுமைமைந்த—னங்காரம்
மேனியன்மெய் வேர்த்துநின்றான் வீர வெகுளலென
வானி லெழுந்ததரன் வாக்கு. (௬௩.)

விண்மொழியைக் கேளா விமலன் சினமகல்போ
தண்மணித்தேர்ப் பாக னதுநோக்கிப்—பண்மகத்திற்
பேதையனா னுண்ட பிழைபொறுப்பா யென்றவன்றாட்
போதையன்பிற் றாழ்ந்தான் புலர்ந்து. (௬௪)

ஆரணனை நோக்கியத்த னஃதாக வென்றருள
காரணனு மன்னா னலங்குலவு—பேரருளின்
றன்மையைக்கண் டண்டிதுவாந் தக்க வமயமெனா
நன்மையுற வேத்தினா னன்கு. (௬௫)

பாரவரி வில்வீட்டிப் பல்படையு மேசிந்திச்
சீரமரு மாழியுமே செல்லநுங்கிப்—போரிலெனை
வென்றுபுகழ் வேய்ந்தனையேன் மேதக்க வீரமுற்ற
நின்றகைமை யாருரைப்பர் நேர்ந்து. (௬௬)

தக்கன் புரிபூ சனைவிழைந்து வேள்வியின்கட்
புக்கனனுள் புந்தியிலேன் புண்ணியனே—மிக்கநின்னா
லீதுபெற்றே னந்தோ விறையோன் றனையிகழ்ந்து
தீதுபெற்றோர்ச் சேருவரோ தேர்ந்து. (௬௭)

ஆதி யிறையையொவ்வா ரன்னவரைச் சேர்ந்தவர்க்கு
வேத மிசைக்கும் வியன்றண்ட—மீதெலாம்
பேதியாதாற்றினாய் பேதையேங் கட்கினைய
நீதியா மெந்தாய் நினக்கு. (௬௮)

விழியின் முறுவறலின் வெய்துயிர்ப்பி லார்ப்பின்
மொழியி லுலக மூடிப்பா—யிழிதகையோன்
வேள்விக் கிறுதி விளைத்தனைநீ யாவுமே
மாள்விக்கினார்தடுப்பார் வந்து. (௬௯)

இறுதிசெய்தல் சீற்றமின்ப மேயாண்மை யென்னா
வறைசத்தி நான்கரனுக் கையை—பறைகாளி
மன்கவுரி மும்மைபெற்றோர் மற்றதுகொள் சத்தியா
னென்கு மறைக ளினிது. (௭௦)

ஈசன் பெருஞ்சத்தி யென்னிலுறு பின்னமன்று
பேசன் பவற்குப் பெரிதுடையேன்—தேசிழந்த
நேமியர்ச்சித் தெய்துகின்றே னீபொறுத்தி குற்றமெனா
வாயினைத்தான் வீழ்ந்தா னரி. (௭௧)

தீர னரிக்கன்பு செய்தணிய காலைதனிற்
பாரிடங்கள் சூழநந்தி பன்னவர—னாரியொடு
வீங்குவிடை மேற்றோன்ற வீரனச்சத் தோடிறைஞ்சப்
பாங்குளருந் தாழ்ந்தார் பரிந்து. (எஉ)

கண்டனள்வேள் விக்கட் கவுரி கழல்கையுரந்
துண்டந் தலைதோ டணிந்துவிழ—வண்டரும்வெந்
தக்கனுயிர் போய்க்கிடந்த தன்மையினை நீங்கியருண்
மிக்குவாச் சொல்வாள் விதந்து. (எங)

தின்னா தனைநோக்கிச் சம்புவே வேள்விக்கு
மன்னான வற்குமங்கு மற்றெவர்க்கு—மென்னாண்
முடிவுற்ற தென்பர் முதல்வநின்சீர் பேணார்
மடிவுற்றார் வீரனான் மாய்ந்து. (எச)

மூந்து மிவரை முடித்தி யெனமுடித்தாய்
மைந்தன் றனைக்கொண்டு மற்றனைய—ருய்ந்துகுறை
போயினுயிர் பெற்றெழுவான் புண்ணியனே மிவ்வாமு
நீயினிது நல்கென்றா னோர்ந்து. (எரு)

என்று தொழுதே யிறைவி யியம்பலுமே
நன்றாரு ளென்ன நகைத்திறைவன்—றன்புடையா
ராண்டகையை நோக்கிமகத் தாங்கிறந்தார் தம்முயிரை
யீண்டுருவிற் சேர்த்தியென்றா னீங்கு. (எசு)

வீர னதுதேர்ந்து மேனா ளெனவிளிந்தீர்
யாரு மெழுதி ரெனநவிலச்—சீரமார்
சோருமையர் மாமுனிவர் துஞ்சி யெழுந்தவர்போ
லாருயிர்தாம் பெற்றெழுந்தா ராங்கு. (எஎ)

தண்ட மியற்றிய தூஉந் தாவுயிர்மெய் பெற்றதூஉங்
கண்ட கனவுபோற் கண்டுணர்ந்தார்—மண்டெவருஞ்
சிந்தை மருண்டு சிவனை யிகழ்ந்ததினால்
வந்தபழி யுன்னிநைந்தார் மற்று. (எஅ)

மன்வீரன் றன்னோர் மருங்காகத் தேவியுடன்
மின்வீசு செஞ்சடையெம் வித்தகனைப்—பொன்வீசு
மந்தாரத்தார் கண்டஞ்ச வஃதுணர்ந்தே யஞ்சலென்றான்
கந்தாரத்தார் காளத்தான் காண். (எகூ)

என்றிசைக்க வீச னிமையோர் மகிழ்ந்தணித்தாய்ச்
சென்றிறைஞ்சித் தீயதக்கன் செய்மகத்தி—னின்றிருந்த
வந்தையுளே முன்வந் தருள்புரிந்தாய் மைந்தர்க்குத்
தந்தையன்றி வேறுண்டோ சார்பு. (அ0)

வேதத் திறங்கடந்த வேள்விப் பலியருந்தும்
பேதைச் சிறியேம் பெரும்பகலும்—பாதகத்தி
லேதப் படாமே யிமைப்பி லதுதொலைத்த
வாதிக்கென் செய்வ தடுத்து. (அக

இங்குன் னடிபிழைத்தோ மெல்லோமும் வீரன்ற
னங்கரத்தா லூறுபட்ட வாறெல்லாம்—புங்கவனே
பங்கங்க ளன்றே பவித்திரமாய் மற்றெங்க
ளங்கங்கட் காமே யணி. (அஉ

கங்கை முடித்ததூஉங் காய்கனலை யேந்தியதூஉ
மங்கணூ ரால மருந்தியதூஉஞ்—சங்கரனே
நங்கையுமை காண நடித்ததூஉ முற்பகலு
மெங்கண்மேல் வைத்தவரு ளே. (அங

ஐய பலவுண் டறிவிலே னின்றனக்குச்
செய்ய வருபிழைகள் சிந்தைகொளே—றையலத்த
வென்ன வதுதணிந்தா மென்னலும்பொற் றாளிறைஞ்சி
யன்னமகிழ்ந் தாடினா ருற்று. (அச)

அன்னபொழு தத்த னயன்முதலாந் தேவர்மே
லின்னருட்கண் வைத்தே யியைந்தருந்து—மன்னரசு
மூன்றிறத்திற் செய்திரென முன்னோன்சீர் போற்றினார்
யின்றனயற் காணான் விதி (அரு)

தக்கன் சனத்தோடு தானெழாத் தன்மைகண்டு
நக்கனற்றா னங்கிறைஞ்சி நான்முகத்தோன்—மிக்கதண்ட
மையசெய்தி கையனெழ வாருள்செய் கென்னவர
னுய்யவருள் செய்தா னுவந்து. (அசா)

இறையருள்கண் டேந்த விறைஞ்சிவெய்ய தக்கன்
குறையுடலோர் பூதம் கொணர்தி—யிறையினென
வீர்த்துவந்து மன்முனுய்ப்ப வேய்மைத் தலைகண்டு
சேர்த்தியெழு கென்றான் சிரித்து. (அஎ)

எழுந்ததக்கன் முன்னின்ற வேந்தலைக்கண் டஞ்சி
விழுந்திறைஞ்சி நாணியின்னல் வேலை—யழுந்தினனால்
விஞ்சுபாற் காணு வெருக்கொள்ளத் தக்கவினி
யஞ்சலைநீ யென்றா னரன். (அஅ)

மேடமுகத் தக்கன் விமலனிணைத் தாளிறைஞ்சிக்
கோடலிலா வுள்ளத்துக் கோமானே—நீடுவினை
மாலயன்போ லுன்னினின்றன் மாயையா லெள்ளினேன்
காலவறி வில்லனென்றான் றான். (அகூ)

காலை யதிலம்மை காளிதன்ஞே டுக்கிரற்கூய்
வேலவனந் தேவியென வெந்நீவி—யேலவர
மீந்தா ளரியயன்மா லேனையரு மேத்திநிற்ப
வாந்தா ஞுரைப்பா னவர்க்கு. (௯௦)

வம்மினயன் மாலாதி வானவர்நீ ரெள்ளின
தெம்மைமுன் ஞூழ் நாஞுற் றிரங்கலீ—ரம்மவென்று
னன்னவனைப் போற்றவும்ப ரையனங்க னேகிஞெ
ஞுன்னும் பரிசனங்க ளோடு. (௯௧)

ஓரற் கருங்கைலை யுற்றுமையோ டத்தனெறூழ்
வீரற்கு விண்மேல் வியன்பதவி—யார
வளித்திருத்தி யாங்கென்ன வன்னவர்தாள் போற்றிக்
களித்துவிடை பெற்றுன் கணத்து. (௯௨)

நீங்கையருள் பொற்றேரிற் சார்ந்திருவர் தாமுமிவர்ந்
துந்திடவே பானுகம்ப ஞெண்பதம்போ—யந்தளியிற்
றூவியலார் சாரதர்கள் சூழ்தரவே மாவீரன்
றேவியுடன் வீற்றிருந்தான் சேர்த்து. (௯௩)

யாக சங்காரப்படல முற்றிற்று.

ஆ திருவெண்பா ௭௯௮.

---

# அடி முடிதேடு படலம்.

---

முன்னிறைவன் வந்திடுங்கா ன,முன்னமரர் தம்முனயன்
றன்னமர்சேய் தக்கன் றனைநோக்கி—யென்னுணர்ந்தா
யென்னியற்றி யென்கருதி யாரிடத்திற் பெற்றனைதா
னென்னையுற்று யாது னெண்ணம். (௧)

மாய்விலதோர் வானவர்க்கு மாதவர்க்கு மற்றவர்க்கு
மேய்தருமோர் கூற்ருஞு யேண்டொலைத்தா—யாய்பெரியர்
சொன்னதூஉ மோர்ந்திலாய் சோதிதனை யெள்ளிஞெ
யிந்நிலைய தாயிஞு யிங்கு. (௨)

அயர்த்தனையெங் கோன்மேன்மை யஃதுன் னளவன்
றுயிர்த்தொகைகட் கெல்லா முளதே—மயக்குற்றுய்
முற்றுணர்வு பெற்றளிக்கு மொய்ம்பெங் கணிஞுமுண்டங்
குற்றருளி னீக்கினன்றே வோர்ந்து. (௩)

ஆதலினா லண்ணனற்றா னர்ச்சனையே செய்திபவத்
தீதகற்றி யின்னருளே செய்குவனென்—றோதமைந்த
னாய்திறமா முங்கணா முன் னாற்ற மயலத்தனருள்
செய்த னுரைத்தியென்றான் றேர்ந்து. (௪)

முன்னலரோன் மைந்தன் முகநோக்கி முன்னவின்றோ
மின்னமுமக் காதை யியம்புவோ—மென்னவவன்
மேலதோர் மெய்ப்பொருளா மென்றிறைவன் வந்தருள்செய்
கோலமுன்னிச் சொல்வனன்பு கூர்ந்து. (௫)

சதுர்யுகமீ ராயிரங்கள் சாரினெனக் கோர்நா
ளாதுவந்தி சேரவிரு ளாகான்—மதிமருண்டு
கண்டுயில்வ னவ்வெல்லை காயங்கோ ளாவொடுங்கு
மண்டர் கிளையொடுங்கு மாங்கு. (௬)

மண்ணு ருயிர்கள் வறந்திறுதி யாகுமே
விண்ணோர் பதங்கள் வியன்முனிவ—ரெண்ணாரு
மெண்ணுசன லோகமிசை யெய்துவர்நாட் கடல்பா
ருண்ணுபுபோங் கீழ்சா ருலகு. (௭)

மூன்றீ ரெழுந்தோங்கி மூவுலகும் போர்த்தெங்குந்
தன்னீர்மை யாகுஞ் சமையத்தான்—மன்னீ
ளிலையிலிறை தானுன்னி யெய்குழவி யேபோன்
மலிகண் டுயிலுமே மால். (௮)

கண்டுயிலு கின்றபடி கண்டு சனலோகத்
தண்டறவோர் போற்றவிழித் தங்கதல—மண்டயங்கக்
கோல வுருக்கொடுமால் கூறெயிற்றிற் பாரெடுத்து
மூலமென வைத்தகன்றான் முன். (௯)

அற்போது நாலுகமோ ராயிரமு மேகவே
யெற்போது தோன்றியதி யானுணர்ந்தே—ளிற்றியாத
முந்தைநிலை யுற்றகொம்பின் மொய்பா ரெடுத்தோமென்
றந்தைகொடு துஞ்சினன்மா லாங்கு. (௧௦)

ஆனபொழு தண்ட ரவுணர் நரர்விலங்கே
ரேனையுயிர் யாவையுமே யர்ணளித்தே—வானவரை
யோவினிலை யுய்த்தேனென் றுன்னி யெனையலதோர்
தேவில் லெனவெழுந்தேன் றேர்ந்து. (௧௧)

துஞ்சுறுங்காற் றுஞ்சியெழுந் தோறுமெழுந் தொல்லுயிர்க்குத்
தஞ்சமெனை யன்றியொரு தாதையிலை—விஞ்சுபொருள்
யானென் றெனைவியந்தே யெப்பொருளு மீந்தமையான்
கோனென் றெனைமதித்தேன் கூர்ந்து. (௧௨)

அன்னபொழு தாழியின்மா லந்தையொடு துஞ்சக்கண்
டுன்னி யெழில் கூர்மா வுறையுமணி—முன்னமிசை
பெற்றித் துயிலுணர்தி யென்னவெழு மாயனையார்
சொற்றியெனத் தாதையென்றான் சூழ்ந்து. (கடு)

தந்தையென வந்தவர்க டாங்க ளுதவுகின்ற
மைந்தர் தமக்குரைசெய் வாசகமஃ—தந்தியெலா
முந்தையெமக் கீது மொழிந்த தியல்பன்றா
லெந்தையென்றெண் யாம்பிரம மே. (கச)

உந்தி யிருந்துவரு முண்மை யுணராமன்
மைந்த னெனநினைந்தாய் மற்றெம்மை—யிந்தனத்திற்
றோன்றுமெரித் தேவுக்குச் சொல்லதுவே தாதையிது
வான்ற சழக்குரைய தன்று. (கரு)

நின்னுடைய தந்தையென நீயே நினைவியந்தா
யன்னதனை விட்டிடுதி யாந்தவத்தி—னன்னலத்தான்
முன்னமொரு தூணின் முளைத்தா யவற்றினு
லுன்னிலதும் மாண்பொருளா மோ. (கசு)

தூயமக னும்பிருகு சொற்றிடுமொ சாபத்தா
லாயபிறப் பீரைந் தடிக்கடியே—நீயெடுத்தாய்
மீண்டுருவம் யாவும் விதித்தனங்கை சேந்துள்ளது
கண்டிடுதி யென்றேன் களித்து. (கஎ)

நச்சுவண னென்றென்ன நக்கரனுன் சென்னிதனி
லுச்சித் தலைகிள்ள வோர்வின்றி—யச்சமாய்ச்
சாய்ந்தனையஃ தாக்குந் தகையிலாய் நன்றுநீ
யேய்ந்தெதந் தமைத்தருவ தீண்டு. (கஅ)

நேயமாய் முன்னமே நின்றனையே யீன்றுதவு
தாயும்யா மன்றியுநற் றந்தையும்யா—மேயவுனக்
காய விறையா மடிகள்யா மைந்தநம்
மாயமதான் மாழ்குறுதி மற்று. (கக)

பொன்னையன்றி யாங்கொலோ பூணைச் சராசாமு
மென்னையன்றி யாங்கொலோ வெல்லாநா—னுன்னுசிவ
னன்பகவ னன்பூத நான்யாரு நான்சோதி
நான்பரமெ னுண்பொருளு நான். (உ0)

என்று பலவுரைப்ப யானெதிர்போய்ப் போர்புரிந்தும்
வென்றியுற்றோர் மேலோர் விரைந்தெழன—வன்றிறன்மா
லேற்றெழுந்தோர் வில்வாங்கி யேவிடக்கண் டொண்குசையா
லாற்றியுய்த்தே னப்படையை யாங்கு. (உக)

மாயன் படைவிடுப்ப மற்றதுகண் டென்மருங்கின்
மேயபடை விட்டதனை வீட்டிவரத்—தூயசிவ
னல்கு படைவிடமா னனுமரன் பாற்பெற்ற
மல்குபடை யுய்த்தேன் வலிது. (௨௨)

ஒருதிறத்தி னீச னுதவு படைகள்
பொருவிறம்மி லாடல் புரிந்தே—யெரிகனல்கள்
சிந்தியுல கெல்லாந் திரிதலினால் யூழியின்க
ணைந்தநல்கு தீநிகர்த்த தாங்கு. (௨௩)

மாய்ந்தார் சிலவர் மருண்டார் சிலர்கனலாற்
றீய்ந்தார் கலிவறந்த செல்கரிந்த—வேய்ந்தாரு
மாரமர்செய் காலையெந்தை யாருளா லென்முகமா
நாரதன்வந் தொன் றுரைப்பா னன்கு. (௨௪)

நீர்முதனா மென்ன நினைந்தறைந்து செய்கின்றீர்
போர்முதரான் தேறீர் பொருபடைமு—னார்கொடுத்தா
ரன்ன துணைநீ ரதன்பே ரயர்த்தீரோ
வுன்னமதிற் றேற்றுமி னோர்ந்து. (௨௫)

வாதியா வின்று மலைதிரே யென்னினீ
சாதியா மெய்யறிவின் பானபொருள்—சோதியா
நள்ளுறவே தோன்று நனிகாண்டி ரென் றுணர்த்தி
விள்ளுறவே போனான் விரைந்து. (௨௬)

போயினன்சொற் கொண்டிலோம் புந்தி செருக்குற்றோ
மாயிரமாண் டெல்லை யமர்புரிந்தே தா—மாயவெலாஞ்
சித்தமுகந் தூழியின்கட் டீயி னடம்புரியு
மத்தனது நோக்கினா னங்கு. (௨௭)

அறிவறை போயினா ரந்தைமேற் கொண்டார்
சிறுவரிற்போர் செய்கின்றார் தீமை—யுறுவதுன்னார்
போய்நந் நிலையுணர்த்திற் போர்தணிந்து நிற்பரெனா
வாய்தந்தா னுள்ளத் தரன். (௨௮)

அண்டளவை தன்னிலுற்ற தந்தரம்பா னட்கங்குல்
கொண்டசுடர் சூழனென்னல் கூர்ந்ததியாங்—கண்டஞ்ச
வெற்படவே நாப்ப ணெரிவரைபோற் றோன்றினான்
றற்பரமாஞ் சோதி தனித்து. (௨௯)

தோற்று பரஞ்சோதி தொல்போ ருழந்தியா
மேற்ற படையை யினிதுவவ்வி—யாற்றலொடு
மாற்றருந் தன்மைத்தா வாறு தகன்றுபோய்ச்
சீற்றமிக னீங்கின்றேந் தேய்ந்து. (௩0)

நிற்றலும்யாங் கேட்ப நெடுவிசும்பி லோர்வார்த்தை
யுற்றெழுந்த தம்மா வுறுசிறுவீர்—மற்றுமதேண்
கூறுமரன் காண்பான் கொழுஞ்சோதி யீதடியு
மீறுமுறை தேருமென்றே யேய்ந்து. (௩௧)

அதுவினவிச் சிற்றம்விட் டந்தைதனி தில்லே
முதுசொற்று ராரெனவே யுன்னி—முதிர்சோதி
தான்முனிசொல் வண்ணந் தரிசிக்க வந்ததெம்மில்
வான்பொருள்கொ லென்றே மதித்து. (௩௨)

நீடிருவா ஞடுசென்று நீள்பா ரிடந்துபுக்கு
மோடிநாஞ் சோதி யுறுமுடிபு—காடிலவற்
றொன்று நலம்பெறக்கா ணுற்றோ ருயர்தலைய
மொன்று நவின்றுநின்றே மேய்ந்து. (௩௩)

முடிகாண்ப னென்றே மொழிந்தேன் றமியே
னடிகாண்ப னென்றே யரியப்—படியிசைந்தான்
காண்டற் கருஞ்சிறுவர் கையினால் வான்கதிரைத்
தீண்டத் துணிந்தமைபோ றேர்ந்து. (௩௪)

முராரிவெள்ளைக் கோல முயங்குருவங் கொண்டே
யொராயிரமா யோசனையே யோங்கு—பருமமுற்றுப்
பாரிடந்து கீழே படர்ந்து துருவிச்சென்
றாதலம் போயினு னங்கு. (௩௫)

பாதலமா ணுடிப் படர்தலுமே யானுமோ
ரோதிமமேர் கூர்வடிவா யும்பர்போய்—மீதமருஞ்
சீல முறுபுவனந் தேடிச் செலச்சோதி
சாலமேல் போயதம்மா தாய். (௩௬)

ஏனமாய்ப் பார்கீண் டெழுஞ்சோதி மூலமுறப்
போனமால் கீழ்போகப் போகவதன்—வானடியைத்
துன்னியே காண்கிலான் சோர்ந்தகந்தை தீர்ந்துமுந்தை
யுன்னுமுணர் வுற்றா னொருங்கு. (௩௭)

தொல்லை யுணர்ச்சிதான் றோன்றத் தெளிந்துகண்ண
னல்லுறழ் கார்மேனி யங்கரிமெய்—மெல்லத்
தரிக்கலாற் றன்மீளுந் தன்மையிலான் செல்லான்
பரற்சிங்கத செய்தான் பரிந்து. (௩௮)

என்று முணர்வரிய வெம்பெருமா னின்பதமே
யன்றியா னில்லையவை யர்ச்சிக்கப்—பொன்றியதென்
வன்பு பொறுத்திருதை மன்னடியே னோர்ந்திலனென்
றன்பினனி போற்றினு னங்கு. (௩௯)

ஆனபொழு தத்த னருளான்மா லெண்ணினனு
யேனவடி வோடெழுந்தங் கேத்திகிற்ப — யானுமென
மோதியமா னுளாலாண் டோரா யிரந்துருவிச்
சோதிதனைக் கண்டிலேன் சூழ்ந்து. (௯௦)

மீள நினையேன் வினையேன்சூழ் பொன்றுமென
மூளுஞ் சுடர்முடியை முந்தியெந்தை — நாளளவு
செல்லினும்போய்க் காண்பனென்றே சேண்செல்லச் சிந்தை
யொல்லுயிர்சோர்ந் தேண்டொலைந்த தூங்கு. [வெம்பி (௯௧)

அன்னந் திரிந்த ததுபொழுதொண் சோதியுணின்
றன்னரிய சித்தரென வுற்றமலர் — துன்னிவிண்போ
யஞ்சந் தனக்கறிவின் றுமினிப்போ மேலிறக்கு
மஞ்சிவனென் றெண்ணு தது. (௯௨)

மாலென் பவனு மருவுநிலங் கீண்டனன்போய்
மூல முணரான் முரணீங்கி — யேலச்
சிவனே சரணென்று தேர்ந்தவனி போந்தே
யவிர்வரையை நண்ணிநின்றா னாங்கு. (௯௩)

மூன்றுற் றிதையருள்செய் மூர்த்தியருள் செய்யினுய்யு
மிந்தப் பறவையென யானுமுன்னிப் — புந்திக்குண்
மால்போ யவர்ப்பரச மற்றவரங் கேகவன்பு
மேல்போ யாற்றுதித்தேன் மீண்டு. (௯௪)

வந்துதிரு மாலைநண்ணி வான்பொருள்யா மென்றிகலி
முந்துசம ராற்றி முனிமொழியுஞ் — சிந்தியா
தந்தைகொடு தேடலுற்றோ மந்தமுறும் வேலையவ
னந்தருளாற் போற்றினே னன்கு. (௯௫)

மண்ணிடந்தும் விண்பறந்தும் வான்சோதி யாதியந்த
நண்ணுகிலந் தேவருளா னன்குய்ந்தோங் — கண்ணுதலைப்
போற்றிவழி பாடு புரிதுமென யான்சொலவக்
கூற்றிற் கிசைந்தனன்மால் கூர்ந்து. (௯௬)

இருவருமே யெந்தை யியலுருவந் தாபித்
தருமலர்நன் மஞ்சனமு மூற்ற — பொருளமைத்துப்
பூசை புரிந்தன்பிற் போற்றி வணங்குதலு
மீசனவன் வந்தா னெதிர். (௯௭)

மைக்களமு மான்மழுவு மன்வரத மோடபய
மெய்க்கரமு நாற்புயமு மின்சடையு — முக்கண்ணு
மின்னரின் மருங்குமைபான் மேவவரன் யாங்காண
முன்னின் றருள்புரிந்தான் முன். (௯௮)

அங்க னிருவருமே யத்தனடி தாழ்ந்திறைஞ்சிப்
பொங்கருள்பெற் றீது புகன்றனமா — றுங்கமறை
யுன்னியலிம் மாண்பென் றுணராதே யாங்காணற்
கென்ன வெளிவருமோ விங்கு. (௪௯)

புந்தி மயங்கிப் பொருங்காலை யெம்முன்னிற்
செந்தழலின் மேனிகொடு சென்றருளி — முந்தறிவு
தந்து நினையுணர்த்தித் தாக்கமரு நீக்கினையா
யெந்திரம்யா மாட்டுவனீ யிங்கு. (௫௦)

உன்னை யுணரு முணாவுதந்தால் யாமுணர்வோ
மென்னிலெமக் கென்ன வெறுமுளது — முன்னமுறச்
செய்த பிழைபொறுத்தி சிற்பரனே யாங்களினி
யுய்திறநீ நல்கென்றா ருற்று. (௫௧)

என்று துதித்தலுமே யீசனீர் செய்தபிழை
யொன்று நினைகிலீ ரும்பூசை — நன்றுவந்தா
முன்னுவரங் கேளிரென வுன்பதத்தா ரன்பளித்தா
ளென்னநல்கிச் சோதியுற்றா னெய்ந்து. (௫௨)

கலந்தபோ தெங்கோன் கனற்பிழம்பாஞ் சோதி
விலங்கலாய் நிற்ப வியந்தே — யிலங்கச்
சிவலிங்க ரூபத்தைச் சேர்ந்துவலஞ் செய்தே
யவிரெம் பதஞ்சென்றே மாங்கு. (௫௩)

மாலொடுநா னேடசலம் வன்னிவரை யென்னநின்ற
தேலவ் வொளிகிளர்ந்த வேய்வதே — சீலச்
சிவநிசியா யிற்றரனைச் சிந்தனைசெய் துய்ந்தார்
தவவன்ப ரந்நா டனில். (௫௪)

ஆதலா லத்த னருள்பெறின்முன் னோதியுறும்
வேதமுத லோதின் விளங்காவாம் — பேதையரா
யுன்னார்க் குறுதே யுறுதரும் மன்புனித
ரன்னார்க் கவனருளு மாம். (௫௫)

நீயு மொடியவினை நீங்கலினா னித்தனிலை
யாயுமுணர் வின்றுற்ற தம்பரனே — தாயினுட
னுன்னுதந்தை யாசா னொளிர்கடவு ளாக்கமுமா
மன்னவனைச் சார்தியென்றா னாங்கு. (௫௬)

அடிமுடிதேடு படலம் முற்றிற்று.

ஆ. திருவெண்பா ௮௭௬.

# தக்கன் சிவபூசைசெய் படலம்.

---

போதனிவை கூறப் புரிகுவனஃ தென்றறைந்து
தாதைதனைத் தாழ்ந்துதக்கன் றன்காசிக்—கோதினகர்
சென்றுமணி கன்றிகையோர் தேத்திறைவற் காலயந்தா
னென்று விதித்தா னுகந்து. (௧)

உருவருவா யுன்னருளா யொப்பி லொளியார்
திருவுருவொன் றாக்கிச் சிவனுக்—கொருவில்சீர்
மேயதிரு வாகமத்தின் மேயமுறை யீசனற்று
ளாயிரமாண் டர்ச்சித்தா னங்கு. (௨)

பூசை புரியவயன் புத்திரன்ற னார்வங்கண்
டீசனெதி ராக விறைஞ்சியைய—நேசமின்றி
நின்னை யிகழ்ந்துபவ நேமியுற்றே னன்னதுநீத்
துன்னிடையன் பாக்கென்று னுற்று. (௩)

ஏயவனந் தந்தமலன் மேலா மியற்கைநல்கிப்
போயினன்சீர்த் தக்கன் புனிதனே—யாயினன்மன்
புண்ணியனைப் பூசிக்கப் போந்துழிமால் புங்கவர்க
ளெண்ணுமகம் விட்டகன்று ராங்கு. (௪)

சென்று ரனைவோருஞ் சீர்த்திமிகு வீரன்றன்
பொன்று வயந்தனையே போற்றியேயர்—குன்றாத
வாசமுறு தொல்லைத்த மாதலமுற் றீசனையே
பூசைபண்ண லுற்றார் புரிந்து. (௫)

ஆரா தனைசெய் தனைவோரு மெங்குமாய்ப்
போராது நின்றபிரான் பேருள்பெற்—றோராத
சின்னமது தீர்ந்து சிறந்துதந்த மூராய
மன்னுபதம் போயுறைந்தார் வாய்ந்து. (௬)

தக்கன் மகத்தினூண் டானுண்ட வந்தணர்கண்
மிக்க கணத்தின் விளிந்தெழுந் தார்—புக்கனரா
லென்றினைய வேந்தியம்ப வேந்தனன்றென் றுண்மகிழ்ந்
தொன்றுகவல் போய்வினுற்று னோர்ந்து. (௭)

தக்கன் சிவபூசைசெய் படலம் முற்றிற்று.

ஆ திருவெண்பா ௮௮௩.

# கந்தவிரதப்படலம்.

முன்னமொரு னான்று முசுகுந்தன் சீர்வசிட்டன்
தன்னுறையு ளெய்தியடி தாழ்ந்தேத்திக்—கொன்னவில்வேல்
வேள்விரத மெல்லாம் விளம்புநல்லோ யென்னமைந்த
கேள்பகர்வ னென்றான் கிளர்ந்து. (௧)

பகர்ஞாயி றாதியாப் பல்வார மேழுட்
புகர்நாள் விரதம் புகழுங்—குகனார்
விரத மதுப்புரிந்தோர் மேவெண்ண முற்றுஞ்
சரதமிது கேட்டி தக. (௨)

பகிரதனாள் பாருலகைப் பன்கோர னென்னுந்
துகணிருதன் வவ்வத் துயர்ந்து—மகவு
மனைவியொடு தானும் வனஞ்சென்று வெள்ளி
முனைநவின்றான் முற்று முறை. (௩)

வெங்குருமன் சொற்கேளா வேண்மகிழும் வெள்ளிநாட்
டுங்க விரதந் தொடங்குதியென்—பொங்குமும்மை
யாண்டிருந்தான் புங்கட் கிழைத்தவெய்யோன் பொன்றுவனீ
யாண்டிடுவை யென்றா னரசு. (௪)

நன்றெனமன் ஞாயிறுமுன் னாளொன்றென் வெள்ளி
துன்றுவரை யூணைத் துறந்துமுன்பின்—சென்றிடுமா
சீரிரண்டு நாளுந் திவாவினிலுண் டின்றுயினீத்
தாரிருகோன் பாற்றினன்மூ வாண்டு. (௫)

நோற்றிடும்போ தைய னுதியுடைச்செவ் வேல்வந்து
மாற்றலன்ற னாவிகொடு வல்லையுறப்—போற்றியே
மன்னும் பகீரதனு மன்றன் னகரெய்தித்
தன்னரசு பெற்றான் றக. (௬)

நாரதனைந் தத்த னறுமலர்த்தாள் போற்றியைய
ரோரெழுவர் தம்மி லுயர்பதமுஞ்—சீருமுற
வீண்டருநோன் பொன்றறைதி யென்னவேள் கார்த்திகைநா
ளாண்டுமுந்நான் காற்றென்றா னங்கு. (௭)

நன்கிதுநான் செய்வனென நாரதன்றிண் பார்வந்து
பன்பரணி நாள பாரணைத்து—லன்பினொரு
போழ்துணவு கொண்டே புகழ்கார்த் திகைநாளில்
வீழ்விரத மாற்றலுற்றான் வேட்டு. (௮)

தூசினொடு நீர்தோய்ந்து தூயவெள்ளைத் தானைசுற்றி
யாசி னியமமுற்றி யார்வலனாய்த்—தேசிகன்று
டாழ்ந்துசெவ்வேள் பூசைசெய்து சாற்றுமவன் மாக்கதையு
மாழ்ந்தவன்பிற் கேட்டா னமர்ந்து. (௯)

கடிப்புனனீர் மூக்கிலோர் கையினள்ளி யுண்டே
படுத்தகுசை மேலே படுத்து—மடக்கொடியார்
தங்கண் மயலொழித்துச் சண்முகன்றாண் முன்னியிர
வங்கணுறங் காதற்று ணங்கு. (௧0)

அந்தப் பகல்செலப்பி னண்ணுமறு நாட்காலைச்
சந்திக் கடன்முடித்துச் சண்முகனை—வந்தித்துப்
பன்மா தவரோடும் பாரணஞ்செய் துண்மகிழ்ந்தான்
மன்மா விசைவல்லோன் வாய்ந்து. (௧௧)

பாரணந்தான் செய்தோன் பகற்போ துறங்குமே
லாரணர்க ளூற்றுவரை யார்த்தெழுந்தே—காரணமின்
றட்டபழி யெய்துமென வங்க ணிமைத்திலான்
சிட்டர் புகழ்முனிவன் றேர்ந்து. (௧௨)

யாழ்முனியிவ் வாறாற்றி யேழ்முனிவர்க் கேற்றமுற்றான்
வீழ்விரதம் போற்றிமுன்னோர் வேதியனு—மேழ்புவியு
ளங்கன் மனுவாகு னந்தணன்பின் னோற்றொடிரி
சங்குவா யங்குற்றான் றான். (௧௩)

பின்னுமிங்கோர் கோன்வேடன் பெட்பினிந்த நோன்புஞற்றி
மன்னுமந்தி மான்சந்தி மானெனப்பேர்—துன்னியுல
காண்டனர்நன் கென்ப வவிர்விரத நோற்றவர்பின்
காண்டருவீ டெய்தறிண்ணங் காண். (௧௪)

இப்படியே யாரு மெத்தனையோ பேர்நோற்று
முப்புவனத் துற்றமுறை முன்னடைந்தார்—செப்புவன்கேள்
பன்னுதுலைத் திங்கண்முன் பக்கத்திற் முற்பகன்முன்
மன்னறுநா ளேற்றார் மகிழ்ந்து. (௧௫)

மூந்து தினமாதி மூவிருநா ளுங்காலை
யந்தமினீ ராடியிரு வாடைசுற்றிச்—சந்தியிற்செய்
தன்கடன்க ளாற்றியல்லிற் றம்பவிம்ப கும்பத்தின்
மன்குகனைப் பூசித்தார் வாய்ந்து. (௧௬)

நிறைகட்டி கூட்டி நெயிற்சமைக்கப் பட்ட
வறையிலட்டு கம்வேட் கருத்திப்—பிறவிதியுஞ்
செய்துபிரான் சீர்வினவித் தெண்ணீர் சிறிதருந்தி
யைதி னுபவசித்தா ராங்கு. (௧௭)

மன்முனிவ ரும்பரங்கு மற்றைவைகல் செவ்வேட்குப்
பன்சிறப்பிற் பூசைசெய்து பாரணந்தான்—முன்விதியிற்
செய்தனரிந் நோன்பிற் றிறலவுணர் கொண்டதங்க
ளுய்பதங்கள் பெற்றா ருகந்து. (௧௮)

என்றினைய வாசா னியம்பவிவை செய்வனெனு
வன்றுமுதற் பற்பலநா ளவ்விரத—நன்றுனுற்றக்
குன்றெறிந்தோன் கூர்மயின்மேல் கொண்டிலக்க ரோனையர்க
ளொன்றவவன் வந்தான் றுதைந்து. (௧௯)

வந்துகுகன் றோன்றமன்னன் மாணடிதாழ்ந் தேத்திநிற்ப
வெந்தவரம் வேண்டுமென வேய்ந்தமுசு—குந்தனற்பார்
முற்றுமென்செங் கோனடப்பான் மொய்ம்பினன்முன் வீரரைக்கே
ணற்றுணையா நல்கென்றா னன்கு. (௨௦)

மன்னிவ் வகைவினவ வள்ள லருள்புரிந்தே
யுன்னிவிறல் வீரரைப்பார்த் தும்மினன்ப—னன்னை
ரிணையிலுல காளுவனீ ரேய்ந்தவன்பாற் போயேண்
டுணைவரா யார்திரென்றான் சூழ்ந்து. (௨௧)

முன்னவன்சொற் கேளா முடிவிலாச் சூர்குலத்தைக்
கொன்னுறச்செய் வன்மையுளேங் கூறிரவி—துன்னுவழி
மன்னுஞ் சிறுவன்பால் வைகித் தொழில்புரியே
மென்ன மறுத்துரைத்தா ரேய்ந்து. (௨௨)

ஏந்தலது தேர்ந்துநீ ரெஞ்சொன் மறுத்தமையான்
மாந்தராய் மாதலத்தின் மன்படையாய்ச்—சேர்ந்துபின்னர்
நன்மா தவம்புரிந்து நம்பால் வருதிரென்றான்
றென்மா தவற்கருளுந் தே. (௨௩)

ஐயன் மொழிதேர்ந் தடன்மொய்ம்ப ருதியோர்
மையன் மனித்தராய் வன்மைபோய்—மெய்யி
லொறுத்தா லெனவருந்தி யுத்தமன்றா டாழ்ந்து
பொறுத்தாள் பிழையென்றார் போந்து. (௨௪)

தேனளினத் தாளிறைஞ்சிச் செவ்வேள் விடைபெற்று
மானவர்நன் மன்றமராய் மன்னினா—ரானபொழு
தேந்தன் முசுகுந்தற் கின்னருள்செய் தேமறைந்தான்
சேந்தன் கணங்களொடு சேண். (௨௫)

மறைந்துகுக னேகமகிழ் மன்கருவூ ரென்னுஞ்
சிறந்தநக ராட்சியெய்திச் சேணா—ரறந்தருமா
மாடநெடு வீதி வகுப்பித்தங் கார்வீரர்
நீட விருத்தினா னேர்ந்து. (௨௬)

ஆயவர்கட் கெல்லா மருமாத் திருவமுள்ள
தேயங் கரிதேர்வா சித்திரன்க—யேபல
நற்சனங்க டந்துதண்ட நாயகரா மாண்புதந்தான்
றற்சனர்க்கோர் சிங்கமன்னன் சூழ்ந்து. (உஎ)

அன்னதோர் காலந் தரம்பையர் பாராளு
மன்னர்பாற் றோன்றி வளர்மொய்ம்பின்—முன்னவன்முன்
முன்னவர்கட் கெல்லா முசுகுந்த னந்தவெழிற்
கன்னியர்ச்செய் வித்தான் கடி. (உஅ)

அந்தமிலேண் சால்வீர வம்புயத்தோன் றன்புட்ப
கந்திதனை வேட்டுக் களிப்பொடுசேர்ந்—திந்துமுக
மன்சித் திரவல்லி மாதைநல்கிப் பின்னனகன்
மின்சனகற் பெற்றான் விழைந்து. (உகூ)

சீரண் முசுமுகற்குச் சித்திர வல்லிதனை
யோரண் கடிவிதியி னீந்தனன்றிண்—வீரருமே
மன்மரபிற் கேற்ப மணந்துமக்க ளீன்றுமனுத்
தன்குலத்தி லொன்றியுற்றார் தாம். (ங0)

சித்திர வல்லியங்கோர் சீர்கொள் கிளிவளர்த்தாண்
மைத்தருமன் றேவிவெஃக மன்றூதர்—கைத்தலத்திற்
பற்றிவந்து நல்கவதைப் பாவைகா ணாதயராக்
கொற்றனது தேடலுற்றான் கூர்ந்து. (ஙக)

வன்னிநமன் பன்னிகையில் வாய்ந்தமர்த லோர்ந்திறைவ
னுன்னுவிறன் மொய்ம்புமுத லுற்றவர்க்கூய்த்—துன்னுமங்கன்
றாண்டவன்னார் சேனையுடை சுற்றநெடுங் கூற்றூர்போ
யாண்டு வளைந்துகொண்டா ரார்த்து. (ஙஉ)

தன்னகரை முற்றத் தருமன்வந் தேற்றிடலு
மன்னவனோ டாரமர்செய் தாண்மைதொலைத்—துன்னரிய
மின்கிளியை வாங்கினார் மீண்டன்பிற் றந்துதங்கண்
மன்மகிழ வென்றிசெய்தார் வாய்ந்து. (ஙங)

மின்சித் திரவல்லி மெய்ச்சூல் கொடுவேண்டு
மன்பலங்காய் வேண்டி மலைநாட்டிற்—குன்பலரை
யேவவந்த நாட்டா ரிகன்மொய்ம்ப ராதியர்போய்
மேவுசுரம் வென்றுவந்தார் மீண்டு. (ஙச)

நின்மகடான் வேண்டுவன நல்கியிறை கொண்டெங்கு
மன்செழுங்கோ லானை மனச்செய்தார்—மின்கொடிபி
னங்கிவன்மன் றன்னை யளித்தா டவத்தினற்
பொங்கவிறை யாண்டான் புவி. (ஙரு)

அந்நாள் வலாசுர னுற்றுப் படையொடும்போய்ப்
பொன்னுட்டி னைச்சுற்றிப் போர்செய்தா—னன்னுற்
பொருதுவெல்லா நீர்மையிற்பார் போற்றுமுசு வேந்தை
வருதியென்றோர் தூதுவிட்டான் மன். (கசு)

ஏவொற் றிருநிலம்புக் கேந்தல் பணிநவில
மேவினன் றென்று வினுய் வீரரொடு—மாவாசன்
வான்போய்மன் றுள்வணங்கி மன்படைக்கு நாயகனுய்த்
தான்போர் புரிந்தான் றக. (கஎ)

சுற்றவுணர் தானை சுருங்க வலாசுரனைச்
செற்றமுடன் போர்செய்து சேணகரான்—கொற்றவன்றான்
கொன்று வலாரியென்பேர் கொண்டுமுசு குந்தனொடு
மன்றனகர் புக்கான் மகிழ்ந்து. (கஅ)

காய்ந்தவண்ட ரான்மை சடந்தே யெனைவான
வேந்தனே யாக்கியிசை வீரமுட—னீந்தெனக்கு
நற்றுணைவ னுயினுய் நாடரிய வந்தரங்கச்
சுற்றமன்றோ நீயென்றான் சூழ்ந்து. (ககூ)

என்றிறையை நோக்கி யினிய மொழிபகர்ந்து
குன்றனைய கோயிலினுட் கொண்டுபோய்—மன்றயங்கு
வாசநீ ராடி மணிக்கலைசூழ்ந் தீசனையே
பூசை புரிந்தான் புரிந்து. (உ0)

அண்ணலொரு பாலுமையு மார்குகனு மேவவெள்ளி
நண்ணகத்தி லார்தல்போ னன்கிருக்க—கண்ணுற்றுப்
பாடினு னேத்திப் பரவசமா யுள்ளுருகி
யாடினு னன்பி னரசு. (உக)

சிறந்தவுருக் கண்டுகண்டு சிந்தைமகிழ் கொண்டு
மறந்தனன்கொ லோபிறப்பின் மாண்டென்—றறைந்தனன்புன்
மாவின் முகங்கொண்டு மாழ்கியமன் மன்றேவ
தேவனைத்தாழ்ந் தோதுமிவை தேர்ந்து. (உஉ)

மாமறையோ ருற்று வழிவடுதே வேபோற்றி
தோமிலா போற்றி துணைவியே—யாமுற்
றிழைபொறுத்த பாகத் திறைபோற்றி யென்றன்
பிழைபொறுத்தி யென்றான் பெரிது. (உங)

இன்னமுசு குந்த னியம்பவர னின்னருள்செய்
தன்னவனை நோக்கி யரிவழிபட்—டுன்னெடுநாள்
வாசவன்பால் வைத்தனன்பார் வைப்பினிற்கொண் டேகிமைப்
பூசைசெய்தி யென்றான் புரிந்து. (உச)

என்றினைய வீசான னிந்திரன்கே ளவ்வன்னை
நன்றினருள் செய்ய நனிமகிழ்ந்தே—நின்றன்
றிருவருளீ தாயினுய்ந்தேன் சிற்றடியே னென்று
வருவிம் மிதமுற்றான் மன். (௪௫)

இந்திரன்மன் பூசைமுற்றி யெய்ந்தகட ஞற்றியோர்
மந்திரம்புக் காவினைக்கூய் மன்னவற்கு—முந்து
விருந்துசெய்வித் தாடைகலன் வேண்டுவதந் தின்னும்
பொருந்துவகே ளென்றான் புரிந்து. (௪௬)

பையரவம் பூண்ட பரனைப் பரிந்தளித்தி
யையபுவி போய்ப்பூசை யாற்றவெனத்—தூய்யன்முன்
மாலவன்சேய் வேண்டி வரனைக் குறித்தூழி
காலந் தவம்புரிந்தான் காண். (௪௭)

தவமுழந்த காலைச் சயம்புமையுந் தோன்றப்
புவனமுண்ட மாலெழுந்து போற்றிச்—சிவனடியில்
வீழ்ந்திறைஞ்சி நிற்பநீ வேண்டுவன சொல்லென்று
ஞழ்ந்தகட னஞ்சுண்டோ னாங்கு. (௪௮)

அந்தமிலா வாயுளளிப் பாக்கமா வோடுதந்தாய்
மைந்த னிலாமே வருந்தினே—னெந்தையரு
ளென்ன நகைத்தெழிநீசே யேயுனக்குத் தந்தோமென்
றின்னருளே செய்தா னிறை. (௪௯)

மாயனுமை தன்னை வழிபா டியற்றிலன்சீ
ரேயுந் தனக்கிளையா ளென்றெணியோ—நாயகனுக்
கெம்மைப்போற் சத்தியிவ ளென்றுணர்ந்தோ நேர்கிலே
மம்மைபாற் செய்திலா னன்பு. (௫௦)

அன்னையது காலை யரிதன்னை நோக்கிநீ
யென்னை யவமதித்தா யெம்மிறைக்கன்—பன்னான்று
முன்னருள்சே யத்தன் முனிவான் முடியவெனுப்
பன்னருஞ்சொற் சொன்னாள் பரிந்து. (௫௧)

ஆன பிரமம்யா னல்லதில்லை யென்றறிவின்
மானவர்க்கு மால்பூட்டும் வஞ்சகன்முன்—ஞான
நிருமலனே நீயணுகி நிற்றனன்றோ சேறும்
வருகெனவே கூறினளன் மாது. (௫௨)

இன்னதுரைத் தீசை யிறைவனைக்கொண் டேகுமெல்லை
யன்னதன்மை கண்டுளமா லச்சுறீஇ—யின்னலுற்றே
யம்மையினிச் தூற்றதென்றோர்ந் தம்மையப்பன் சேவடிவு
செம்மையமைத் தர்ச்சித்தான் றேர்ந்து. (௫௩)

பன்னதன்பின் மாலாண்டு பல்லா யிரகோடி
மன்னுதவ மாற்றவரன் மாதொடற—முன்னமகிழ்ந்
தம்மைமழ லோடிமுன்றூழ்ந் தத்தனடி தாழ்ந்தேத்த
வெம்மையருள் செய்தா னினிது. (௫௪)

சீர்வளரீ மாற்கருள்செ யென்ன வவற்பாரா
வேர்வரன்சொற் றன்சொல் லிரண்டுமுன்னிக்—கூர்வாண்க
ணங்கியால் வீந்துமுன்பின் னங்கியா னின்மகனென்
றங்கியாய் சொன்னா னமர்ந்து. (௫௫)

இறைவியுரை கேட்டிறைவ னிஃதாக வென்றே
மறைதலுமால் விம்மிதமே மன்னி—யுறைபதி
வைகமையார் மெய்க்காமன் வந்தவன்றனெஞ்சுதித்தா
னுய்கவுல கெல்லா முவந்து. (௫௬)

வந்திடுவேள் வார்கழைவின் மன்மலர்க்கோல் வண்கைகொடு
மைந்தரொடு மாதர் மனங்காமச்—சிந்தையுறப்
போர்புரிவா னோர்பகன்மெய்ப் புண்ணியன்மேற் பூங்கணைதூய்ச்
சீர்குலைந்து நீறானான் செத்து. (௫௭)

உருவழிந்தோ னெப்பி லுமைகே ளருளா
லருவோ ருருவ மமைந்து—மருவுதொல்லை
நாள்வளர்த்தி னோடுமே நண்ணினன் மாதுமைசொல்
சூள்வறிதே போமோ துணைந்து. (௫௮)

மாலவன்முன் னன்பின் வழிபட் டுமைகுமரன்
மேலானிம் மூவரையு மின்மார்பி—லேலவைத்தே
பன்னாட் பஃறலைய பாந்தண்மேற் பாற்கடலின்
மன்னுத் துயின்றான் மகிழ்ந்து. (௫௯)

நீடரவே கண்வளர்மா னெட்டுயிர்ப்பி னாசைவா
லூடபயப் பாய லுயிர்ப்பஃசவா—மூடலைக
ணீடியமுந் நீரசைவா னின்மலமா மூர்த்தியர்தா
மாடியே வைகினா ராங்கு. (௬0)

அன்னதோர் காலை யசுரப் படைக்கெல்லா
மன்னனும் வாற்கலிதான் வானவரோ—டென்னையமர்
செய்துவென்றா னரிமுன் சென்றிறைஞ்சிச் சொல்லிமெலி
வுய்தரநீ காத்தியென்றே னுற்று. (௬௧)

நெஞ்சுமறி வுள்ளான் றுயிலைவிடாத் தானெழீஇ
யஞ்சலீ ருங்கட் கலக்கண்செய்—வஞ்சனுயிர்
கொன்றிடுதும் வல்லையெனக் கூறருளி னாரணமா
லொன்றெனக்குச் சொன்னா னுகந்து. (௬௨)

பார்த்தியா லென்மார்பிற் பார்ப்பதிசேய் தீர்த்தனென
மூர்த்தியாய் வைகு முழுமுதலை—யார்த்தியொடு
பூசனைசெய் துன்றீமை போக்குதியென் றங்கைதா
மாசிரமேற் றுங்கினேன் வாய்ந்து. (௬௩)

அங்கதற்பின் மாயவன்பா லாழியின்க ணின்றெழுந்து
நங்குழுக்கள் சூழவுயர் நாவலந்தீ—வங்கணுற்றே
குன்றந் தனுவாக்கொள் கோனடஞ்செய் வான்றில்லை
மன்றந் தொழுதான் மகிழ்ந்து. (௬௪)

நின்று பரவசமாய் நேர்திருமுன் வீழ்ந்திறைஞ்சி
யொன்றுசிவ பூரணத்தி லொன்றினான்—மன்றிங்க
ளத்த னடிக்கீ ழடங்கியே யானையினூற்
றத்துவமே யோர்ந்தெழுந்தான் றான். (௬௫)

பொன்னடிதாழ்ந் தேத்திப் புறத்தேகிப் பூவுலகா
ளொன்னலரும் வாற்கலியோ டுற்றமர்செய்—தன்னவன்ற
னாவியுண்டு வாகைபுனைந் தங்கெமக்கு நல்கிவிடை
மேவுததி போய்வளர்ந்தான் விண்டு. (௬௬)

தேவரொடு மீண்டு திகழித் துறக்கத்தி
லாவலுடன் வந்தேயா னன்றுமுதற்—காமருநற்
பூவைநிறங் கொண்டபுத்தேள் பூவைநிறங் கொண்டபுத்தேண்
மூவரையு மர்ச்சித்தேன் முன். (௬௭)

மன்னற்கு மன்னீ வழிபடுதல் காரணமாத்
தன்னுப் பிலாதாரைத் தந்திடுவே—தென்னிச்சை
யன்றுனக்கு மாலிசைவுண் டாமாகிற் பின்றருவ
னென்று நவின்றே னினிது. (௬௮)

பின்ன முசுகுந்தன் பாற்கடல்போய் நாரணன்பொன்
மின்னடிதாழ்ந் தண்மைநின்று வேண்டுதலு—மின்னுயிராம்
வாசவன்பால் வைத்திடுநம் வள்ள றனைக்கொடுபோய்ப்
பூசனைசெய் யென்றான் புரிந்து. (௬௯)

நன்றென் றிசைவுகொண்டு நாரணன்பாற் பெற்றுவிடை
சென்றிந் திரற்குரைப்பச் சிந்தைதளர்ந்—தன்றுதனை
யீன்றபுனிற் றாவை யகல்கன் றெனப்புலம்பி
வான்றவகத் துன்னினனென் றாங்கு. (௭௦)

தேவர்கோன் றெய்வதச்சன் செய்கையாற் சம்புமைசேய்
மேவுவடி வாறுமுறை வெவ்வேறு—வேவருமே
யெய்த வியப்பமைத்தே யேந்தல் கரத்துநல்கச்
கைதவமென் றோர்ந்தனனே காண். (௭௧)

ஆதியிலே தெய்வதச்ச னாக்கமைத்த வாறுருவும்
பூதலமன் வாங்கிப் புதல்வனுமை—நாத
னிவரபர்ந்தா ரென்றிருந்து மின்சொலுரு நீரா
லிவரவான் றென்று னிறை. (எஉ)

உன்னுமுசு குந்த னுரைகேட்டு மானிறத்திற்
றுன்னும் புதல்வனொடுந் தோகையொடு—மன்னுந்
தவரா வரையெடுத்தோன் றன்னைக் கொடுவந்
திவராமோ வென்று னிறை. (எங)

இந்திரனிவ் வாறுரைப்ப வேறுயர்த்தோ னேர்விறல்சீர்
முந்துமுசு குந்தன் முகநோக்கி—வந்தனயா
நேசமுட னெம்மை நிலத்திற் கொடுபோந்து
பூசைபுரி யென்றான் புரிந்து. (எச)

மானமருங் கையான் வலாரியுண ராதுரைப்பப்
தேனலர்த்தா டாழ்ந்தேத்திச் சிந்தித்து—வானரசே
யாங்கரிபூ சித்தவா ராமிவரை நல்கெனவே
வாங்கினன் மன்னவர்தம் மன். (எரு)

வாங்கியபின் வானவர்கோன் மன்னன் முகநோக்கி
யீங்கிவரை யன்னரொடு மேண்பாரிற்—றுங்கொடுபோ
யார்கமலை யாதி யறைகின்ற மாதலத்திற்
சீர்வழிபா டாற்றென்றான் றேர்ந்து. (எசு)

நன்றெனவே கொண்டுவிடை நானிலத்தி லாரூரிற்
பொன்றலிலாப் பூங்கோயில் புக்கரிதா—னன்றன்
பதிர்தரவர்ச் சித்தவரை யாங்கேற் றனைமேல்
விதிமுறையாற் றாபித்தான் வேந்து. (எஎ)

கார்நாகை நள்ளாறு காறுயல் கோளரியூர்
சீர்வாய்மி யூர்மறைக்கான் றேத்தாறு—கூர்வடிவ
மார்ந்த வரனை யமர்வித்தா னூர்வமுளங்
கூர்ந்தமுசு குந்தனுங் கோ. (எஅ)

இவ்வா றெழுவரையு மெய்பகலிற் றாபித்தே
யவ்வா றியல்வழிபா டாற்றுவித்துச்—செவ்வாரூர்த்
தேவாதி தேவற்குச் சீர்விழாச் செய்குவான்
மேவா வுளங்கொண்டான் வேந்து. (எகூ)

அந்நாளி லண்டர்கோ னர்ச்சனைசெ யண்ணறனை
மன்னார் கரங்கொடுத்த மாபவத்தாற்—பொன்னாட்டி
னக்கட்போய் நீசவுரு வார்ந்துகரி யூர்ந்துபதி
மாக்கமலை வந்தடைந்தான் வாய்ந்து. (அ0)

ஆரூரின் மேயபின்ன ரண்ணல் விழாப்போற்றப்
பாரூர் வருகெனவே பன்முரச—மாரவெறிந்
துள்ளற் கரியகரி யும்பருற்றுச் சீராரு
தெள்ளற் புடைசூழ்ந்தா னேர்ந்து. (௮௧)

பூங்கமலை மேய புனிதனூர்க் கன்னதற்பி
னோங்கு விழாநடத்தி யுற்றபதி—யாங்கடவுட்
காங்கதுபோற் செய்வித் தரசர்பிரான் வீரருடன்
பாங்குறவே யாண்டிருந்தான் பார். (௮௨)

ஆண்டுபல வங்க னரன்விழாச் சேவித்துக்
காண்டகுநோன் பாற்றிக் கடைஞான்று—மீண்டு
தபவலியின் முன்வடிவந் தான்பெற்று வான்போய்
விபவமுடன் வீற்றிருந்தான் வேந்து. (௮௩)

அங்கருவூர் தன்னி லளவிறைட் கோலோச்சித்
துங்கமுசு குந்தன் றுவரநோற்—றங்கணிலை
நன்கயிலை யேந்துதிற னண்ணங்கி வன்மனுக்கீந்
தன்கயிலை யுற்றா னுவந்து. (௮௪)

எங்களெழின் மொய்ம்ப னிலக்கருட னெண்மருமே
தங்கள் சிறூர்க்குத்தந் தஞ்சிறப்பீந்—தங்கிவன்மன்
பாவிருத்தி நோன்பியற்றிப் பன்கந்த வெற்பேகி
வேலவற்றாழ்ந் தன்பினுற்றார் வேட்டு. (௮௫)

ஆகையாற் செவ்வே ளவிர்விரத மாநோனு
மோகையாற் போற்றியிடி னுன்னியவை—தோகையார்
கந்தவரைப் பெம்மான் கனியருளாற் பெற்றிடுவர்
வந்தவரைத் தாழ்வரண்டர் வாய்ந்து. (௮௬)

கந்தவிரதப்படலம் முற்றிற்று.

ஆக திருவெண்பா ௬௬௬.

# வள்ளியம்மை திருமணப்படலம்.

---

வள்ளியமை மன்னும் வரையின்கண் மான்மகளாம்
வள்ளியமை யென்பேர் வருமணங்கை—யொள்ளியவேற்
சேந்தன் மணந்த திறனனைத்துந் தேர்ந்துசொல்ல
லாந்தன்மை யார்க்கு மரிது. (௧)

பாடியனு வல்லோர் பரசுதொண்டை நாட்டினின்மேம்
பாடியன்முன் னோங்கும் பழம்பதிமேற் —பாடியெனு
மண்போய சீர்நகர்ப்பான் மண்ணளந்த மாயவன்போல்
விண்போய்நிற் கின்றதோர் வெற்பு. (௨)

தீயரவ மேலாய்த் திகிரிவளை யேந்தியே
மேயமத மாவடக்கி வேரிநறுந்—தூயமலர்
வேய்ந்துலக முன்னளந்த விண்டுவையே யவ்வசல
மேய்ந்து பிறங்கிற் றினிது. (௩)

நான்முகமுங் காண நறுமலர்மே லார்ந்துகலை
மான்மருவிச் சாந்தமுற்று மன்னுபொரு—டான்படைத்துந்
தாதாருஞ் சாரற் றடநிவா மாமறைதேர்
வேதாவை நேரும் விழைந்து. (௪)

ஆயிரமாங் கண்க ளமைதந்து மையிவர்ந்து
மீயுயர்ந்த விண்பதவி மேவியே—தூய
மகவான் றனைநிகர்க்கும் வள்ளி வரையா
மிகவா னிவுந்தவந்த வெற்பு. (௫)

கண்வேழ முத்துங் கரவேழ வெண்மணியும்
விண்மேக நித்திலமு மேவியே—நண்வேகத்
துள்ளி வரையாமற் றூங்கருவி பாய்தலால்
வெள்ளி வரையாமவ் வெற்பு. (௬)

இன்னவளை மேய்ந்தவெற்பி லேரெயின ரீண்டியே
மன்னியதாங் கோர்குறிச்சி மாதுமைசேய்—பின்னரே
தன்பான் மருவத் தவம்புரிந்து பொன்னகர்போன்
மன்பா ரிருந்ததம்மா மற்று. (௭)

ஆயதொரு சீறூரி லார்புளிஞர்க் கெல்லாமோர்
நாயகனு நாமவே னம்பியென்போ—னேயமொடு
செய்தவத்தின் மைந்தர் சிலர்ப்பெற்றுப் பெண்மகட்குத்
தெய்வம் பராவியுற்றான் றேர்ந்து. (௮)

அவ்வரையின் பாங்குதனி லைம்புலனு மொன்றுசெலச்
செவ்விதினுய்ந் துய்க்குஞ் சிவமுனிவ—னெவ்வெவர்க்கு
மெய்தரியான் றன்னையுன்னி யெய்விரதம் பூண்டுதவஞ்
செய்திருந்த னுற்றான் றெளிந்து (௯)

சேயிலையே லண்ணு றிருவருளால் வந்துலவோர்
மேயபிணை நவ்விதனை மேவியங்குத்— தூயமுனி
பார்த்தலுநற் செவ்வி படைத்தபிற னிற்கண்ட
தூர்த்தனின்மரீ லுற்றான் சுழன்று. (௧௦)

மாட்சியுடை நல்லார்பால் வானோர் புணர்ச்சியெனக்
காட்சியினி லின்புதுய்த்துக் காமந்தீர்ந்—தாட்சியினாற்
மெய்யுணர்வு பெற்றுமுன்போன் மேவியிருந் தேநோற்றான்
செய்ய சிவமுனிவன் றேர்ந்து. (௧௧)

நற்றவத்தோன் காட்சியினு னவ்விபாற் கர்ப்பமுறத்
தெற்றெனவே தேற்றிமால் செல்விபுக்காண்—மற்றதனிற்
கொற்றவைவே லங்கைக் குமரவேண் முன்னமே
சொற்றகுறி சென்னீரான் சூழ்ந்து. (௧௨)

அனையபோ தங்ககன்றே யம்மான் புனம்போய்ச்
சுனையின்க ணீருண்டோர் சூழ—றனிலமர்ந்து
வெற்பி னிடந்தோறு மேவியண்மிப் போயதே
யற்பினல்லார் கண்போ லணைந்து. (௧௩)

பிறங்குபிள்ளை யீற்றுப் பிணுமுருக வேட
னறங்கொ ணெறிதன்னை யாற்றிக்—கறங்கித்
திகழ்வயிறு நொந்தீன்று சிரெயினர் வள்ளி
யகழ்குழிக்க ணிட்ட தணைந்து. (௧௪)

கோற்றொடிக்கைச் சீர்த்த குழவி தனைநோக்கி
யீற்றுப் பிணையெம் மினத்ததன்று—வேற்றுருவ
மேற்றமைந்த தீண்டெனு வெங்கிமனத் தச்சமுறீஇ
யாற்ற மருண்டகன்ற தாங்கு. (௧௫)

மாதா வெனவீன்ற மான்பிணைதா னோடியபின்
றாதார் குழலி தனித்தனளாய்ச்—சேதாம்ப
லன்னவா யங்காந் தழுதிட்டா ளின்னிசைக
ளின்னவா மென்ன வினிது. (௧௬)

அந்த வமையத்தி லாறிருதோ ளண்ணலரு
ளுந்த வெயினர்க் கொருதலைவன்—பைந்தொடியாண்
மற்றவர்க ளங்கணுற மாதின் குரல்கேட்டிஃ
தற்றறிவா மென்றுபுக்கா னாங்கு. (௧௭)

வந்தான் முதலெடுத்த வள்ளிக் குழிவைகு
நந்தா விளக்கை நனிநோக்கி—யிந்தா
விளங்குழவி யென்றெடுத்தே யீர்வளைகை யீந்து
வளங்கொளின்ப வாரியுற்றான் மன். (௧௮)

கொற்றக் கொடிச்சி குழவியைத் தான்வாங்கிப்
பெற்றுக்கொள் வாள்போலப் பேணிமகிழ்—வுற்றுத்
தனத்தா றமிர்தூட்டச் சார்மகண்மின் றோடும்
வனத்தூர்க் குடில்புக்கான் மன். (௧௯)

அண்ட ரமிர்த மனையமகட் பெற்றிடலான்
மண்டுமகிழ் வுற்றிருந்தான் வான்விடையைக்—கெண்டியொரு
தன்கிளையோ டுண்டு தனித்தொண் டகமார்ப்பக்
கொன்குரவை தூங்குவித்தான் கோன். (௨௦)

காலை யதற்பின் கடவுட் பலிசெலுத்தி
வாலரிசி மஞ்சண் மலர்தூவிக்—கோல
மறியா டறுத்தொளிர்வேன் மன்விழாக் கண்டு
வெறியாட னேர்வித்தான் வேந்து. (௨௧)

இன்னசெய்து வேந்துமனை யோர்மகட்குக் காப்பிட்டுத்
துன்னும்பாற் றோகையுறு தொட்டிலிட்டான்—பன்னெகிழ்ந்தோர்
வள்ளி யகழ்குழியில் வந்தமையா லன்னவள்பேர்
வள்ளி யெனநவின்றார் வாய்ந்து. (௨௨)

முல்லைப் புறவ முகுந்தன் றிருமடந்தை
தொல்லைக் குறவன் குலமகளாய்ச்—சில்லை
மருவுகுடில் சேர்ந்து வளர்ந்தாள் பெருமே
யிருவர்மக ளென்றழைப்ப வேய்ந்து. (௨௩)

பொற்றொட்டி லிட்டுப் புவியின் மிசைதவழச்
சற்றுத் தளர்நடையுங் காட்டிநிழ—லுற்றகணி
முற்றந் துலாவி முறத்தின் மழலைமொழித்துச்
சிற்றிலிழைத் தாடினண்மின் றேர்ந்து. (௨௪)

முந்தை யுணர்வின்றி மொய்மகவீ ரோடுவண்டல்
சிந்தையுறச் செய்துவளர் செவ்விக்கட்—பைந்தொடிக்குப்
பன்னிரண் டாண்டுசென்ற பாவை தனைத்தினையார்
முன்னிலத்தில் வைத்தார் முறை. (௨௫)

கட்டு வரிவிற் கருங்குறவர் கைத்தொழிலா
விட்ட விதணைத் திருந்திறைவி—தட்டை
குணிறழலை தாங்கிக் குருகோட் டினளே
யணில்வாற் குரல்கவரா தாங்கு. (௨௬)

எய்யா திரலை யெழின்மான் மரைபிறவுந்
தொய்யாத வேனற் குரல்கவரா—தையார்
துடியிடையாள் செம்மணிக்கற் றூங்குகவ ணிட்டுக்
கடிதோட்டி வீசினுள் காய்ந்து. (உஎ)

பூவைகா ளோர்கூர் புறவங்கா ளாலோல
மாவலூறு தோகைகா ளாலோலங்—கூவனேர்
சென்றார் குயில்காள் சேவல்கா ளாலோல
மென்று டிருவனையா ளேய்ந்து (உஅ)

இவ்வண்ண மீர்வனைதா னேனற் புனங்காப்ப
வவ்வமயத் தன்றாட் கருள்புரியச்—செவ்வயில்வேள்
கந்தவரை நீங்கிக் கடியார் தணிகையின்கண்
வந்துதனிவைகினுன் மற்று. (உகூ)

இன்னிசையாழ் வல்லோ னிருதீ ருலகடைந்து
மன்னிசையார் வள்ளி வரைவந்து—பொன்னிசையாக்
கற்பிற் குறமகளைக் கண்டு தொழுதகத்தி
லற்புதத்தி னின்னசொல்வா னங்கு. (௩0)

அன்னையா யிங்கிருப்ப வார்பே ரழகனைத்து
முன்னியான் கூறிடினு முற்றுமோ—வென்னிறைதேன்
பெய்தார்த் துணைவியாய்ப் பெட்டிருப்ப மாதவமுன்
செய்தா ரிவரென்றான் றேர்ந்து. (௩க)

ஏனற் புனக்காவ லேந்திழையைப் பார்த்துரைத்தே
தானப்பிற் போற்றிப்போய்த் தண்டணிகை—மாநிலவுத்
தங்க ணமர்ந்திருக்கு மத்த னடிக்கமலந்
துங்கமுனி தாழ்ந்தறைவான் சூழ்ந்து. (௩உ)

மாதவத்தோன் றன்றனையை மானினுற்றான் வள்ளிவெற்பி
லேனெயினர் கன்னியா யோங்குதினை—போரப்
புரந்துதண்மேன் மேயினளாற் பொற்பூளாள் போந்துந்
தாந்தெரிந்தி யென்றான் றக. (௩௩)

தாயதா மத்திருமுன் சங்கரிமீன் மாதுநின்றே
டோயநெடு நாளேற்றான் சொல்வரைப்பிற்—போயவட்கு
நன்றருடி யென்னநன் றுநன்றி துசீர்க் காட்சியோய்
சென்றிநீ யென்றறைந்தான் சேய். (௩௪)

எய்யுந் தனுவெயின ரேந்திழைதா னுய்யத்த
மெய்யுருவ நீத்தெழிஇ மேவருள்செய்—தையன்மான்
மானிடமெய் தாங்கி வரிசிலைக்கை யேந்தியெழிற்
கானவத்தின் கோலமுற்றான் காண். (௩௫)

கிள்ளையின்சொன் மான்பாற் கிளர்மோகந் தன்னுளத்தைத்
தள்ளவே வண்டணிகை தாமேற்றீஇ—வள்ளிவெற்புற்
றொண்டா ரணிகூந்த லொண்டொடியைத் திண்புனத்திற்
கண்டான் கருணைவள்ளல் காண். (௧௬)

பூமஞ்சார் மின்போற் பொருப்பிற் றினைகாவாரும
கோமஞ்சார் மாதைக் குகனோக்கிக்—காமஞ்சா
லுள்ளத்தா னாகி யுயர்வா னிதனருகின்
மெள்ளத்தான் சென்றான் விழைந்து. (௧௭)

கூர்விழிநேர் நீணயனக் கோதைகேண் ஞாலமதி
லீர்வளையர்க் கெல்லா மிறைவியா—யார்கினையே
யேனறனைக் காக்கவைத்தே யேகினார் வேடரவர்க்
கானவுணர் வில்லென்றா னாங்கு. (௧௮)

வாரற் குழலாய் மதிதவழ்வேற் குன்றனெறிற்
பேருரைத்தி யஃதுரைக்கப் பெட்பிலையே—யூருரைத்தி
யூரு முரைக்க வுகப்பிலையே னின்சீறூர்க்
காருநெறி சொற்றியென்றா னாங்கு. (௧௯)

மொழியொன் றுரையாய் முறுவலுமே செய்யாய்
விழிநோக்காய் காமத்தாழ் வேனுய்—வழிகாட்டாய்
நெஞ்சுருகா யாதலினா னின்பாற் பழிசூழு
மஞ்சணங்கே யோர்தியென்றான் மன். (௨௦)

செய்ய குமரிமுன்னர்ச் சீரார் குமரனின்று
மையலினீர் மைகாட்டி மாற்றமுரை—செய்புமெல்லை
யெய்யுளியம் வேழ மிரிதரவே கோடுதே
வொய்யெனவே தாதைவந்தா னாங்கு. (௨௧)

ஆங்கதுபோ தாரடிமு னாரணங்க ளாகவே
யோங்குநடு வீச னுயர்நூலாப்—பாங்கரோடு
மேற்பல் கிளைகலையா வேங்கையுரு வாகியே
வேற்படைமா வீரனின்றான் வேட்டு. (௨௨)

கானவர்கோ னங்குவந்து கன்னிதனைக் கண்டுகட
மானிணனும் பால்கிழங்கு மாதீங்காய்—தேனினொடு
நிற்றிபிற நல்கித் தினைப்புனத்தார் வேங்கையினை
யுற்றினிது கண்டா னுகந்து. (௨௩)

ஆங்கவன்பா னின்றோ ரவிர்கணியை நோக்கிவியந்
தீங்கிதுமு னுற்றதன்றா லெய்ந்தவிதை—நீங்கண்
முறித்திடுவீ ரென்பார் முதலோடும் வெட்டிப்
பறித்திடுவீ ரென்பார் பரிந்து. (௨௪)

இங்கிவைசொல் வெய்யோரை யேந்தல் விலக்கியெழி
னங்கைமுகம் பாராவேர் நண்வேங்கை—செங்குரலா
ரேனற் புனத்தின்கண் ணெய்தியதென் சொல்லைறதி
வானற் சாதமென்றான் மற்று. (௪௫)

தந்தைமொழி கேளாத் தளர்ந்து வெருவியிது
வந்தவா றோர்கிலனுன் மாயமையா—முந்தைநா
ளில்லா ததுநமா யெய்தி மூளைத்ததெனு
நல்லா னவின்று னயந்து. (௪௬)

என்றரிவை கூறவஞ்சே லீங்கமர்தி வேங்கைமர
மின்றுணையா யிங்கடைந்த தென்னமன்னன்—சென்றிடலுந்
தாருருவ மானதன்மை தானகன்று மானுடநற்
சீருருவங் கொண்டுநின்றான் சேய். (௪௭)

தொல்லுருவங் கொண்டமர்வே ளென்னுமையன் மன்னினன்போ
லல்லுருமைக் கூந்த லருகுநின்று—நல்லருளாற்
கோங்கரும்பை யேய்க்குங் குயத்தாய் நினையடைந்தேன்
பூங்கழலன் றில்லை புகல். (௪௮)

மைதிகழ்வேற் கண்ணின் வலைப்பட்டேற் காருடான்
செய்திடே லன்றிச் சிறைக்கணித்தா—யுய்வுளதோ
நீயா டியசுனையாய் நேர்சார்ந்தாய் வேய்மலராய்த்
தோயா துலைந்தேன் றுயர்ந்து. (௪௯)

புல்லிதுபுல் லீது புனங்காத்தன் மெல்லியனீ
யொல்லை வருதியா லும்பரமர்—வல்லியர்தா
நின்றான் வணங்கி நினைவழுத்த நன்றுதுய்ப்பான்
குன்று வளர்ந்தருவேன் கூர்ந்து. (௫0)

என்றுபல கூறிநிற்ப வீர்வளைவேள் சிந்தைதனி
லொன்று கருத்தை யுறநோக்கி—நன்றெறன்
றிழிகுலமாம் வேட ரியன்மகளு னீரெற்
றழுவவுன்னிச் சார்த றகாது. (௫௧)

சிலையெயினர் பேதையான் றேவர்நீர் வேட்டர்
புலிபசிக்கிற் புற்றினுமோ போயென்—றிலையிடையென்
செந்தா மரைக்கண்ணாள் செப்புமெல்லை யார்ப்பலிபம்
வந்தான் மறவர்தம் மன் (௫௨)

வந்தமைகண் டன்னுண் மனநடுங்கித் தேவர்நீ
ருய்ந்திடுமா றிங்கில்லா தோடுமெனச்—சிந்தைமகிழ்ந்
தாடலுறு சைவநெறி யார்தவமா வேடமுற்றன்
வேடெதிர் சென்றனன்செவ் வேள். (௫௩)

சென்றுமுதிர் மாதவத்தோன் செம்மலெதிரணுகி
நின்றுபரி வோடுதிரு நீறுநல்கி—வன்றிறலு
மைதபுமா வாகையு மற்றுள் ளனவுமே
யெய்திடுக வென்று னினிது. (டுச)

பூதிபரி வோடேல்கு புண்ணியன்சீர் நண்ணிருதாட்
போது பணிந்து புளிஞரிறை—மேதகுமுவ்
வெற்பில் விருத்தரென மேவிவந்நீர் வேண்டியதை
யற்பி னறைதிரென்று னங்கு. (டுடு)

ஆண்டகைகே ணீண்டுமுப் பகலெஞ்ச மானீங்க
வீண்டண் குமரியெய்தி யேவாட—வேண்டிவந்தே
னென்னநன்று நீர்நவின்ற வேய்தீர்த்த மாடிநித
முன்னடுணை யாதிரென்று னங்கு. (டுசு)

இனையதோர் போதுதந்தை யேந்திழைபா லேகித்
தினைகிழங்கு மாவாதி திற்றி—நனிநல்கி
யன்று டுணையா வருந்தவத்தோன் றன்னைவைத்து
மின்னூர் குறிச்சிசென்றான் மீண்டு. (டுஎ)

போனதுகண் டேர்முதியோன் பூவை தனைநோக்கி
நானினியென் செய்வனென நண்பசிக்கு—மானனையா
டேனுங் கனியுந் தினைமாவு நல்கிடப்பெற்
றூநறுநீர் வேண்டுமென்று னங்கு. (டுஅ)

செப்புறுமம் மாற்றந் திருவனையா டான்கேளா
விப்புறவெற் புக்குமப்பா லேழ்வரைபோ—யுப்புறத்திற்
றுன்சுனையொன் றுண்டங்குத் துன்னிநறு நீர்மிசைந்து
பின்வருதி ரென்றாள் பெரிது. (டுகு)

பூவையே யன்னாய் புலர்ந்துழிக நீர்வேட்டேன்
மாவிருத்தன் வெற்பின் வழிதேரேன்—மேவித்
தனைநிகர்தா னேமென்று தாழ்த்திடா தேகிச்
சுனைகாட் டுதியென்றான் சூழ்ந்து. (சுo)

முருக னுரைவினவி மொய்குழன்மா னெந்தாய்
வருகென் றழைத்துமுன்போய் மமை—தருசீர்
வரைகடந்து சென்று மலர்ச்சுனைநீர் காட்டப்
பருகினான் சாலப் பரிந்து. (சுக)

ஆகந் தனைவருத்து மப்பசிநோய் தீர்த்தாய்நீர்த்
தாகந் தனையவித்தாய் தாழ்குழலாய்—மோகந்
தனையவித்தா யாயிற் சரியாய் முடிந்த
தெனதுகுறை யென்று னிறை. (சுஉ)

முதியோ னிரந்திரங்கி முன்குறைகள் கூறி
மதிமயங்கிக் கும்பிடலு மையார்—நுதியயிற்க
ணாறு மலர்க்கூந்த னங்கை நகைத்துயிர்த்துக்
கூறுகின்றான் கோபமேற் கொண்டு. (௬௩)

மேலாய மேதக்கோர் வேடத் தினைப்புனத்திங்
கேலா தனபுரிந்தீர் யார்விழிக்கும்—பாலா
யருந்தினு ராவிகொளு மாலால நீர்மைத்
திருந்தவரா மைய ரியல்பு. (௬௪)

வழுவிறினை காப்பேனை மாசி றவத்தீர்
தழுவமுனித் தாழ்வான சாற்றித்—தொழுதுநிற்ற
னன்றன்று வேடரிது நாடி யறிவாரேற்
றுன்றிடுமே தீது தொக. (௬௫)

நித்துப் புரைமுடியீர் நல்லுணர்வு சற்றுமில்லீ
ரொத்துக்கு மூத்திரிழி வெய்துமெனை—மெத்தவெஃகிப்
பித்துக்கொண் டார்போற் பிதற்றுவீ ரிவ்வேடர்
கொத்துக்குச் செய்தீர் குறைவு. (௬௬)

சேவலாய் வைகுந் தினைப்புனத்திற் புள்ளினுடன்
மாவெலாங் கூடி வளர்குரலைத்—தாமிசையு
நாவலோய் நீரு நடந்தருளு நான்முந்திப்
போவனா லென்றுசென்றாள் பொன். (௬௭)

திருவனையாண் முன்போந் திறனோக்கிச் செவ்வேள்
பொருவிலிபத் தண்ணலையப் போது—வருவையெனச்
சிந்தித் தலுமுடனே சென்றாரி முன்னாக
வந்துற்ற தம்மாவம் மா. (௬௮)

அந்தவம யத்துவள்ளி யச்சமுறீ இயந்தவர்போல்
வந்த முதியோர் மருங்கணைந்தே—யெந்தைநீர்
சொன்னவணஞ் செய்வேனித் தூங்கல்காத் தாள்கென்றுப்
பன்னவரைப் புல்லினளோர் பால். (௬௯)

அந்தமிலாச் சீர்த்தி யறுமுகவன் முன்னொருசார்
வந்து முதுமா மதக்களிற்றுத்—தந்தமொற்றப்
பின்னொருசார் வந்து பிடியிருகோ ணேன்றநின்றான்
மன்னடுவே தூணமென வாய்ந்து. (௭௦)

கந்தனுஞ் செவ்வேள் கடவுட் களிறுதனை
வந்தனைசெய் தேத்தி வழிவிட்டுத்—தந்திடையென்
கன்னியையோர் காவிற் கலந்து கருணைசெய்து
முன்னுருவங் காட்டினனே முன். (௭௧)

பன்னிருதிண் டோளும் பகர்வதனை மோராறுங்
கொன்னவில்லை வேன்முதலாங் கூர்படையு—முன்னரிய
பொன்னூர் மயிலுமாப் பொற்பார் புனக்குறவர்
மின்னாள்கண் காணநின்றான் வேள். (௭௨)

ஐயன் றிருவுருக்கண் டாராத காதலொடு
மெய்யன்பிற் போற்றிமின்னாள் வேலவரே—செய்யெ
னினைதருமாக் குற்றமெலா மின்னே தணிந்தே
யெனையாண்டு கொள்ளுமென்றா ளிங்கு. (௭௩)

உம்மைதனின் மாண்மகளீ யொப்பி னமையனைய
வம்மருன்னர் நோற்றா யதனாலே—யிம்மை
யெழில்கொணினை யெய்தினா மென்றணங்கு தன்னைத்
தழுவி யருள்புரிந்தான் றான். (௭௪)

எங்க ளிறைவ னிறைவி தனைநோக்கி
யுங்கள் புனத்துறைய வுற்றிடுதி—யங்கண்மா
மங்கைநல்லா யாரும் வருவோ மெனநவில
நங்கைவிடை கொண்டுசென்றா ளன்கு. (௭௫)

தேங்குபுகழ் வள்ளி தினைப்புனத்து ளேகியே
யாங்க ளிருக்க வயற்புனத்தார்—பாங்கிவந்து
சிறடிக டாழ்ந்துமனஞ் செப்பொழுக்கஞ் செய்கைமுற்றும்
வேறுறுதல் கண்டாள் வியந்து. (௭௬)

இந்தப் புனமழிய வெங்குற்றாய் செப்புதியென்
றந்தத் தெரிவை யறையவெள்கிப்—பைந்தொடிதா
னப்புறமே யொண்சுனைநீ ராடவே போந்தனளென்
வெப்புறுமா நீரினென்றாள் வேர்த்து. (௭௭)

தானைக்கணை யாமல்வேற் றுனை சிவப்பமெய்
மேனித் திலத்தின் வியர்வரும்ப—மானே
தினையருவிச் சாரற் சிலம்பினீ தோய்ந்த
சுனையெங் குளதென்றாள் சூழ்ந்து. (௭௮)

செப்பு மிகுளை தனைச் சீற்றமுற நோக்கியே
யொப்பி லனை யாயுன்னை யுட்கொண்டேன்—றப்புமொழி
சொற்றாப் கொடியையெனச் சொல்லாடு மெல்லியில்வே
ளுற்றானோர் வேடனென வோர்ந்து. (௭௯)

காந்த ணிகர்கரமுங் கந்தி நிகர்களமு
மேய்ந்த வெழில்குடிகொ ளீர்வனையீ—ராந்தகவி
னூந்துகணை யோடுநெய்த்தோ ரோடவோ ரும்பலிவண்
வுந்ததுவோ சொல்லிரென்றான் மன். (௮௦)

வேழமுத லானவினும் வேணிற்ப நேருமக்காய்
வாழுநருக் கோதலன்றி மற்றுமெது—வேழையே
மூன்று னெதிர்ந்து முகநோக்கிக் கூறுவதே
னென்று னிகுளை யினிது. (௮௧)

ஐயர்தாம் வேட்டைவந் தாட றினைப்புனத்துத்
தையருன் காத்தல் சாதமோ—வெய்யபுன்னெய்
வேட்டுவர்தங் கோலமொத்த மேவிருவர் மையறனைக்
காட்டிடுமென் றேமதித்தாள் கண். (௮௨)

மனத்திலிவை யுன்னியே மன்றுணைவி மற்றைப்
புனத்தடைந்து வைவினவப் போது—சினத்த
கரிவெய் தனமென்ற காளைபோய் மாதே
பரிவொடுகே ளென்றுசொல்வன் பாங்கு. (௮௩)

நேசமுறு சேவீரு நீங்க ளெனக்குமக்கே
யாசையுள நல்குவனு மார்பணிக—ளாசின்றி
முற்றும் புரிமவன் முனியா தருளுமென்று
னுற்ற தலைவ னுகந்து. (௮௪)

அண்ணலுரை தேர்ந்திகுளை யையர் திருவளத்தி
னெண்ணமிதோ வெங்கிளைக்கோ ரென்னிழுக்கு—கண்ணவோ
வந்தவெதயின் பேதை மடமாதை வெஃகுவரோ
வந்தகையோ ரென்று னயர்ந்து. (௮௫)

நாரணமா னல்கமிர்தை நல்லெயினர் செய்தவத்தை
யோரணவும் பெண்ணரசை யெற்கருள்செ—யாரணங்கைப்
பேதையென் றோதுவதே பேதைமை யென்றனன்மா
மேதையே மெய்வடிவாம் வேள். (௮௬)

என்றிறைவன் கூறுதலு மேந்திழையிங் கண்காவற்
குன்றர் வருவார் கொடியரன்று—மொன்றுமெண்ணூர்
காண்பரோ லெம்முயிரைக் காதுவர்நின் றுவதென்
மாண்புடையீர் போமென்றாள் வாழ்ந்து. (௮௭)

சேலனைய கண்ணாய் திருவொடெனைக் கூட்டாயே
லேல வொருகிழியி லீர்வளைதன்—கோலமது
தீட்டிமட லேறிநுந்தஞ் சீறூர்த் தெருவதனி
லோட்டுவனு னுளையென்று னுற்று. (௮௮)

ஆதிசொற்கேட் டாந்துணைவி யஞ்சியே யையருக்கு
நீதி யலமட லூர் நீதனீர்—மாதவியின்
மன்றுருமந் தன்னின் மறைந்திருமென் றின்றருளே
னென் றுமறைந்து சென்று னினிது. (௮௯)

அம்மாத வித்துருமத் தம்மா னுறப்பாங்கி
செம்மான் மகளுள்ளந் தேற்றியொளிர்—மெய்ம்மாச்
சிறைமயில்க ளாடுபுனஞ் சென்றுகொடு போனு
னறைமலர்ப்பூம் பொங்கரின்க ணன்கு. (௯0)

நிற்றலைவி நீவேய் நறும்பூக் கொடுவருவே
னிற்றியிவணென் றிருத்தி னேர்சென்றான்—சிற்றிடையா
ளங்கணிற்பக் கண்டுமகிழ்ந் தாறுமுகன் றோற்றினன்முற்
றுங்கவுரு வோடெதிர்ந்தான் சூழ்ந்து. (௯௧)

வடுத்தடங்கண் வள்ளியெங்கோன் மன்றான் வணங்க
வெடுத்தவனைப் புல்லியின்ப மெய்திச்—சுடர்த்தொடியே
யுங்கைபிறர் நாடுவர்வந் தூர்க்கே குதிநானே
வந்திடுவோ மென்றுசென்றான் வாய்ந்து. (௯௨)

போந்தபினக் காவகன்று பூவைவரப் பூவையறற்
கூந்தறனிற் சூட்டிக் கொடுசெல்ல—வாந்தகைமை
சாற்றிகுனை யோடுநங்கை சாரற் றினைப்புனம்போய்ப்
போற்றி யிருந்தாள் புலர்ந்து. (௯௩)

புனமருவேர் வள்ளி புலர்ந்தே யிருப்ப
வனநடையே யன்று ளளிக்குந்—தினையி
னிருங்குரல்க ளின்றுமுற்றி யேவிளைந்த வேட
ரொருங்கு வந்தகூடினு ருற்று. (௯௪)

குன்றுறைவா ராருங் கொடிச்சி தினைநோக்கித்
தன்று தினை விளைந்த தூங்காமே—யின்றளவும்
போற்றி வருந்தினுய் போயினியுன் புல்லிலெனுச்
சாற்றி விடுத்தார் தக. (௯௫)

குறவர் மொழிந்தசெவி கொண்டணங்கு வைஃவ
லுறுபுன் னுழைந்ததுபோ லுள்ள—மறுகியே
மற்றவ் வயினீங்கி வாழ்புன் குடில்சென்று
ளற்றுணையுந் தானு நலிந்து. (௯௬)

மானினத்தை மாமயிலை மற்றவற்றை நோக்கியாம்
போனசெயல் வேட்குப் புகலீரெனுத்—தானிரங்கிப்
பூவைபோய்ப் புன்குடிலில் புக்குள்ளம் வேறாகி
யேவரொடும் பேசிலளன் பேய்ந்து. (௯௭)

அந்தவம யஞ்செவிலி யன்னைமகட் பாராவேர்
நந்தவுரு வேறாய் நலையுளக்கு—வந்தவகை
யென்னெனவற் பார வியம்பிச் சினமெய்தி
யன்னவளை யிற்செறித்தா ராங்கு. (௯௮)

பின்னனையாள் வேலவனை மேவிப் பிரிந்தமையா
லின்னதன்மை யெய்தினளென் றெண்ணாமே—யன்னவனை
யீண்டித் திருவேகர்வா ரேர்மலைவாழ் னூர்சொலாந்
தீண்டிற் றெனநவின்றார் தேர்ந்து. (௯௯)

தந்தைதம ராதிசவரீர் பிறரீண்டிச்
சிந்தைதளர்ந் தம்மின் செயனோக்கிக்—கந்தற்
கறிமுதியா னோடு மவிர்முருகற் கூவி
வெறியயர் வித்தார் விரைந்து. (௧௦௦)

வெறியயர்போ தார்வேலன் மேல்வந்து தோன்றிப்
பிறிதொன்றன் றூற்றனியாப் பேதை—யுறைபுனத்திற்
றீண்டினாநம் மூண்மலைச்சீர் செய்யினிடர் தீருமென்றே
யாண்டகைவேள் சொற்றா னமர்ந்து. (௧௦௧)

குறிப்புடனோள் வேலண்ணல் கூறுகன்ன மூல
நெறிப்படவத் தெய்வமின்மா னீங்கி—முறைப்படவே
யார்தரவேர் வேளை யகத்துன்னி யாங்கேசேர்
நேர்துமெனத் தாய்துதித்தா ணேர்ந்து. (௧௦௨)

மனையிலம்மை வைக வனசார்கள் செவ்வித்
தினையரிந்து கொண்டுகுடி சென்றார்—புனையிழையை
காணான்புலம்பிவேள் கீர்மஞ்ஞை வெற்பாதி
பேணா வினவும் பெரிது. (௧௦௩)

வாடினான் சோர்ந்தான் வருந்தினன்மை யற்கெல்லை
கூடினான் குற்றடியின் கூர்சுவடு—நாடினா
னேர்முருக னன்யாமத் தேகிச் சிறுகுடிம
னூர்குரம்பை போய்நின்றா னங்கு. (௧௦௪)

பாங்கிகுகற் கண்டு பணிந்துநீ கங்குற்போ
தீங்குறலொல் லாதணங்கு மேங்கினா—ணீங்களிங்கண்
கூட விடமரிது கோதைதனைக் கொண்டகறீர்
நாட்டிக வென்றா ணயந்து. (௧௦௫)

என்றிவையின் கூறி யிறையை நிறுவிப்போய்த்
தன்றுணையைச் சார்ந்து தலைவரிவ—ணுன்றனையே
வவ்விடுவான் சென்றார் வருதியெனச் சீரிஃதென்
றெவ்வியொருப் பாடுற்றா ளோர்ந்து. (௧௦௬)

தாய்துயிலுந் தங்க டமர்துயிலுந் துஞ்சாத
நாய்துயிலு மூர்துயிலு நன்கறிந்து—பேய்துயில்கொள்
யாமத் திருளை யெழிலணங்கைக் கொண்டுசென்று
சேமத் தனத்தினுய்த்தா டேர்ந்து. (௧௦௭)

கந்தபிரான் றன்னையெழிற் கன்னியெதிர் தந்திறைஞ்ச
நந்தெயினர் சேரியின்க ணையேற்கா—விந்தமலர்
நற்பதங்கள் கன்ற நடப்பதே யென்றிரங்கி
யற்பிற் றொழுதுநின்றா ளாங்கு. (௧௦௮)

பின்னிற்ப நற்பாங்கி வேடன் முகநோக்கிக்
கொன்னெயினர் காணிற் கொடுமைசெய்து—மின்னனை
மெய்யடையா ரூர்க்கிவட்கொண் டேகியளித் தாளுமெனக்
கையடையா நேர்ந்தாள் களித்து. (௧௦௯)

நின்றிடையை வேள்கரத்துத் தந்திருவை தானிற்ப
நந்தருள்செய் தேந்திழைநீ நன்றெம்பாற்—சிந்தையன்பில்
வைத்த கருணை மறக்கலம்யா மென்றான்
மைத்த மிடற்றான் மகன். (௧௧௦)

மையார் தடங்கண்ணாள் வள்ளி தனைவணங்கி
மெய்யாரப் புல்லியன்னாய் வெய்துசெல்லென்—றையாரு
மையனொடு கூட்டி யவர்விடுப்ப மீண்டுபுக்காள்
வெய்ய குரம்பை விரைந்து. (௧௧௧)

செங்கதிர்வே லண்ண றிருவுடனே நள்ளிருளி
லங்ககன்று போயோ ரவிர்காவிற்—றங்குமெல்லை
வைகறையாம் போதுசெல மன்றேவி துஞ்சலொரீஇ
மெய்துணுக்க முற்றெழுந்தாள் வேர்த்து. (௧௧௨)

காத லுறுமகளைக் காண்கிலளாய் நாடியெங்குங்
கேதமிலாப் பாங்கிதனைக் கேட்பவல்லாம்—போதிற்
சுரிகுழலு நானுந் துயின்றமைதா னுண்டு
தெரிகிலன்மற் றன்னையென்றா டேர்ந்து. (௧௧௩)

தம்மகளைக் காணாமை தாய்வந்து கூறவினைச்
செம்மறொரு மந்து செயிர்த்துநனி—நம்மனையின்
காவலிகந் தீர்வளையைக் கைக்கொடுசென் றானொருவ
னேவனோ வென்றா னினைந்து. (௧௧௪)

இன்ன புகன்றுதந்தை யெல்வாண் மருங்கசைத்துக்
கொன்னவில்வில் கோலேந்திக் கோற்றொடியா—மின்னைக்
கவர்கள்வ னுற்றவிடங் காண்பனெனச் செல்ல
வவனெயினர் தேர்ந்தா ரது. (௧௧௫)

வேடரெலா மீண்டி விரைந்துபோய் வேந்தனொடு
கூடி யிரலை குறித்தநெறி—தேடினர்சூழ்
பூக்கினர்கா னாடிப் புலம்புக் கடிச்சுவடு
நோக்கினடை தந்தார் நனித்து. (௧௧௬)

இங்கனமன் வேடுவரோ டேய்ந்துசெலப் பாங்கரிலோர்
பொங்கர் தனிற்கரவிற் போந்தநங்கை—யங்கணந்தேர்ந்
தஞ்சி யறுமுகவ னந்தாண் மலர்வீழ்ந்து
நெஞ்சினைந்து சொல்வா ணெடிது. (௧௧௭)

கோலொடுவில் வாண்மழுவாள் குந்தமுத லேற்றெறிவ
ரேல நமைத்துருவி யேகியிந்தச்—சோலையின்பா
லெய்திவந்தா லச்சமுற்ற தென்சிந்தை யென்கொலினிச்
செய்வ தறைதியென்று டேர்ந்து. (௧௧௮)

வருந்தலைநீ வாழிநல்லாய் மால்வரைவெஞ் சூர
னுரந்துளைத்த வேலுளதும் மோர்போர்—விரைந்துநனி
யாற்றவரின் வீட்டுதூர மன்னதனை நோக்கியிரு
கோற்றொடிநம் பின்னென்றான் கோ. (௧௧௯)

குறத்திருமி னின்னவினுய்க் கூரயில்வேற் காளை
புறத்தில் வரக்குறுகிப் புக்கத்—திறத்தைபுற்று
நோக்கிவெகுண் டோலை நோன்மை யுறுபுளிஞ
மாக்கள் வளைந்துகொண்டார் வந்து. (௧௨௦)

குறவர்தங் கோமான் கொடுமெயினர் யாரு
மறிகடல்போ லார்த்தெறுழ்வில் வாங்கி—யெறிசுடரைக்
கார்மறைத்துப் பெய்தாங்குக் காண்ட முறைமுறைநு
யோர்குகனைச் சூழ்ந்துகொண்டா ருற்று. (௧௨௧)

ஒட்டலராய்ச் சூழ்ந்தங் குடன்றுசமர் செய்துவெய்யோர்
விட்டவெங்கோன் மென்மலரின் வித்தகன்மேற்—பட்டிடலு
முட்டியங்கி மாதுநம்மே லுய்த்தவரை வேலினின்னே
யட்டிடவே வேண்டுமென்று னாங்கு. (௧௨௨)

என்றிவையோர் மாதுரைப்ப வெங்கையரு ளாற்பாங்கர்
நின்றகொடிச் சேவ னிமிர்ந்தார்ப்பக்—குன்றவர்த
மாண்டகையு மைந்தருமற் றுருமே பொன்றினராய்
மாண்டவனி மேல்விழுந்தார் மற்று. (௧௨௩)

தந்தைதமர் வீழ்ந்திறந்த தன்மைகண்டு வள்ளியம்மை
சிந்தை பதைத்திரங்கச் செங்கதிர்வேற்—கந்தன்
றுணைவியன்பு காண்பான் றுருமமகன் றேகப்
பிணைமகளு மேசென்றாள் பின். (௧௨௪)

செல்லவே நாரதப்பேர்ச் சீர்முனிவ னோர்வந்து
வல்லிகுகற் சூழ்ந்துசெயல் வாய்ந்தவெலாஞ்—சொல்லெனவே
டந்திடையைக் காண்டொட்டுத் தானெயினர் தம்மையட்டு
வந்தளவுஞ் சொற்றான் மகிழ்ந்து. (௧௨௫)

பெற்றாங்கை தன்னைப் பிறவா முறவினரைச்
செற்றகற்றிச் சீர்த்தவருள் செய்யாமற்—பொற்றொடியைக்
கொண்டு வாற்றகுமோ கோமா னெனமுனிவ
னெண்டலைகையஃ தாமென்று னேய்ந்து. (௧௨௬)

கம்மே லெழுபொழிலிற் கந்தவேண் மீண்டருளி
யம்மே வணங்கினைப்பார்த் தார்ப்பினொடு—நம்மேற்
பழிப்படுவெம் போராற்றிப் பட்டகிளை யெல்லா
மெழுப்புதிநீயென்று னினிது. (௧௨௭)

சீருயிருற்கள் சிந்தித் தெழுவிழுந்த நங்கேளிர்
யாரு மெழுதி ரெனவருளப்—பாரின்கட்
டுஞ்சுகின்றோர் தொல்லுணர்வு தோன்றவெழல் போற்றமரோ
டஞ்சவார் கோனெழுந்தா னங்கு. (௧௨௮)

எழுமமயத் தெய்வபெருமா னின்கருணை வெள்ளம்
பொழிமுகமோர் மூவிரண்டும் பொற்றோட்—கெழுவரையி
னாறுமயின் முற்படையு மாகியுருக் காட்டவன்னார்
வீறுமலர்த் தாள்பணிந்தார் வீழ்ந்து. (௧௨௯)

ஆறெயினர் சேரி யளித்திடுநீ யேயெங்கள்
சாரிகையை வெளவிக் கரவிருஞ்—சீரழித்தே
தீயபழி நாட்டினையீன் செல்வர் கொளவிடுந்தைத்
தாயருத்தி னார்தடுப்பர் சார்ந்து. (௧௩௦)

ஆங்கதுதா னிற்க வணங்கைவிழை வான்வெளவி
நாங்களுண ராவண்ண நங்காவ—னீங்கியெந்தா
யொல்லை யிவட்கொணர்ந்தா யூர்க்கேகி வேட்டனன்முன்
செல்லுதிநின் னூர்க்கென்றார் தேர்ந்து. (௧௩௧)

யாமன் முதலோர்சொன் மன்றன் மொழிக்கிசைந்தே
கோமனருள் செய்தனையுங் கொண்டிசையாழ்த்—தூமுனிவன்
றன்னொடுபூங் காநீங்கித் தாண்மலர்க ணோவவரை
மன்னெடுஞ்சீ றூர்புக்கான் வாய்ந்து. (௧௩௨)

தந்தை யொடுதமருஞ் சண்முகன்பாங் கேகிமகிழ்
சிந்தையுற நோக்கிச் சிலையினரைக்—கந்தனே
நந்த மனைக்கவர்ந்தா னம்மொழியாற் றன்மணப்ப
வந்தனனீங் கென்றார் மகிழ்ந்து. (௧௩௩)

செப்பவர்சொற் கேட்டுச் சிறுகுடியின் மேவுற்றோ
ரொப்பில் சினநா னுவகையுற்று—நிற்பமன் னூர்த்
தன்னகத்திற் சண்முகனைத் தாழ்குழலோ டெய்த்ததண்மேன்
மன்ன விருத்தினன் மற்று. (௧௩௪

அன்னபோ தாயிருதோ ளண்ணலய லாரணங்கை
மன்னருளி னேருக்க மருவெயினை—மின்னனையார்
செய்கோல நீங்கிமுன்னைத் தெய்வதமாக் கோலமுற்ற
தெய்கோல் விழியருட்க வேய்ந்து. (௧௫௫)

தந்தையொடு தாயுந் தமருஞ் செவிலியுமோர்
நந்து மிருளையுட னங்கையருஞ்—சந்த
விருந்தமகள் கோலங்கண் டிம்மினுற்ற தெம்மாற்
பெருந்தவமே யென்றார் பெரிது. (௧௫௬)

அந்தநல்ல வேலைதனி லன்பா ரிறவுளர்கோன்
கந்தபிரான் பாணியின்மின் கையைநல்கி—நந்தவமா
மாதை நயப்பினின்று நன்கீந் தனன்கொள்கென்
றோதுபுனற் றாரையுய்த்தா னுற்று. (௧௫௭)

நற்றவத்தின் மாண்டசீர் நாரதனக் காலைதனிற்
கொற்றமுறு வேலோன் குறிப்பினங்கி—மற்றை
யறைகலனுந் தந்துமண மார்சடங்கு நாடி
மறைவிதியிற் செய்தான் மகிழ்ந்து. (௧௫௮)

அந்த வமயத் தமரண்டர் சூழவிண்ணிற்
றந்திடையோ டுற்றுமணந் தான்கண்டு—நந்தருள்செய்
தங்கனிற்ப மான்முதலோ ராய்மலர்தூ யேத்தினார்
புங்கவனை யன்பு புரிந்து. (௧௫௯)

அறுமுகமா வள்ள லதுநோக்கிச் சீறா
ரிறைபுமுனை ராவண்ண மீன்றோர்—நறைமலர்த்தாள்
கைதொழுதே யேனையர்க்குங் காண்முறையிற் கூர்ந்தவருள்
செய்தனன்மா வோகை சிறந்து. (௧௬௦)

அங்கந்த வேலை யயனு மரியோடு ·
மங்கையொரு பாகன் மறைந்தேகத்—துங்கமுனி
செய்த சடங்குமுற்றத் தேன்மொழியோ டத்தனைத்தா
னுய்திறத்திற் போற்றினு னுற்று. (௧௬௧)

மற்றந்த வேலைதனின் மாதுலனோர் வள்ளிதனைக்
கொற்றவேல் வேண்மணஞ்செய் கோலங்கண்—டுற்றகண்க
டம்மா லுறுவபெற்றேன் றுனென்றான் கோனுவகை
யம்மா பெரிதறைவா ரார். (௧௬௨)

குன்றங் குலவுங் குறவர் குலமகளிர்
மன்றன் மருமகனு மன்மகளு—மென்று
மிலகுமின்னே போல்வாழ்க வென்றுசி கூறி
மலரறுகு தூர்த்தார் மகிழ்ந்து. (௧௬௩)

செந்தினைமா தேனந் செழுங்கனிக ளங்காய்கள்
கந்தம் பிறவும் கலத்திலிட்டுப்—பைந்தொடியும்
வீறுடைய நீயு மிசைதியென வெவ்வெயினர்
கூறவருள் செய்தான் குகன். (௧௫௬)

வில்லெயினர் காதலியும் வித்தகனுங் காதலனு
மில்லுணவு துய்த்தா ரினைத்திடியல்—குல்லையந்தார்
மாயனைய ளாகியும்பர் மாணவர்பான் மற்றிருபா
லாயவைபா லெங்குமுள்ள தார்ந்து. (௧௫௭)

அனையபோ தாறிருதோ ளண்ணலெழுந் தாங்கே
தனையயில்வான் வில்வேந்தை நோக்கி—வனிதையுடன்
சென்றியாஞ் சீரார் செருத்தணிகை வெற்புறைது
மென்றனன் றென்றிசைந்தா னேய்ந்து. (௧௫௮)

தாய்செவிலி பாங்கியெழிற் றையறனை நோக்கிவிற
லெய்வான்பின் செல்லுதியோ வென்றுதழீஇ—யாய்தருசீர்
நந்திபல் லாசி நவிலவே னோடேகச்
சிந்தைதனிற் கொண்டா டிரு. (௧௫௯)

தேவியுட னங்ககன்று சேய்குறவர் காவலநகூடிக்
கோவியனற் சீர்த்தி கொளச்செலுத்தி—மேவுசெனை
வாங்கிருத்தி வள்ளி யசலமிகந் தந்தணிகை
யோங்கறனைச் சார்ந்தா னுகந்து. (௧௬௦)

செச்சையணி சேந்தன் செருத்தணிமா வெற்பினும்பர்
தச்சன்மூன் றாற்று தனிநகர்புக்—கிச்சகத்தி
லாருயிர்கள் யாவுமுய்ய லங்குறைவர் நங்கையொடு
சீரமர வீற்றிருந்தான் றேர்ந்து. (௧௬௧)

அந்த வமயத் தவிர்வள்ளி நாயகிவேற
கந்தவேள் காமர் கழல்பணியா—விந்தவெற்பின்
மன்னியற்கை யாவும் வகுத்தியெனப் பேரருளி
னின்னன நன்கோது மிறை. (௧௬௨)

சென்மலைநேர் வெஞ்சூர்ச் செருத்தொழிலி ரேறுடையினர்
வன்மலினும் யாந்தணிந்திவ் வாயுறலான்—மின்செய்
செருத்தணியென் றோர்நாமஞ் செப்பிடவெய் திற்றே
திருத்தகுசீர் மேவிச் சிலம்பு. (௧௬௩)

மன்றனைவி பூசை மகிழ்ந்தவனோ டசனொர்மா
நன்றமருங் காஞ்சி நகரனுக—னின்றிடலா
லந்தமுற வேசொல்ல லாந்தகைத்தன் றேர்குடிகொ
ளிந்தவரைத் தூய்மை யினிது. (௧௬௪

நகரத்துட் காஞ்சி நகர்சிறக்கு மாபோற்
சிகரத்து ளித்தணிகை சீர்த்த—தகமுகந்தே
கோடியம்பிக் கூர்வேய்ங் குழலூதி யாழிசைத்துப்
பாடிநன்ன ராடுதுமிப் பால். (௧௬௫)

மந்தரமா மேரு வரைகயிலை யாதியைப்போ
லிந்தவெற்பி லோகை யெமக்குண்டே—யந்தார்சோன்
வைகலுமே சாத்துதற்கிம் மன்சுனையிற் காவிமூன்
றெய்துறவே வைத்தா னெமக்கு. (௧௬௬)

காலையிலோர் பூவெங் கதிருச் சியிலோர்பூ
மாலையிலோர் பூவிவ் வரையின்மே—னீலமூன்
றென்று மலரு மிறும்பூ துடைத்தெனினிக்
குன்றின்சீ ராருரைப்பார் கூர்ந்து. (௧௬௭)

இந்த வரைதொழுவோ ரெய்ந்த பவமேகுஞ்
சிந்தையினன் போடிச் சிலம்பிற்போய்—முந்தநின்ற
விச்சுனையின் மூழ்கிவந்தே யெம்மை வழிபட்டோர்
மெச்சுபதம் வாழ்வார் விழைந்து. (௧௬௮)

அஞ்சுவைக லிந்த வசலமடைந் தெம்மடிக
டஞ்சமென வுன்னியே தாழ்தவத்தோர்—நெஞ்சமதி
னுடுபல போக நனிசிறப்பி னெஞ்சலிலோர்
வீடுபே றுற்றிருப்பர் வேட்டு. (௧௬௯)

தேவ ரெனினுந் திகழ்முனிவ ரேனுமற்
றேவ ரெனினுமிவ்வெற் பேய்ந்துதொழார்—காவரங்க
டம்மிற் கடையரே தம்பவங்க டீர்தருமோ
வம்மவலஞ் செய்யினும்பா ரார்ந்து. (௧௭௦)

பாதகஞ்செய் தாரேனும் பல்பவஞ்செய் வாரேனு
மாதரங்கொண் டேதணிகை யார்வரே—லோதவர்தாஞ்
சேவிற் பொலியயன்மா றேவரினு மேதக்கோர்
யாவற் றினுமிக்கோ ரீங்கு. (௧௭௧)

உற்பலமா வெற்புறைவோ ரோர்தருமஞ் செய்யிலது
பற்பலவா யோங்கும் பவஞ்செய்தாற்—சிற்பமதா
யொன்றதாய்த் தேய்ந்திடுமிங் குன்னிதன்றி யற்புதங்க
டுன்றனந்த கோடியுண்டு சூழ்ந்து. (௧௬௨)

என்றிவைவேள் கூற வெஃகினர்தம் மின்வினவி
நன்றென் றுவகையுற்று நானிலத்தார்—குன்றிற்
சிறந்தவிந்த வெற்பின் றிறனின் னருளா
லறிந்துய்ந்தே னென்று ளமர்ந்து. (௧௬௩)

இந்த வரையொருசா ரீரா றுதோளிறைமான்
றந்த வணங்கரசுந் தானுமா—னைந்துருவி
லோங்குருவொன் றாகமத்தா றுய்த்தருச்சித் தேவேண்டி
யாங்கருளும் பெற்றா னமர்ந்து. (௧௬௪)

அருத்தியொடு சென்றா னானைவழி பட்டாங்
கொருத்தியுடன் வைகியெங்கோ னோர்நா—டிருத்தணிகைச்
சந்தவெற்பி னின்றே தயங்குவெள்ளி மால்வரைப்பாற்
கந்தவெற்பிற் சென்றான் களித்து. (௧௬௫)

கந்தவெற்பிற் சென்றினவல் காய்கதிர்வீ மானமொரீஇ
வெந்தகைய பூதர் வியந்தேத்த—வந்தளிபோ
யானைமகள் வாழு மெழின்மந் திரம்புக்கான்
மானைமக ளோடு மகிழ்ந்து. (௧௬௬)

சைவத் தனிமுதற்சேய் தன்வரவு நோக்கியே
தெய்வப் பிடிவந்து சேவிக்க—வைதி
னனியார மார்புறவே னன்றெடுத்துப் புல்லித்
தனியார் துயர்தீர்த்தான் றான். (௧௬௭)

அன்னபொழு தங்குவள்ளி யண்டர்கோ னாரணங்கு
பொன்னடிக டாழப் புரிந்தெடுத்து—மின்னனையாய்
துற்ற தமியளாய்த் துன்னிடுவேற் கோர்துணையி
னுற்றவா நன்றென்று ளோர்ந்து. (௧௬௮)

செங்கதிர்வே லண்ண றிருவனையா மாதரொடு
வெங்கணரிப் பீடிகைமேல் வீற்றிருந்தா—னங்கமர்ந்த
சாலையிப மாதவளைக் கண்ணுற் றிவள்வரவை
யேல வுரைத்தியென்று ளிங்கு. (௧௬௯)

ஏண்டருமால் பானீ ரிருவருமே தோன்றினீர்
யாண்டொருமுந் நான்களவு மெம்மொழிற்றோள்—வேண்டிநின்றே
யொண்மா தவம்புரிந்தீ ரும்மையெய்திச் சேருதும்யாம்
விண்பா ருறுதிரொன்றா மேல். (௧௭0)

சொன்ன முறையினையே தூக்கி யிருவருளு
முன்ன மருவியசீ மொய்ம்புடைய—பொன்னகராண்
மன்னன் மகளாய் வளர்ந்தா யதுபோதி
லுன்னை மணந்தா ருவந்து. (௧௭௧)

ஏக்கிளர்கண் மாது னிளையளிவள் சொல்விளைவு
தூக்கியியன் றீமூழ்கித் தொல்வடிவ—நீக்கியே
யுள்ளிற் றிகழுருவத் தோடெழீஇ வள்ளிவெற்பிற்
றெள்ளிதினோற் றங்கிருந்தா டோர்ந்து. (௧௭௨)

சென்னிலவவ் வெற்பிற் சிவமுனிவ னோற்புழியோர்
பொன்னினொளிர் மானொன்று போந்துலவ—வன்னதனைக்
காதலொடு நோக்கவன்றன் கர்ப்பமது மேவவிந்த
மாதக் கருவிலுற்றாள் வாய்ந்து. (௧௭௩)

மானிவ் வணங்கை வயிற்றினிடை தாங்கியே
யானதோர் வள்ளி யகழ்பயம்பிற்—றானளித்துப்
போகவங்குக் கானவர்கோன் பூவையுடன் கண்டெடுத்தே
யேகிவள்ளி யென்றனன்பே ரேய்ந்து. (௧௭௪)

மன்னெனயினர் மாதாய் வளருமெல்லை யாமவள்பாற்
றன்னியும்வேட் கையுரைத்துத் துன்புற்றும்—பன்னியுஞ்சீர்
மாயைபுரிந் தோர்வனத்திம் மாதைகென்னல் வேடர்நக்க
வேயமணஞ் செய்தே யினிது. (௧௭௫)

அங்க னகன்றிவளோ டார்தெய்வக் குன்றகம்போய்த்
தங்கியோர் சில்பகன்மைத் தாழ்குழலா—யிங்குவந்தே
மென்றிவைவேல்வீர னியம்பவிய மாதினாய்
நன்றெனவே யொன்றுசொல்லா ளன்கு. (௧௭௬)

தொல்லையின் மாயவன்பாற் றோன்றிவளு நானுமிகந்
தெல்லையில் கால மிருந்தேமை—யொல்லையி
லம்மா விவண்கூட்டு னுண்டகைக்கி யாம்புரியுங்
கைம்மா றிலையென்றாள் காண். (௧௭௭)

மான்றனையை யானை மகள்சொல் வினவிமுன்னாள்
யான்றங்கை யாகுநினக் கீதலினஞ்—ஞான்று
மிடைந்தே யிளையளாய் மேவியுய்ந்தே னின்னை
யடைந்தே னளித்தியென்றா ளாங்கு. (௧௭௮)

மன்றற் குறமகளிம் மாற்ற நவின்றுதெய்வை
தன்றிருத்தா டாழத் தழுவிக்கொண்—டென்றுணையு
மற்கரிய கண்டன்சே யாருளு நான்பெற்றே
னெற்கரிய தேதென்றா ளிங்கு. (௧௭௯)

இந்திரன்றன் மாது மெயினர்தம் மாதுமிவ்வா
றந்தரமின் றன்பி னளவளாய்ச்—சிந்தையுயிர்
செய்கைசிறப் பொன்றாய்த் திகழ்மணமும் பூவும்போ
லுய்கவுல கொத்திருந்தா ரூற்று. (௧௮௦)

பாலுடனே தேன்கலந்த பான்மையென யானைமான்
சால வுதவு தனையமா—லேலவே
போதவழி பாடியற்றிப் போற்றவொளிர் வேற்றடக்கை
நாதனங்கண் வீற்றிருந்தா னன்கு. (௧௮௧)

மாலவுண ராழுருப்ப மாயக் ககனமுறு
தால நனிதழைப்பச் சைவமல்கச்—சால
விழையவிரு மஞ்ஞை மிளிர்வே லருண்மா
மழைபொழியு மென்று மகிழ்ந்து. (௧௮௨)

சேவலும்வா மான்றேருஞ் செய்யமணித் தோகையுஞ்சீர்
மேவு தகருமொளிர் வேலுமற்ற—யாவுமண்ண
லூடுபணி நன்கியற்றி நற்கோவின் முற்கோலி
மாடுநணி வீற்றிருந்த வாய்ந்து. (௧௮௩)

ஆறிருதோள் வாழ்கவரு ளாறுமுகம் வாழ்கவெற்பைக்
கூறிடுவேல் வாழ்க கொடிவாழ்க—வேறிடுமோ
வீரமயில் வாழ்கவிரு மெல்லியர்கள் வாழ்கவன்பார்
சீரடியர் வாழ்க சிறந்து. (௧௮௪)

தியங்குறுசொன் மோனை தளையெதுகை நாடி
மயங்குறுபோ தென்றன் மனத்துள்—வயங்கறிவாய்த்
தோன்றாமை தோற்றுவித்த தோன்றறன்சீர்த் தொல்காதை
சான்றோரே சொற்றே னயந்து. (௧௮௫)

கொற்றவருள் கூர்சீர்க் குமரவேண் மாக்கதையைச்
சொற்றவருஞ் சூழ்குநருந் தோமறவே—கற்றவருங்
கற்க முயல்பவருங் காதலொடு கேட்பவரு
நற்கதியி லெய்துவரே நன்கு. (௧௮௬)

ஒன்று மிரண்டா யொருளிர்மூன்றும் நாலைந்தாய்ப்
பொன்று வுயிர்க்குயிராய்ப் பூரணமாய்—நின்று
னெவன்று னெவர்க்கு மிறைவனு மேத்தி
யவன்று ளடைதுமன்றே யாங்கு. (௧௮௭)

---

கற்றுணர்ந்தோன் போல்யான்செய் கந்தபுராணவெண்பா
முற்றுணர்ந்தோன் றன்னருளான் முற்றிற்று—மற்றதன்பா
வித்தொகையா மையா யிரத்தறுநூற்றறு
பத்தைந்து நேரிசைவெண் பா.

கூர்வளக்கச் சிக்குமரக் கோட்டக் குமரனருள்
சார்க்கச்சி யப்பசிவா சாரியர்செய்—சீர்கொள்
விருத்தந்தன் கந்த புராணத்திவ் வெண்பாக்
கருத்தன்றி வேறன்று காண்.

வள்ளியம்மை திருமணப்படல முற்றிற்று.

ஆ. திருவெண்பா ௧௧௫௬

தக்ஷகாண்ட முற்றிற்று.

---

ஆ. காண்டம் ஆறுக்குத் திருவெண்பா ௫௬௯௫

---

கந்தபுராண வெண்பா.

முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

வேலுமயிலுந்துணை.